# பெரிய எழுத்து

# சக்கிரமாலை.

# இக்குப்பட கிஸ்ஸா

விற்குமிடம்:
பி. முஹிியித்தின்
பிச்சை சாஹிபு,
புத்தகம், படம் வியாபாரம்,
நெ. 190, செட்டித்தெரு,
கொழும்பு.

1930

உ

கடவுள் துணை.

தெய்வ சிரோன்மணியாகிய
புகழேந்திப்புலவர்
திருவாய்மலர்ந்தருளிய

# அபிமன்னன்சுந்தரிமாலை.

இஃது

சென்னை சூளை,
M. R. சத்தர்சிங் அவர்களால்
பார்வையிட்டு,




ம-ள-ள-ஸ்ரீ, திரு[illegible]த்திபுரம்,
சி. எ. செங்கல்வரா[illegible] நாயுடவர்களால்
த[illegible]மது
கர்ஜன் அச்சுக்[illegible]டத்திற் பதிப்பிக்கப்பட்டது
மதராஸ்.

இதன் விலை[illegible] 1930. [illegible]

உ

கடவுள் துணை.

# அபிமன்னன் சுந்தரிமாலை.

———(*)———

## விநாயகர் தோத்திரம்.

வெண் செந்துறை

அத்திமுகவா அரனார்திருமகனே
சத்தியின்புத்திரனே சரிந்தவயிற்றோனே
அரவணியும்வேணி அயனார்திருமகனே
நீரணியுங்கங்கை நீள்சடையோன்புத்திரனே
வானவர்கள்பூசைசெய்யும் மதயானைக்கண்ணனே
ஆனைமுகத்தோனே ஐங்கரனே நின்சரணம்
ஞானக்கண்ணே உமையாள்திருமகனே
மூவருக்குமுன்பிறந்த மூர்த்தியேமுன்னடவாய்
தேவர்க்குத்தேவா தெவிட்டாததெள்ளமுதே
அபிமன்னன்தன்கதையை அடைவாகயான்படிக்க
கலிமுன்னேவந்துதவும் கற்பகமேமுன்னடவாய்
சுந்தரியின்கல்யாணம் சொந்தமாய்ப்பா[illegible]
எந்தனுடனாவில் இருந்தருளும்விநாயகனே
பாட்டினிசையறியாப் பாலனுரைத்ததமிழ்
ஏட்டினிடமாக இருந்தருளும்விநாயகனே
சிறுபெண்கள்வேண்டி தீம்பால்மிகப்படைப்பார்
அறிவுடையோர்வேண்டி அறியதவங்கள்செய்வார்
மன்னவர்கள்வேண்டி மலர்பூசைசெய்வார்கள்
எனக்குமொருமுகமாய் இரங்கும்பெரியோனே
சொர்க்கம்போவோர்க்குத் துணையாயுதவிசெய்வீர்
வர்க்கம்பலகாரம் வாங்கும்பெரியோனே
அப்பமெழுநூறும் அதிரசங்கள்தொண்ணூறும்
செப்பரியவெள்ளுருண்டை சேரநூறாயிரமாம்
கா[illegible]லபச்சரிசி பதினாயிரக்கலமாம்
[illegible]தும் கூடத்தோடே சர்க்கரையும்
சந்தி[illegible] தெவிட்டாவமுதமுடன்
இதன் வி[illegible]ளி சீனிப்பலாப்பழமும்
[illegible]முக்கட்டை திரளானபாணக்கு

மாங்காய்விளாங்கனியும் மாதுளநற்கனியும்
ஓங்காரமாகவே ஒளியான ஐங்கரற்கு
பாங்காகநீர்சொரிந்து பக்தியுடனேங்கரன்முன்
தீங்கில்லாச்சாம்பிராணி தீபதூபங்கொடுத்து
அபிமன்னன்கதையை அன்பாகயான்படிக்க
வந்தருளவேணுமையா மாயவனூர்தன்மருகா
ஓராணைக்கண்ணே யுமையாள்திருமகனே
காராணைக்கண்ணே கணபதியேமுன்னடவாய்

## முருகர் தோத்திரம்.

சீரான ஆறுமுகனே சிறப்புடையவல்லவனே
மாயோன்மருகோனே வள்ளிமணவாளா
கந்தனேயெந்தனிட கவலையெல்லாந்தீர்த்தோனே
அபிமன்னன்மாலைதனை ஆறுமுகனேயான்பாட
புத்திகளை நீகொடுப்பாய் புகழ்ச்சியாயான்பாட

## கதையின் வரலாறு.

பஞ்சவர்களைவரும் பாராளும்நாளையிலே
அஞ்சலுடன்பெருமாளு மவனியெல்லாமாளுகையில்
வஞ்சனை[illegible]செய்து மன்னன்திரியோதிரனும்
அஞ்சாதமன்னவர்கள் அரசாளும்நாளையிலே
மாயன்பெருந்தேவி மங்கையலர்மேலும்
ஆணழகன் அர்ச்சுனன்தன்தேவி
பெருமாளுடன்பிறந்த பெண்ணும்சுபத்திரையாளும்
துவாரகாபுரிதனிலே சூதாகத்தானிருந்து
தலைமுழுகப்போக தாமிருவாவருகையிலே
அந்தக்குளத்தருகே ஆலவிருட்சமுண்டு
விருட்சத்திற்கருகாக விக்கினருந்தானிருக்க
மாடுகள்மடக்கிமாயவன் மந்தையிலேவந்துநிற்க
சூட்சமமாய்வார்த்தையொன்று சொன்னாள்சுபத்திரை
அண்ணனிடதேவியரை அவளைமிகவழைத்து
மதனியேநாமிருவர் வந்தோம்தலைமுழுக
இந்த[illegible]முழுக்குடனே ஈஸ்வரனூர்தன்செயலால்
அ[illegible]மலுமங்கையரே ஆண்[illegible]ந்தாலுன்வயிற்றில்
[illegible]னுக்கென்மகளை உகந்துகொடுப்பேனுன்
[illegible]ற்றிலாண்பிள்ளை உன்வயிற்றில்பெண்பிறந்தா[illegible]

என்மகனுக்குன்மகளை ஈன்றிடவேணுமென்று
இப்படிக்குச்சம்மதியோ என்றாள்சுபத்திரையும்
அப்படியேசம்மதித்தாள் அலர்மேலுமங்கையரும்
நிச்சயமாய்ப்பேசி நிதானமிட்டாரந்நேரம்
சுபத்திரையும்லட்சுமியும் சொல்லிசபதமிட்டார்
இந்தசப்தம் இனிதப்பிப்போகாது
சந்தோஷவார்த்தைக்கு சாட்சிவைக்கவேண்டுமென்றார்
இருவருஞ்சம்மதித்து இசைந்தார்கள்சாட்சிவைக்க
ஆலடிபிள்ளையாரே ஆனைமுகத்தோனே
இருவரும்நாங்களிசைந்துசொன்னவார்த்தைக்கு
ஐயனார்தன்னுடனே ஆலமரம்சாட்சியென்றார்
ஆகாசவாணியரும் ஆட்டிடையா நீசாட்சி
பூலோகமாதாவே பூமியம்மா நீசாட்சி
ஐந்துபேர்சாட்சி அடைவாகவைத்தார்கள்
நாத்தியரும்நாத்தியரும் நலமாய்குளக்கரையில்
வார்த்தைகள்தான்பேசி வலக்கைகள்தான்போட்டு
ஆணையுஞ்சத்தியமு மதற்கேற்றபாத்திரமும்
பூணிக்கையாகவேதான் பேசியவர் நிதானமிட்டார்
சம்மந்தம்பேசியங்கே சந்தோஷம்தானாகி
தலைமுழுகவேணுமென்று தாமிருவரப்போது
சுபத்திரையும்லட்சுமியும் சொகுசாய்தலைமுழுகி
விபூதிபூசியவர் வெண்ணீறுதானணிந்து
மாயனெனும் அண்ணனை மனதிலேதானினைத்து
தோத்திரங்கள்பண்ணி துதித்தாள்சுபத்திரையும்
தங்கைக்குபதேசந் தான்றந்தார்மாயவரும்
ஆயன்பெருமாளும் அப்படியேநானிருந்தார்
செப்பமுடன்போற்றிசெய்து சிவனைத்தோத்தரித்து
என்-தங்கைசுபத்திரைக்கு சந்தானங்கொடுவென்று
மகாதேவர்தன்பாதம் வணங்கியேகேட்கலுற்றார்
அரனார்மிகநகைத்து ஆயன்முகம்நோக்கி
உம்முடையதங்கைக்கு சந்தானமில்லையாயென்றும்
மைந்தரும்மில்லையாயென்று மகாதேவர்தானுரைத்தார்
அப்போதுமாயவனார் அரனாரைபோற்றிசெய்து
புதினாறுதன்வயது பாரிலேதானிருக்க
உண்மையுடன்பாலனைத்தான் உதவவேணுமென்றார்
அதினளவுசக்கிரத்தை அடைவாகவைக்கிறேன்

ஆண்பிள்ளையும்பெண்பிள்ளையும் அனுக்கிரகம்பண்ணு
என்றுசொல்லிசக்கரத்தைக் கொடுத்தார்பெருமாளும்
அடகுக்கடவாய் அபிமன்னன்தான்பிறக்க
அபிமன்னன்தேவியென்று அலர்மேலுதன்வயற்றில்
பெண்ணுபிறக்க பெருமாள்வரங்கேட்க
ஆதிசிவன்கையால் ஆனவரம்பெற்றுவந்தார்
இப்படியாயங்கே யிசைந்துவந்தநாளையிலே
துவாரகாபுரியைவிட்டு சுபத்திரையுமப்போது
ஆனகுந்திபட்டணத்தே அந்நேரம்போய்ச்சேர்ந்தாள்
இந்தவிசேஷமெல்லாம் இளங்கொடியாள்சொன்னுளே
நல்லதென்றருச்சுனரும் நாயகியுந்தானினைத்தா
அதுவேகுளியாகி அருச்சுனனூதேவியற்கு
சுபத்திரையாள்தன்வயிற்றில் சுவாமிகிருபையினுல்
கெற்பந்தரித்தது கிளிமொழியாள்தன்வயற்றில்
அலர்மேலுமங்கையற்கு அப்போதுதரித்ததுகாண்
அர்ச்சுனர்தேவிக்கு ஐந்திரண்டுதிங்கள்சென்றதுகாண்
பத்துமாதஞ்சென்றபின்பு பாலன்பிறந்தானே
அபிமன்னன்பிறந்த ஐந்துதிங்கள்முன்பாக
ஐவர்வனவாசம் போனுர்களப்போது
வனவாசம்போனபின்பு வஞ்சிசுபத்திரைக்கு [ம்
பாண்டவர்கள்பூஷணங்கள்கண்டாராம்பெட்டியெல்லா
கணக்காகவப்போது களஞ்சியத்திற்போட்டார்கள்
பத்திரமாய்த்தான்கொடுத்து பயணமாய்ப்போவார்கள்
பஞ்சவர்கள்நாடுவிட்டு வனவாசம்போனபின்பு
ஐந்தாம்மாதத்திலே அபிமன்னன்தன்னுடனே
அண்ணனுடன்மாளிகைக்கு வந்தாள்சுபத்திரையும்
வண்ணமுடனண்ணனிட மலர்ப்பாதந்தெண்டனிட்டு
மருமகனபிமன்னனும் மலர்ப்பாதந்தெண்டனிட்டு
சாஷ்டாங்கதெண்டனிட சுவாமியெடுத்தணைத்தார்
அபிமன்னராஜாவே ஐயாவேவந்தீரோ
வந்தீரோவந்தீரோ மருமகனேவந்தீரோ
மருமகனைத்தான்வாழ்த்தி வரிசையுடமையெல்லாம்
பிரியமுடன்பூட்டி பூரித்தார்மாயவரும்
அலர்மேலுமங்கை அரண்மனைக்குப்போமென்றுர்
சேனையுடங்கியுஞ் சென்றுள் திருமனைக்கு
அண்ணனிடதேவியரே அலர்மேலும்ங்கையரே

நன்றாயிருக்கிறீரோ நாயகியேயென்றுசொல்லி
கட்டியணைத்துக் கனிவாயைமுத்தமிட்டு
ஒருவர்க்கொருவர் உகந்துவுறவாடி
நாத்திமுகம்நோக்கி நாயகிலட்சுமியும்
பெற்றுபிழைத்தீரோ பொற்கொடியேநாயகமே
ஆண்பிள்ளைபெற்றீரோ ஆசையெல்லாந்தீர்த்தீரோ
என்றுசொல்லிபேசி இருந்தாரேயிருவருமாய்
அபிமன்னராஜனுக்கு அனேகவுடைமையெல்லாம்
சரசமுடனப்பொழுது தரித்தாளேலட்சுமியும்
இப்படியாய்தான்மகிழ்ந்து இருக்குமந்தநாளையிலே [ண்
அலர்மேலுமங்கையற்கு ஐயிரண்டுதிங்கள்சென்றதுகா
பத்துமாதஞ்சென்று பைங்கிளிக்குப்போதாச்சு
சத்திக்கணபதியைச் சங்கரனைத்தோத்தரித்து
சாஸ்திரங்கள்யாவும் சதிரானலட்சணமும்
பார்த்துமகிழ்ந்திருக்க பஞ்சாங்கஞ்சொன்னார்கள
தாதிகளுமூப்பிகளுந் தாந்தரமாய்வந்துநிற்க
மருத்துவச்சிவண்ணாத்தி வந்துமகிழ்ந்துநிற்க
அரிவைசுபத்திரையும் அண்டையிலேவந்துநிற்க
இடுப்புமுதுகுண்டு எகமாய்தான்பிடிக்க
பக்குவமாயெல்லோரும் பக்கத்தில்தான்பிடிக்க
இப்படியாகவே இருக்குமந்தவேளையிலே
அலர்மேலுமங்கையரும் அரிவையரைபெற்றாளே
பெற்றாளேபெண்ணை பெருமாள்பெருந்தேவி
அப்போது-சுத்தமுள்ளகன்னிசுபத்திரையுந்தான்மகிழ்
தொப்புள்கொடியறுக்க தோகைசுபத்திரையும் [ந்து
கொடுத்தாளேமாயிரம்பொன்கொம்பனையாளப்பொழுது
வாய்துடைக்கஆயிரம்பொன் வைத்தாள்சுபத்திரையும்
எண்ணைமுழுக்காட்டி பீதாம்பரம்பட்டுடுத்தி
அபிமன்னன்தேவியென்று அணிந்தாள்விபூதிதன்னை
ஆனையின்மேல்பேரிகை அடித்தாரேயந்நேரம்
சுந்தரிக்கும்பாலனுக்கும் சொன்னபடிநேர்ந்தென்று
இந்திரரும்வேந்தரும் எங்குமறிந்தார்கள்
வந்தபிராமணருக்கு மகாதானந்தான்கொடுத்தார் [ங்கி
[illegible]ந்தைநெல்லுங்கோட்டைகளும் செல்வியர்க்குத்தான்வழ
கோதானம்பூதானம் கொடுத்தார்களனேகமெ[illegible]
பாடகர்புலவருக்கும் பரதேசிதாதருக்கும்

பட்டுப்புடவைகளும் கனமாகதான்கொடுத்தார்
பதினாறுநாளையிலே பைங்கொடிக்குதெண்டனிட்டு
நினைத்தாள்சுபத்திரையும் நிதானமிட்டாளந்நேரம்
பட்டணத்திலுண்டான பார்மன்னரனைவருக்கும்
வெற்றிலைபாக்கு விரும்பியிடச்சொன்னாளே
அப்படியேதான்செய்ய வாதராவாய்ச்சொன்னாளே
விருந்துசமையுமென்றாள் மேலானமங்கையற்கு
பொரித்தபொரிகறியும் புத்துருக்குநெய்பாலும்
அறுபத்துநாலுவகை அதிரசமப்பளமும்
மாங்கனியுந்தேங்கனியும் வாழைப்பலாக்கனியும்
சீனிமணபாக்கும் திரட்பாலுசர்க்கரையும்
சாலவகைநற்கறியும் சமைத்துவிருந்துமிட்டாள்
அறிவானசுந்தரிக்கு ஆணிப்பொன்தொட்டிலிட்டாள்
வடிவானசுந்தரிக்கு மாணிக்கதொட்டிலிட்டாள்
சுபத்திரையாளுடமைகளை சிங்காரித்தாள்சுந்தரிக்கு
மகாராசன்தேவியென்று மஞ்சநீராட்டிவைத்தாள்
அபிமன்னன்தேவியென்று அனைவருக்குஞ்சொன்னாளே
இப்படியாயங்கே இருக்குமந்தவேளையிலே

அபிமன்னனையும் சுந்தரியையும்
பள்ளிகூடத்தில் வைத்தது.

வருஷமும்நாலாச்சு வயதுமேஐந்தாச்சு
பள்ளிக்குமேலைக்க பருவமிதுவென்றுசொல்லி
உபாத்தியாயரைதானழைத்து வுகந்ததினம்பார்த்து
நல்லநாள்பார்த்து நல்முகூர்த்தந்தானுமிட்டார் [த்து
ஆடைசொர்ணம்வேணதெல்லாம் ஐயருக்குந்தான்கொடு
பள்ளிக்குவைத்தார்கள் பாலனையுஞ்சுந்தரியையும்
வடுகுதமிழ்கிரந்தம் மற்றுமுள்ளபாஷையெல்லாம்
அரிநமோசிந்தமென்று அன்பாயறையுமென்று
ஆஆவென்று ஆதிமால்புத்திரியும்
அர்ச்சுனன்புத்திரன் அபிமன்னராசனுக்கு
ஓம்நமசிவாயவென்று ஓதுநீமுன்னேயென்று
அய்யரும்சொல்லிசொல்லி அடவுடனேயானபின்பு
தங்குதடையில்லாமல் சதிராகத்தான்படித்தான்
சுந்தரிக்குப்பாடமே சொல்லுவான்பாலனுமே
சட்டமெழுத்துநன்ட தப்பினால்தெண்டிப்பான

வட்டக்கணக்குகளை தப்பியெழுதிவிட்டால்
கிட்டவேயழைத்து கின்ருநவான்காதிரண்டும்
ஆடுவதும்பாடுவது மயளியுடன்பேசுவதும்
இப்படிக்கெல்லா மெழுதிப்படித்தபின்பு
பள்ளிக்கூடம்வந்து பாலனுஞ்சுந்தரியும்
செல்வச்சிலம்பங்கள் பிடிக்கவேசெய்வார்கள்
தோள்வாருபோடுறதுந் துடைதட்டிப்பாயுறதும்
ஆனையைவிட்டுத்தான் ஆங்கரித்துருத்துவதும்
தப்பாமற்கற்று சமர்த்தாய் நின்ருர்கள்
சிறப்பானபாஷைகளுஞ் சகலவித்தையுள்ளதெல்லாம்
இருவருங்கற்று இருக்குமந்தவேளையிலே

சுந்தரியும் அபிமன்னனும் கணையாழி
மாற்றிக் கொண்டது.

மைவிழியாள்சுந்தரியாள் வலக்கையைத்தான்பிடித்து
கணையாழிமோதிரத்தை கழட்டியபிமன்னனும்
பெண்சாதிகையிலிட்டு பேசினனபிமன்னனும்
பங்கையரேசுந்தரி வரிசையிதுதாண்டி
அந்தமுள்ளசுந்தரியு மவள்கையின்மோதிரத்தை
இந்தாருமென்றுசொல்லி யிட்டாளபிமன்னனுக்கு
இருவருஞ்சம்மதியா யிருந்தார்களந்நேரம்
அப்படியாயங்கே யநேகநாள்சென்றபின்பு
வருடமேழானபின்பு வருந்தியந்தப்பாலனுமே
அம்மாள்சுபத்திரையை அடிவணங்கிதெண்டனிட்டு
ஆனைகுந்திபட்டணத்தைப் போவோம்வாவம்மாவே
சேனைநாளாச்சுதுகாண் சித்தமிரங்காதோ
தாயாரைவாருமென்று தம்பியழைத்தானே [டாள்
அண்ணனுடன்சொல்லி அனுப்பவிடைபெற்றுகொண்
பெண்பெருமாளலட்சுமியும் போய்வாருமென்ருளே

சுபத்திரை சுந்தரிக்கு புத்தி சொல்வது.

சுந்தரியைப்பார்த்து சுபத்திரையுமப்போது
வாரியெடுத்து மருமகளைமுத்தமிட்டாள்
ஊருக்குப்போய்வாரேன் வுசந்தருமகளே
மைத்துனன்மேலாசை மறக்காதேவஞ்சியரே
ஆசை மருமகளே அபிமன்னன்தேவியரே
அப்படியேயாகுமென்று அண்ணனுடன்சொன்ருளே

பாம்பின்மேல்பள்ளிகொள்ளும் பாரளந்தோன் தன்மக
அல்லவேபெண்மயிலே அன்னமேஆணைங்கே [ளே
இருவருங்கூடி யின்றிருந்தீர்கள்
ஆனைகுந்திபட்டணத்தே அமர்ந்திருக்கபோய்வாரேன்
போய்வாரேனென்று புறப்பட்டாள்பூவையரும்
தோகையிளமயிலாள் சுந்தரியும்பாலனுமே
ஏகமாய்த்தான்பேசி எனக்கென்னபுத்தியென்றாள்
அந்தமுள்ளசுந்தரியை யணைத்துமுத்தந்தானுமிட்டா
சிந்தைகலங்கி சிவசிவாவென்றுசொல்லி [ள்
மைத்துனனைத்தான்பார்த்து மயங்கியழுதாளே
பாலனுமப்பொழுது பார்த்துவழுதானே
கண்டாள்சுபத்திரையுங் கடுகெனவேயோடிவந்து
கண்ணைத்துடைத்து கனிவாயைமுத்தமிட்டு
தேறுதலையாக இடஞ்சொன்னாள்சுந்தரிக்கு
ஆதரவாய்ச்சொல்லியனுப்பவிடைபெற்றுக்கொண்டாள்
மாமியார்காலில் மருமகளுந்தெண்டனிட்டாள்
வாழ்த்திவிடைகொடுத்தாள் மாயனுடற்பிறந்தாள்

## சுபத்திரையும் அபிமன்னனும் ஆனைகுந்தி பட்டணத்தைப் போய்ச்சேர்ந்தது

தாதிகளுமூப்பிகளுந் தண்டிகையைக்கொண்டுவந்து
பல்லக்கிலேறுமென்று பாங்கிமார்தெண்டனிட்டார்
உற்றாரான்முறையார் ஊரிலுள்ளதங்கையரும்
மெத்தமெத்தச்சொல்லி விடைகொடுத்தாரப்போது
ஏறினாள்பல்லக்கி லியலாள்பசுங்கிளியும்
பாலனைத்தானெடுத்து பல்லக்கில்வைத்தார்கள்
கொட்டிமுழக்கினார் கோடையிடிபோல
வட்டமிட்டுக்கொட்டினார் வஞ்சியர்களெல்லோரும்
துரிதமுடநடந்தார் துவாரகாபுரியைவிட்டு
இஞ்சிவனங்கடந்தாள் எலுமிச்சையுட்புகுந்தாள்
மஞ்சள்வனங்கடந்தாள் மாதுளையிலுட்புகுந்தாள்
காடுகடந்து கரியமலைதான்கடந்து
பஞ்சவர்கள்நாட்டிலேதான் பைங்கிளியும்வந்தாளே
வஞ்சிசுபத்திரையும் வந்தாளேமாளிகைக்கு
தம்பியபிமன்னனுக்கு சலக்கங்கள்தாருமடி
பாலமிர்தமுண்டு பசிதீர்ந்தபிறபாடு

அபிமன்னனுக்கு நூறுதோழரை அமைத்தது.

த்ரனமூதுகொண்டு சதிராயிருந்தாரே
பாலனுக்குத்தோழன்மாரை பட்டணத்தில்தான்தேடி
பாலனைப்போல்நூறுபேரை பார்த்துவைத்துவந்தார்
தோழன்மார்தங்களுக்கு சொன்னாள்சுபத்திரையும்
தம்பியைவிட்டு நீங்கள் தனியேபிரியாமல்
அபிமன்னராசாவை அவனைபிரியாமல்
கவனமுடன் தம்பியைக் காத்திருங்கள்தானுமென்று
அன்னமும்பாலு மபிமன்னனுடன்கொள்ளுங்கள்
அவன் தரிக்கும்பூஷணங்கள் ஆடைபரிசைகத்தி
வகைவகையாய்ப்பிள்ளைகட்கு மாறுகொடுத்தாளே
தினந்தினந்தம்பியற்கு சிலம்பங்கள்செய்யுமென்று
அஸ்திரகுணங்களெல்லாம் அடைவாககற்கவென்று
இப்படியாகச்சொல்லி எடுத்துரைத்தார்மாதாவும்
அப்படியேநல்லதென்று அடைவாககற்கவென்று
அபிமன்னருந்தோழருமாய் அமர்ந்தார்களன்னேரம்

அஸ்தினபுரத்தின் சிறப்பு.

அஸ்தினபுரத்து அதிசயத்தைச்சொல்லுகிறேன்
திரியோதிரப்பெருமான் சிங்காதனச்சபையில்
பதியிழந்துபாண்டவர்கள் பெருங்காடுறைந்தாரென்று
மதியையனுசரிக்கும் மன்னன்திரியோதிரன்
அஸ்தினபுரிநகரில் அழகுமணிமண்டபத்தில்
புத்தியொருகோடி புகலரியமண்டபத்தில்
நிறைகோடிகால்நிறுத்தி நீலரத்னமூத்தணிந்து
வகைவகையாய்வச்சிரங்கள் வகையாகத்தானமூத்தி
ஓரமருகே வுயர்ந்தமூத்துதொங்கவிட்டு
தூணுக்குத்தூணு தூண்டாவிளக்கேற்றி
தூணுக்குத்தூணு துலங்குமணிமண்டபத்தில்
மேல்கட்டிக்தூக்கி விபரீதமாய்ச்சோதிமின்ன
ஆணிப்பவழமணி யணியணியாய்ச்சோதிமின்ன
சங்கீன்றமூத்து சாதிமூத்துசோதிமின்ன
பாங்காகச்சோதிமின்ன பலதிசையுந்தான்தூக்கி
அல்லிமலர்முல்லை அழகுயிருவாட்சிகளும்
மல்லிகைமுல்லை மலருமிருவாட்சிகளும்
கொத்தலரிகுங்குமமும் குளிர்ந்தசுகந்தமலர்

விஸ்தாரமான வெள்ளரிப்பூவுகளும்
வெண்டாமரைமலரும் வேண்டியசெந்தாமரையும்
கண்கொள்ளாப்பூச்சரங்கள் கானகத்தின்மண்டபத்தில்
பூச்சரங்கள்கொண்டுபுதி தாயலங்கரித்து
ஆச்சரியமாக அலங்காரபூச்சரங்கள்
வெள்ளித்தூணருகே விதவிதமாய்மிகத்தூக்கி
சிங்கமும்யானையும் சிறக்கவணிசேர்த்து
ஆனையின்மேலே அழகாகத்தூணிருத்தி
நாலுகால்பீடப் நடுவாகவுண்டாக்கி
சிங்காதனமிட்டுச் சிங்காதனக்கால்நிறுத்தி
சிங்கத்தின்பேரில் சிறக்கவே தூணிருத்தி
சங்கீன்றமுத்தும் தாவடமும்பூஷணமும்
இங்கிதமாவே இயல்பாகத்தூணிருந்தி
நாகக்கொடியும் நவரத்தினசோதிமின்ன
தென்னமுடிமன்னன் திரியோதிரன்சகுனி
கர்னன்விதுரன் காங்கேயதேசத்தரசன்
குருக்கள்துரோணரும் கொற்றவருமன்னவரும்
கிருபன்கிருபாச்சாரி கீர்த்தியுள்ளபீஷ்மருடன்
அசுவத்தாமனுடனே [illegible]னதொருமன்னவரும்
திரியோதிரன்சபையில் சேரக்கொலுவிருக்க
பதினெட்டக்குரோணி படைமன்னர்தானிருக்க

சகுனி இலக்குணனுக்கு விவாகஞ்செய்ய நினைத்துத் துரியோதனனுக்குச் சொல்வது.

மாமன்சகுனி மருமகனைத்தான்பார்த்து
திரியோதிரனுடனே சொல்லலுற்றனப்போது
அங்கிருந்தமன்னவர்கள் அனைவோருந்தானறிய
தேசமைம்பத்தாறு திக்கெட்டுமாளுமுறையே
பாசமுடன்தேசம் பட்டமாளுமுறையே
மிகச்சார்களெல்லோரும் வீடுகட்டிவாழ்வார்கள்
கைசாய்ந்தால்கலியாணம் மகிழ்ச்சியாய்ச்செய்வார்கள்
அப்படியேவும்முடைய அழகானலக்குணற்கு
கலியாணஞ்செய்யவே காலங்களிப்போது
நன்றாய்க்கலியாணம் ராசமுடிமன்னர்மெச்ச
இப்போதேசெய்தால் இயலாயிருக்குமென்றான்
ஒப்பமுடன்சொல்லி உரைத்தான்சகுனியும்

தேசத்தழகுமன்னன் துரியோதிரன்கேட்டு
ஆமென்றுசொல்லி அனைவருஞ்சொன்னார்கள்
மாமன்சொன்னபெண்பேச்சை மறவாமல்மன்னவனும்
பெண்ணெங்கேயென்று போய்கேட்டானப்பொழுது
வண்மையுடன்சகுனி வாகாயுரைக்கலுற்றான்
சொன்னான்சகுனி துவாரகாபுரிதனிலே
மாயன்பெருமான் மகளாரைக்கொள்ளுமென்றான்
இலக்குணற்குஞ்சுந்தரிக்கும் இராசிபொருத்தமுண்டோ
எப்படியானாலு மிசைந்துகொள்ளவேண்டுமென்றான்

## துரியோதிரன் மகிழ்ந்து தாயாரை உத்தரவு கேட்டல்.

அப்படியேசெய்வோமென்று அரசன்துரியோதிரனுஞ்
சிங்காதனத்தைவிட்டு கீழேகுதித்திறங்கி
பல்லக்குமீதேறி படைமன்னர்சூழ்ந்துவர
மாமன்சகுனியுடன் வந்தானேதாய்வீட்டில்
தாயாரைசுற்றிவந்து சாஷ்டாங்கதெண்டனிட்டான்
வாரியெடுத்து மகனைமடியில்வைத்து
முகந்துடைத்துமுத்தமிட்டு முடிமேலகையவைத்து
வந்தவகையென்மகனே வரிசையுடன்சொல்லுமென்று
தாயாருங்காந்தாரி தயவாகத்தான்கேட்டு [ள்
அண்ணன்சகுனியுந்தான் அன்பாகத்தானழைத்து
இருவரும்வந்தவகை என்னுடனேசொல்லுமென்றாள்
சகுனியுரைத்தானே தங்கையற்குமனங்குளிர
திரியோதிரனுந் தெரியவேசொன்னானே
கட்டழகலக்குணற்கு கனமிகவேகலியாணம்
இட்டமுடன்செய்வதற்கு தெரியவேகேட்கவந்தேன்
என்னபுத்திதாயாரே எனக்கரியசொல்லுமென்றான்
பெண்ணுமிருக்குதம்மா பெருமாள்மகளாகும்
வண்ணமகள்சுந்தரியாள் மாயன்மகளாகும்
என்றுசொல்லியுங்களண்ணன் எனக்கறியச்சொன்னாரே
அந்தவிசேஷங்கேட்டு வந்தேன்அம்மாளே
வந்தேனுன்வாய்விசேஷம் வாங்கியேபோகவந்தேன்
சந்தோஷமானபடி தாயாரேசொல்லுமென்றான்

தாயார் மகிழ்ந்து கலியாணஞ்செய்ய
உத்தரவு கொடுத்தது.

தாயாருங்காந்தாரி சந்தோஷமாயுரைத்தாள்
மாயன்பெருமாள் மகளென்றுசொன்னாயே
உனக்குமெத்தசம்மந்தி ஒருவரில்லையுலகத்தில்
போவென்றனுப்பி புகழ்ந்துவிடைகொடுத்தாள்

திரியோதனன் தகப்பனிடம் வந்துகேட்பது.

வந்தான்திரியோதனன் மன்னவர்கள் தங்களுடன்
கர்னன்விதுரன் காங்கேயன் தன்னுடனே
மன்னன்குருக்கள் மற்றுமுள்ளோர்தங்களையும்
தங்களுடன்கூடத் தகப்பனண்டைதான்போனான்
தகப்பனைசுத்திவந்து சாஷ்டாங்கதெண்டனிட்டான்
அண்டையிலேதானழைத்து அப்பாமகனேயென்று
மற்றுமுள்ளமன்னவரை வகையாயிருங்களென்று
இத்தனைபேரும் என்மகனும்எங்குவந்தீர்
தென்னமுடிமன்னன் திரியோதிரனுரைப்பான்
லக்குணர்க்குநல்முகூர்த்தம் நான்செய்யவேணுமென்று
மாயன்பெருமாள் மகளானசுந்தரியை [முகூ
நேமமுடன்கொள்வோமென நிதானமிட்டேனிப்போ
உம்முடைய புத்தி உயர்ந்தபுத்திதான்கேட்டு
சம்மதிந்தால்போகவென்று தகப்பனேவந்தேன்நான்

திருதராட்டிரன் வேண்டாமென்று தடுத்தது.

தகப்பன்தயிலாடன் தான்கேட்டுஅவ்விசேஷம்
சிந்தைகலங்கி சிவசிவாவென்றுசொல்லி
இந்தவிசேஷம் எனக்குச்சரிபோகாது
சுந்தரிக்கும்அபிமன்னருக்குஞ் சொன்னார்சபதங்கள்
சுபத்திரைக்கும்லட்சுமிக்கும் முன்னேசபதமுண்டு
வில்லங்கமானபெண்ணைக் கொள்ளவேபோகாது
கொள்ளக்குடிகேடு குலத்துக்குஆகாது
கள்ளப்பெருமான் கபடால்குடிகெடுப்பான்
பெருமாள்நமக்குமுன்னே பொல்லாதசம்மந்தி
ஆகாதுகாணும் அவர்வீட்டுப்பெண்நமக்கு
பின்னையொருவீட்டில் பெண்ணுங்கிடையாதோ
போங்களென்றுசொல்லி போகவிடைகொடுத்தான்

## திரியோதிரன் துவாரகைக்குப் புறப்பட்டது.

அந்தவிசேஷமது அதுகேட்டுமன்னவனும்|
கோபித்துக்கண்சிவந்து கண்கள்நெருப்பதுபோல்
தாவித்துபூஷணங்கள் சாஞ்சரமாய்ந்தானுதிர
தாணியிலேதான்விழுந்து தார்வேந்தன்கூறுவான்
குருடனுடபேச்சு நடக்குமோகொற்றவனே [னை னுவும்
தகப்பனென்றுசொல்லவந்தால் தடுத்து அவன்சொன்
வகையுடனேசொல்லாமல் மாராட்டஞ்சொன்னானே
கண்தெரியாதான்சொல்லைக்கேட்டுகலியாணம்பண்ணும
பின்வாங்கப்போறேனோ பெரியவரேவாருங்கள் [ல்
என்றுசொல்லிமன்னவனும் இருந்தவர்தலனுடனே
வந்தாரண்மனையில் மகாபேரிபோடுமென்றான்
பட்டணத்திலுள்ள படைமன்னரத்தனையும்
இட்டான்பயணம் இடும்பன்திரியோதிரன்
துவாரகாபுரியென்று சொல்லிபயணமிட்டான்
அடித்தார்கள்பேரிகை ஐந்துலட்சங்கிங்கிலியர்
பிடித்தார்கள்மூரிகையை பிரியாமல்மூன்றுலட்சம்
கருமலைப்போலே கருத்ததொரு ஆனைலட்சம்
செவ்வானம்போலாகச் சிவந்தபுரவிலட்சம்
முத்துநிலம்போலசுவம் முழுவெள்ளைமூன்றுலட்சம்
பவழநிறம்போல்குதிரை பத்துலட்சம்பயணமென்றான்
பல்லக்குக்காரர் படைமன்னராசாக்கள்
கொல்லர்களெல்லோருங் கூடிப்பயணமானார்
வீராதிவீரர்களும் வில்பிடிக்குமன்னவரும்
ஆறுலட்சம்ராசாக்கள் அப்போபயணமானார்
துவாரகாபுரிதனிலே சுந்தரியைத்தான்கேட்க
பயணம்புறப்பட்டார் படைமன்னராசாக்கள்
திரியோதிரனுடனே திரள்தம்பிமாருடனே
ஆயுதசேவகர்கள் அமளியுடனப்பொழுது
தேரணியுங்காலாளுந் திரள்கோடிமன்னவரும்
தண்டிக்கைக்காரரும் தார்வேந்தராசாக்கள்
ஒட்டையின்மேலேறி ஒருகோடிராசாக்கள்
இட்டசட்டைவாங்காத இடும்பரொருகோடி
போட்டசட்டைவாங்காத போர்மன்னர்தான்கோடி
அஸ்தினபுரத்திலுள்ள ஆனதுரைமன்னரெல்லாம்

பரிசுத்தமாயெல்லோரும் பயணப்புறப்பட்டார்
முப்பத்திரண்டுவிதம் மேளங்கள் தான்முழங்க
பேரிகைகொட்ட பெரியகாளையூதிவர
பூரிகைகோடிலட்சம் பூமியதிர்ந்துவிழ
பண்ணியடமாடங்கள் பத்துலட்சந்தான்முழங்க
திட்டமுடநாகசுரம் திரள்கோடிதான்முழங்க
மத்தளவுடுக்கைகளும் வாய்வீணைதாளமெல்லாம்
மெத்தமுழங்கிவர மெல்லியர்களாடிவர
சித்தமகிழ்ந்து திரியோதிரன்பார்க்க
வந்துதேபாளையங்கள் மலட்டாருதன்னருகே
இறங்கிற்றுபாளையங்கள் எங்கும்கிடுகிடென்ன
பூமிநடுங்கவெங்கும் பூலோகந்தானதிர
அண்டம்கிடுகிடென்ன ஆகாயந்தானதிர
குன்றுமலைகளெல்லாந் தூளாகத்தான்பறக்க
கண்டபடைமன்னவர்கள் களைபட்டுதான்விழவே
துவாரகைதானதிர தொடர்ந்துதேபாளையங்கள்
தென்கடல்பொங்கி திரண்டுவருவதுபோல்
நடத்துதேபாளையங்கள் நாலுதிக்குந்தானதிர
பெண்கேட்கவந்தானே பேருனமன்னவனும்
ஆயன்பெருமாள் அரண்மனைக்கருகில்வந்து
திரியோதிரன்கூட்டம் சேனைவருகுதென்று
அறிந்துகொள்ளமாயனுக்கு ஆள்கள்வந்துசொன்னார்
சொன்னவுடனே தீவிரமாய்த்தானெழுந்து [கள்
என்ன அலுவலிங்கே அவர்கள்வரக்காரணமேன்

## ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி ஆற்றில் நீர்பெருக கங்கையை யழைத்தது.

என்றுவிசாரமிட்டு எம்பெருமாளப்போது
பொதிந்தஞானத்தை பெருமாளுந்தானபார்த்தார்
பெண்கேட்கவாருனும் பொல்லாதபட்டிமகன்
தங்கையென்றுகங்கைதனை தானழைத்தாரப்போது
மாயவரும்தானினைக்க வந்தாளே கங்கையவள்
கங்காபவானிவந்து கிருஷ்ணரையுந்தான்பணிய
அழைத்தவகையென்ன அண்ணாவேசொல்லுமென்று
மாயன்பெருமாளும் மறுவார்த்தைகூறுவாரும் [ர்
பொல்லாதிரியோதிரன் பெண்கேட்கவாருனும்

தேசமாயென்சீமையில் சில்மஷங்கள்செய்வானே
ஆகாததுன்மார்க்கன் அவனிங்கேவந்தாக்கால்
நம்பவும்போகாது நானவனை நாயகியே
வம்பனை திரியோதினை வரச்சொல்லப்போகாது
நாயே நீதங்கையரே தண்ணீராய் ஆற்றிலேதான்
பாலாறுதண்ணீர்வரப் பார்க்கவேணுந் தங்கையரே
பாராய் நீபைங்கிளியே தடையாக நிற்கவேண்டும்
வந்தேறவொட்டாமல் மாயவருஞ்சொன்னாரே

கங்கையானவள் ஆற்றில் பெருவெள்ளமாய்
வந்தது.

நல்லது அண்ணாவே நன்றாய்வருகிறேன்
மேகம்பரவியப்போ மின்னலிடிமுழங்க
மழைகள்பொழியவே வருகுது ஆற்றுவெள்ளம்
வருகுது ஆற்றுவெள்ளம் மரங்கள்மலைபிடுங்கி
இருகரையுந்தான்பிளந்து வருகுது ஆற்றுவெள்ளம்
வருகுது தண்ணீரது மானமதுபூமியொன்றாய்
ஆற்றங்கரையி லிறங்கிற்றுபாளையங்கள்
தண்ணீரைக்கண்டு தலைவாறுசெட்டுநொந்து
வண்ணவண்ணக்கூட்டம் வகையுடனேபோட்டார்கள்
தென்னமுடிமன்னன் திரியோதிரன்பார்த்து
என்னசெய்வோமென்று எங்கிமனந்தளர்ந்து
கூடாரம்போடுமென்று கோபமுடனிருந்தான்

திரியோதிரன் துவாரகைக்கு ஆளனுப்பியது.

வந்தவொருமன்னவனை வாய்மொழிகேட்டானே
அக்கரைதாண்டவேதான் ஆளனுப்பவேண்டுமென்றார்
படகுமேல்மன்னவனை பதினைந்துமந்திரிகள்
அடைவுடனேற்றிவிட்டான் அம்மொழிகேட்டுவர
போனார்துவாரகா புரியந்தப்பட்டணத்தே
மாயனரண்மனைக்கு மன்னவரும்போய்நுழைந்தார்
சீராளமாயன் சிங்காதனத்துமுன்னே
தெண்டனிட்டுமன்னவர்கள் சீராகநின்றார்கள்
வந்தவரைத்தான்பார்த்து மாயனெடுத்துரைப்பார்
வந்தசேதிசொல்லுமென்று மாயவருந்தான்கேட்க
சொன்னார்கள்மந்திரிகள் சுவாமியைத்தெண்டனிட்டு

பெண்கேட்கவந்தோமென்று பெருமாட்குசொன்னார்க
திரியோதிரனுமந்த சேனைபரிதளமும் [ள்
வருகிறார் தம்முடைய மகளாரைக்கேட்கவென்று
லக்குமார்க்குஞ்சுந்தரிக்கும் லட்சணங்கள்தான்பார்த்து
சகுனங்கள்தான்பார்த்து வந்தானே திரியோதிரன்
ஆற்றுதன்னண்டைவந்ததினால் அங்கேயிறங்கினார்கள்
ஆண்டவனேபெண்விசேஷம் ஆயனேசொல்லுமென்
மாயன்பெருமானும் மறுவார்த்தைகூறுவார் [றார்
பெண்தாரேனென்றுசொல்லி பெருமானுந்தான்கூறி
பெண்ணுக்குவந்தவர்கள் பின்னிடைந்துபோகாமல்
நாம்கேட்டபொன்னை நமக்குக்கொடுத்தாக்கால்
கோபாலபெட்டி குறையாமல்பொன்கொடுத்தால்
நேமமாகசுந்தரியை நிதானமிட்டுநான்தாறேன்

பெருமாள் சொன்னதை மந்திரிகள்
திரியோதனனுக்குச் சொல்வது.

அந்தவிசேஷம் அதுகேட்டுமந்திரிகள்
நல்லதென்றுதெண்டனிட்டு நடந்தார்களப்பொழுது
ஆறுதனைகடந்து அக்கரையேபோனார்கள்
திரியோதிரனுடனே செய்தியெல்லாஞ்சொன்னார்கள்
நல்லதென்றுசொல்லி தனைத்தான்திரியோதிரன்
பொக்கிஷக்காரரைப் போர்பன்னரையழைத்து
அஸ்தினபுரத்துக்கு அதிகவேகமாய்நடந்து
பொக்கக்களஞ்சியத்தை நோக்கமுடன்தான்திறந்து
ஏழுலட்சம்ஒட்டையின்மேல் ஏற்றிபொன்னையெல்லாம்
ஐந்துலட்சம்யானையின்மேல் ஆபரணமேற்றுமென்றார்
பெண்ணுக்குஉண்டான பூஷணங்களுநல்லதெல்லாம்
ஒன்றுங்குறைவில்லாமல் ஏத்தென்றுசொன்னானே
அப்படியேதான்போயரண்மனைக்குட்புகுந்தார்
பொக்கிஷவாசல் புண்ணியர்கள்தான்திறந்து
ஒட்டகம்யானை ஒன்றாய்நிறைத்துவைத்து
வந்துபொதிபிடித்தார் மகாராசன்பொன்னுகளை
வேணுமென்றபூஷணத்தை வெகுவாய்பொதிபிடித்தார்
ஏற்றிவந்துவிட்டார்கள் இறங்குகின்றபாளையத்தில்
கண்டான்திரியோதிரன் களஞ்சியத்துப்பொன்னையெல்
கொண்டாடிக்கொண்டு குலுங்கிநகைநகைத்து [லாம்

அந்தவிபரமெல்லாம் அறிந்துபெருமாளும்
புத்திகெட்டதுரியோதிரன் பெண்கேட்கவாருனும்
மூன்றுலைதான்கொள்ளவந்து மூளைகுலைந்துபோறு
அர்ச்சுனன்தான்பறித்து ஆகாயம்போனுனே [னே
பெண்ணைக்கொடுத்துவிட்டு பேய்போல்விழித்தானே
அர்ச்சுனன்தான்பறித்தான் அதுபோலிதாகுமென்று
சற்றுமிவனென்னுது தன்மகன்லக்குணற்கு
பெண்கொள்ளவேணுமென்றுபேசிவரஆள்பிடித்தான்
அர்ச்சுனன்மைந்தன் அபிமன்னனையும்பாராமல்
என்னையுந்தான்மனதி லிட்டாகப்பாராமல்
தன்னுடையதத்துவமுந் தான்படைத்தஆண்மைகளும்
மூன்னும்பின்னுமென்னுமல்முடிபுனைந்தகெர்வத்தால்
பின்னைவருகிற பிழைகளறியாமல்
வந்தானேபெண்கொள்ள மடையன்புத்திரனுக்கு
நல்லதுநல்லதென்று நகைத்தந்தமாயவரும்
பணத்தின்வலுமையைத்தான் பாழாக்கயப்போது
எண்ணியனதிலே எம்பெருமாள்தானுமப்போ
ஆற்றுதீர்வற்ற ஆயரவர்தானினைந்தார்
மாயமாய்ப்போக வரவழைத்தார்கங்கைதனை
அண்ணரழைக்க அறிந்தகங்கைதானடங்கி
மாரளவுகாலளவாய் வந்ததண்ணீர்தான்பார்த்து
துரியோதிரப்பெருமாள் சொல்லுவான்சேனைகளுக்கு
நாளைப்பயணமென்று நகபத்தையடியுமென்றுன்
தேருப்ரதமுந் திரளானராணுவமும்
ஆறுகடந்துஅப்போ அக்கரையில்வந்தார்கள்
மாயனுடபட்டணத்தில் வந்துதேபாளையங்கள்
ஆயனுடபட்டணத்தில் அழகாகத்தண்டிறங்கி
துரியோதிரனுந் திரள்தம்பிமாருடனே
கர்னன்சகுனி கன்மன்னர்தன்னுடனே
ஆயன்பெருமா ளரண்மனையும்புகுந்தார்
மன்னன்துரியோதிரனும் மாயவர்க்குத்தெண்டனிட்டு
ஆயனெழுந்திருந்து அனைவரைத்தான்பார்த்து
ஆசீர்வாதமென்று அவரவர்க்குச்சொன்னுரே
இருக்கச்சிலவு கொடுத்தாரேயெம்பெருமாள்
துரியோதிரனுக்குச் சிங்காதனமுமிட்டார்
குருக்கள்மார்தங்களுக்கு கூடசிங்காதனங்கள்

இருக்கச்சேயிட்டு யிருங்கவென்றாரப்போது
எங்கேவந்தீரென்று எம்பெருமான்தான்கேட்டார்

திரியோதிரன் பெருமாளைப் பெண்கேட்பது.

மன்னன் திரியோதிரனும் வாய்திறந்துதானுரைப்பான்
பெண் கேட்கநாங்கள் பெருமையுடன்வந்தோம் [டு
இலக்குணற்கும்சுந்தரிக்கும் இராசிப்பொருத்தமுண்
எந்தன்மகன்லக்குணற்கு இசைந்திருக்குதையாவே
உந்தன்மகள்சுந்தரியை யுகந்துதாவேணுமென்றான்

அதற்கிசைந்து பெருமாள் பொன்கேட்பது.

அப்படியேதாரேமென்றார் ஆயன்பெருமானும்
பத்தியுடன்சுந்தரிக்கு பிரியமுடனெத்தனைபொன் [மு
அந்தப்பொன்னெந்தனுக்கு அளந்துதரவேண்டுமென்
கொண்டுவந்தபொன்னையெல்லாய்கோபாலபெட்டிரு
அளந்துகொள்ளசொல்லி அன்பாகசொன்னானே [ம்ப

திரியோதிரன் பொன்னைப் பெருமாள்
காத்தடிக்கச் செய்தது.

கோபால்பெட்டியைத்தான் கொண்டுவந்துவைத்தார்கள்
தெற்குவடக்கு இசைநான்குயோசனையும்
தக்கசதுர்முகமாய் தலப்பானைபோலிருக்கும்
அப்படிப்போலொத்த அளவானபேழையிலே
கொட்டினார்பொன்னை கொற்றவருமன்னவரும்
எழுவட்டமொட்டகத்திலேற்றிவந்தபொன்னையெல்லாம்
பார்த்துப்பெருமாளும் பட்சமுடன்தானுரைத்தார்
பொன்பதருயில்லாமல் தூத்தியளவுமென்றார்
அப்படியேகொட்டி அப்பாரம்போட்டார்கள்
வாய்வுபகவானை மாயனுந்தானினைத்து
காற்றடித்துபொன்பதரும் கடலிலேபோயொளிக்க
நேர்த்தியுடன்காற்றடிக்க நினைத்தார்பெருமாளும்
அப்படியேகாற்று அகோரமாய்தானெழும்பி
சூருவளிகாற்று சுழற்றியடித்ததுகாண்
தூற்றச்சேபொன்பதரும் வெகுதூரம்போகுதுகாண்
ஆகாயந்தானெழும்பி அப்போதனுமாரும்
அப்பாரந்தான்தூற்றி வெளிப்பட்டாரப்போது
நெல்லுபதர்போல் பறக்குது அப்போது
வட்டபொதியிடச்சே மறுதேசம்போகுதுகாண்

கிரியோதிரனுமப்போ சிறித்துமிகப்பார்த்தான்
கொண்டுவந்தபொன்னெல்லாம்கூடையமரயாகவில்லை
பின்னையுமுண்டான பொக்கிஷங்களுள்ளதெல்லாம்
முன்னிருந்தபொக்கிஷங்கள் மூத்தோர்கள்தேடினதை
தென்ன மூடிமன்னன் கிரியோதிரன்தேடினதும்
கர்ணன்சகுனி காட்சியுடன்தேடினதும்
எல்லாக்கனகமெல்லாம் எடுத்துவந்தாரப்போது
காற்றில்கழிந்து கடலிலேபோகுதுகாண்
ஆத்திரானளக்க அரைக்கூடையாச்சுதுகாண்
மன்னன்கிரியோதிரனும் மனதுகலங்கிநின்முன்
கிரியோதிரன்கலங்கி திகைத்துமயங்குறதை
மாயன்பெருமாளும் மனதிலேதானறிந்து
கூடைமூக்காலாகுதென்று குறித்தார்பெருமாளும்
அப்படியேதானுமப்போ ஆச்சுதுஅக்கூடை
கால்கூடைபொன்னும் கலியாணமானபின்பு
தருகிறோமென்றுசொல்லி சமாதானஞ்சொன்னானே
நல்லதென்றுசொல்லி நகைத்தார்பெருமாளும்
நான்முகூர்த்தம்வைக்கவே நல்லபிராமணரை
அண்டையிலேதானழைத்து ஆலோசனைகள்செய்து
பஞ்சாங்கந்தான்பார்த்து பக்குவமாய்நாளுமிட்டு
ஜெயவருஷம்வைகாசி தேதிபனிரெண்டில்
நட்சத்திரம்அவிட்டம் நல்லதிதிபஞ்சமியும்
வெள்ளிக்கிழமையிலே விடியவைந்துநாழிகையில்
இன்றெட்டாநாள்முகூர்த்தம் என்றுமேபாக்குமிட்டார்
பகல்முகூர்த்தமென்றுசொல்லிபாக்குமிட்டார்ராசருக்கு
பெண்கொள்ளத்தானிசைந்தாள்பெருமையுடன்திரியன்
கொடுக்கவேதானிசைந்தார் கோபாலகிருஷ்ணருமே
எல்லாருக்கும்பாக்குமிட்டு இன்பமுடன்பேசினாரே

கிரியோதிரன் பந்தலலங்கரித்தது.

போகுறோமென்றுசொல்லி புறப்பட்டாரந்நேரம்
வந்தவர்தங்களுட மாளிகையிலுட்புகுந்து
பட்டணங்கள்தானறிய பேரிகைபோடுமென்றார்
கலியாணமெனசொல்லி கனபேரியடித்தார்கள்
தட்டிபறையடித்தார் தார்வேந்தரெல்லோருக்கும்
பந்தலிடச்சொன்னார்கள் பட்டணங்களுள்ளதெல்லாம்

வேடிக்கையாகவே விநோதங்கள்பண்ணுமென்றார்
அப்படியேநல்லதென்று அவர்களுந்தான்முனைந்தார்
அபாரகாபுரிதனிலே சொல்லியேஅவ்விசேஷம்
திரியோதிரனுந் திரளுடனேதான்வந்து
மாயனான்மனையில் வந்துபெண்ணைக்கேட்டதும்
ஆயனதற்கு ஆயரிக்கைகொண்டதுவும்
பிரியமாயதானிசைந்து பரியங்கள்வாங்கினதும்
பட்டப்பகலில பகல்முகூர்த்தமென்றுசொல்லி
எட்டாநாளென்றுசொல்லி இட்டாரும்பாக்குகளும்
சொல்லியிருக்கையில் சுந்தரியாள்தன்மொழி
செங்கமலத்தாதி செட்டிக்கடைக்காக
வெளியேபுறப்பட்டு வீதியிலேபோகையிலே
கடைகள்பெருந்தெருவே கன்னியரும்போகும்போது
பட்டணத்திலுண்டான பரிசனங்களத்தனையும்
தாதிமுகம்நோக்கி தனித்தனியேகேட்பார்கள்
சுந்தரிக்குகலியாணம் கூடிற்றோதோகையரே
இன்றெட்டாநாளோவென்றுகேட்பார்களெல்லோரும்

தாதி சுந்தரிக்குச்சொல்வது.

இந்தவிசேஷங்கேட்டு இடிவிழுந்தாள்தாதியரும்
அடித்துபுரண்டு அழுதுநடந்தோடி
வந்தவழிதிரும்பி வாராளேசெங்கமலம்
கண்டாளேசுந்தரியும் காதலியாள்வாரதுக்கம்
ஏண்டியம்மாசெங்கழனி என்னகுறைவுந்தனுக்கு [மோ
செலவுகொள்ளப்போனவிடத்தில்செட்டியுன்னைவைதா
சரக்குகொள்ளப்போனவிடத்தில் சண்டைமெத்தவுண்
பின்னையொருவர் பிழைகள்மெத்தசொன்னாரோ [டா
திட்டியடித்தாரோ தீம்புமெத்தசெய்தாரோ
பஞ்சவர்க்குத்தாழ்வு பாங்கியரேவந்ததுண்டே
அம்மான்மார்வார்த்தைக்கு அவமானங்களுண்டோ
அத்தைதுரௌபதைக்கு ஆயாசம்வந்ததுண்டோ
மைத்துனர்தன்னுடைய வார்த்தைகள்தானுமுண்
என்னடிதாதியரேஎனக்குரியச்சொல்லுமென்றார் [டோ
செங்கமலந்தாதி சொல்லுவாள்சுந்தரிக்கு
தென்னமுடிவேந்தன் திரியோதிரன்பாவி

உன்னைமணம்புரிய வுடன்படிக்கைகேட்டதுவும்
மன்னன்பெருமான் வரச்சொல்லிசொன்னதுவும்
பரியங்கள்பேசி பணம்வாங்கிக்கொண்டதுவும்
சரியாகச்சம்பந்த தாம்பூலம்வாங்கினதும்
சம்மதித்தேவுன்தகப்பன் தனம்வாங்கிகொண்டதுவும்
கோபாலப்பெட்டியிலே கொட்டியளந்ததுவும்
இன்றைக்குஎட்டாநாள் இசைந்தமுகூர்த்தமென்று
பெண்கொள்ளவாரேனென்று பேசினான் திரியோதிரன்
பாரதமுக்குமிட்டான் பட்டணங்களுள்ளதெல்லாம்
இந்தவிசேஷமெல்லாம் கேட்டல்லோஎன்தாயே
உந்தனுடன்சொல்ல ஓடிவந்தேன்சுந்தரியே
என்றவளுஞ்சொல்லி யிருந்தாளேதாதியரும்

சுந்தரி தகப்பனிடத்திற்கு வந்தது.

அந்தவிசேஷம் அதுகேட்டுசுந்தரியும்
கதித்துகனலண்டி கண்கள்தனல்பறக்க
அவ்வரிக்கண்கள்ரெண்டும் செவ்வலரிப்பூத்ததுபோல்
அடித்துபுரண்டழுது அநியாயமென்றுசொல்லி
பாங்கியரைத்தானழைத்து பல்லக்குசோடியென்றாள்
கோத்தமுத்துபல்லக்கு பிடியுமென்றாள்கொம்பனையும்
ஏறினாள்பல்லக்கில் எமலோகந்தானதிர
கோபமுந்தாபமுங் கொண்டாளேயப்போது
வாராளேசுந்தரியு மாயனரண்மனைக்கு
காயாம்பூமேனியனார் கண்ணனுமப்போது
மாயவருந்தானும் மகள்வரும்சேதிகேட்டு
தாஷ்டீகமான தங்கச்சிம்மாதனத்தில்
நீட்டினார்காலை நெடுக்கவிட்டார்முக்காட்டை
மூடியேதானும் பொய்யுறக்கங்கொள்ளுகிறார்
மாயன்பெருமாளை மன்னவனை நித்திரையோ
வெண்ணைதிருடியுண்டு மிகவிடைச்சிகையாலே
கட்டுண்டபுத்திகளை காட்டாதேமாயவரே
துருசாயெழுந்திடா துன்மாக்கசண்டாளா
சேஷ்டக்குரலுமிட்டுக் கூப்பிட்டாள்சுந்தரியும்
ஐயாபெருமாளே என்றலறிக்கூப்பிட்டாள்
செயப்பெருமாளும் திருட்டுகுரட்டையிட்டார்
மாயன்மகளாரும் வயிற்றிலறைந்துகொண்டு

இரணியனைகொன்ற இராகவா நித்திரையோ
மாமன்றனைகொண்ட மதிகேடா நித்திரையோ
இராவணனைக்கொன்ற இராமனே நித்திரையோ
நிரணியோ நூற்றுவர்க்கும் மார்கண்டசண்டாளா
மலடன்கிரியோ இரன் வாய்ந்ததிரவியத்தை
திருடினையோ வையமே இரங்கெட்டபுத்தியிதோ
நெடியதோர்வாலியை நெஞ்சிலேப்பிளந்தோனே
கடியதொருநித்திரையுங் கனமாகநானறிவேன்
அடியேனுன்பின்னை ஐயா நான்மனம்பொருத்தேன்
கடுதானவார்த்தையுடன் கபடா நீயெழுந்திரடா
அடியாகப்பேசினவனை யான்சும்மாவிடுவதில்லை
அல்லவாடாமாயா அறிவுகெட்டகோபாலா
இப்படியேசொல்லி எடுத்தெறிந்துகூப்பிடச்சே
ஆலித்தெழுந்திருந்தார் ஆயன்பெருமானும்
தன்மகளைக்கண்டு தலைகுனிந்துக்கொண்டாரே
ஐயரையுங்கண்டு அடிவணங்கித்தெண்டனிட்டாள்
தெண்டனிட்டசுந்தரியை திடுக்கென்றுதானெடுத்து
பொன்னனையே பேரி புழுதிபடசேதியென்ன
வந்ததொருகாரியத்தை வகையுடனேசொல்லுமென்றார்
எழுந்திருந்தசுந்தரிதான் எதிராகநின்றுகொண்டு
தகப்பனேநீயெனக்கு தாயாதியல்லவோடா
பொன்னுக்குவீங்கியடா பொல்லாதமாட்டிடையா
இடபுத்திபிடரியிலே என்பார்கள்வையகத்தில்
மடபுத்தியானாயோ மதிகெட்டுப்போனாயோ
திரியோதிரன்பொன்னுக்குச் செலவுகளில்லையடா
பொன்னும்பொருளும் புலையன்படைக்கலையா
திரவியந்தான்வேண்டுமென்றால் தேவியரைக்கொடுத்து
அத்தைமகனிருக்க அயல்நாட்டான்வருவானே [விடு
மாமன்மகனிருக்க மறுநாட்டான்வருவதென்ன
பொன்னாசைகொண்டு பெண்ணை நீவிற்கலாமோ
குள்ளநரிகதைபோல கொடுமன்னன்வீற்றிருப்பான்
அப்போதமாயன் அகமகிழ்ந்துகொண்டாட
அருமையிலே அழகானசுந்தரியே
அழகுள்ளநரிகதையை கூறுமென்றுதானுரைத்தார்

## சுந்தரி தன்கணவனுக்கு உவமானமாகச் சொல்லிய குள்ள நரிக்கதை.

கள்ளப்பெருமானே கண்ணனேகேளுமென்று
வந்தவழிதனிலே மாட்டிறைச்சிதானிருக்க
ஒருகுள்ளநரிகண்டு குதிருடன்றோடிவந்து
மாட்டிறைச்சிதன்னை வகையாகக்கௌவிக்கொண்டு
ஆற்றங்கரையில் அடைவுடனேவரும்போது
இடதுபுறமாக விருக்கின்றதண்ணீரிலே
வாளைமீன் துள்ளி வலதுபுறத்தில்விழ
வாய்க்கறியை நிலத்தில்வைத்து வாளையைப்பிடித்துதாம்
வாளைமீன் தப்பி வரையாற்றில் தான்விழ
நிலத்தில்வைத்தமாட்டிச்சி நின்றதொருசெம்பருந்து
தாவிபிடுங்கிக்கொண்டு கானகமேபோய்விட்டே
மாட்டிறைச்சியும்போச்சு வாளைமீன்தான்போச்சு
வானத்தைப்பார்த்து மதிமயந்து நின்றதுவாம்
அந்தப்பருந்தைப்போல் அபிமன்னனெனைக்கொண்டு
போனான்காண்மாயவரே புத்திகெட்ட ஐயாவே
குள்ளநரிபோல் முடிகெடுவான்திரியோதிரன்
பார்த்திருப்பானப்போது பல்லைத்திறந்துகொண்டு
இந்தக்கதைதனைக்கேட்டு இயலாகமாயவரும்
சிந்தைகுளிர்ந்து திருமுகந்தானோக்கி
பின்னையுமேமாயன் பிரியமுடன்சொல்லலுற்றார்
அல்லகாசுந்தரியே அழகுமயிலாளே
திரியோதிரனுக்கு திரவியங்கள்மெத்தவுண்டு
இராச்சியங்களெல்லாம் நாகமுடியோனும்
ஒருகுடைக்கீழாக உலகமெல்லாமாளுகிறான்
ஆளும்திரியோதிரனார் அவன்மகன்லக்குணற்கு
பெருமையுள்ளமன்னன் பலத்தால்பெரியவன்காண்
உன்னழகுக்கேற்ற ஒளியுள்ளலக்குணன்தான்
உன்-அத்தைமகனென்றால் அழகுகெட்ட அபிமன்னன்
மொட்டைத்தலையன் முட்டிக்கால்தட்டியவன்
நாடுதனிலேபிச்சை நலமாயெடுக்கிறானே
என்றுபெருமான் எடுத்துரைத்தாரிவ்வார்த்தை
மாயன்மகள்சுந்தரியாள் மனஞ்சலித்துதான்கேட்டு
திரியோதிரன்பண்ணமோ சீமாகப்பேசுகிறாய்

ஆட்டிடையாகள்ளா அசடாகுடிகேடா
ஒருவன்பெண்ணையொருவன் இச்சித்ததைகேளாய்
உபாத்தியாயர்கதைபோல் வருகுமடாயிப்போது
என்றுதான்சுந்தரியாள் இயலாகக்கூறலுற்ருள்

இதுவும் உவமானமாகச் சொல்லிய உபாத்தியாயர் கதை.

அப்போதேகேட்டு ஆயன் மனமகிழ்ந்து
உபாத்தியாயர் தன்கதையைவகையாகச்சொல்லுமென்ருர்
அப்போதுசுந்தரியும் அடைவாகச்சொல்லுகிருள் [ர்
ஆயனேவுன்னைப்போல அறிவுகெட்டமன்னவனும்
இராச்சியத்தையாண்டு நாடொருமைசெய்கையிலே
அவனுக்கொருமகள் அதிகசவுந்தரியாள்
அந்தநல்லபெண்ணை அழகுள்ளபூங்கொடியை
ஐந்துவயதில் அரிவரியவோவேணுமென்று
வைகுந்தனென்னும் உபாத்தியாயரையழைத்து
வாத்தியாயர்பள்ளியிலே மகளைப்படிக்கவைத்தார்
ஐந்துவயதில் அரிச்சுவடிமுதலாக
ஆத்திச்சூடி நல்ல அறிவானமூந்திரிலக்கம்
கல்விழுக்கம் கலந்ததொருவேழமுகம்
ஒன்பதாம்வயதில் உயர்ந்ததோரெண்சுவடி
பத்துவயதில் பாரச்சுவடியான
நிகண்டுதிவாகரமும் நிகரானஇலக்கணமும்
காரிகையுரைச்சொல் கனல்நெடியவெண்பாவுடன்
இத்தனையுந்தான்படித்து இயல்பாகவரும்போது
ஒருநாட்பொழுதிலே உயர்ந்தபள்ளிக்கூடத்தில்
பொழுதுபோகுமுன்னே பிள்ளைகளையனுப்பிவிட்டு
வைகுந்தனென்ற வாத்தியாரப்போது
மன்னன்மகளை வகையாகத்தானிருத்தி [ளாய்
அடிபெண்ணேயுன்பேரில் ஆசைகொண்டேன்வெகுதா
மாய்கையென்றவாசை மறப்பதில்லைபெண்ணங்கே
என்னுசைதீர்க்கவென்று இயம்பினன்வைகுந்தன்
அப்போதுமங்கையரும் ஐயோவென்றழுது
என்னபுத்திநீர்தான் இயம்பலுற்றீர்சற்குருவே
ஐயாவேநீர்தானும் அவ்வார்த்தைபேசாதீர்
படிப்பித்தஉபாத்தியாயர் பாங்காகவென்பார்தகப்பன்
கைச்சரசம்செய்யாதீர் காரணரேயென்குருவே

என்றுதான்மன்னன்மகள் இவ்வார்த்தைதானுரைக்க
அப்போதுவிசாரமிட்டு ஆனவைகுந்தன்
அல்லடி பெண்ணே ஆரணங்கேசொல்லுகிறேன்
நீதியைமெத்தசொன்னாய் நிலைமையுள்ளவாழ்மயிலே
நீசொன்னபடியே நிற்குதோபூவுலகில்
ஒருநாளைக்காகிலும் உயர்ந்தபஞ்சணைமீதில்
இருவருங்கூடி இளமான்கலையதுபோல்
விளையாட நீவாராய் வெற்றியுள்ளபூங்கொடியே
உபாத்தியாயர்சொல்ல மங்கையருமேதுரைப்பாள்
ஐயாஉனக்கடியாள் ஆண்பிள்ளை அல்லவோ
மெய்யாகப்பேசுகிறீரோ வீண்பேச்சுவிட்டுவிடும்
என்றுசொல்லிமங்கை யியலாகவுரைத்துவிட்டாள்
அப்போதுஉபாத்தியாயர் ஆனதுயரமுடன்
மங்கையரைவீட்டிற்கு வகையாயனுப்பிவிட்டான்
உபாத்தியாயர்தானும் வஞ்சிபகைநெஞ்சில்வைத்தான்
இராசாமகளும் நடந்துசென்றாள் வீட்டுக்கு
வீட்டுக்குள்தான்புகுந்து விபரமுள்ளமங்கையரும்
கூட்டுத்தொகைகூட்டும் கொத்தானபுத்தகத்தை
கொண்டுவைத்துமேதானும் மங்கையருமிருந்துவிட்டா
மற்றுநாட்காலையிலே மங்கையருந்தான்திரண்டாள் [ள்
அப்போதுராசன் அகமகிழ்ந்துகொண்டாடி
வைகுந்தனென்னும் வாத்தியார்தனையழைத்தான்
அப்போதுவாத்தியார் ஆனதொருவியாகூலமாய்
என்னசெய்வேனென்று ஏங்கிமனந்தளர்ந்து
மன்னர்மனைக்கு வைகுந்தன்வந்துவிட்டான்
இராசாவுமப்போது நலமுடனேசொல்லுகிறார்
என்-அருமைமயிலாள் ஆரணங்குயென்மகளும்
வெள்ளிக்கிழமையிலே விடியவொருசாமமுண்டு
உத்திராடநட்சத்திரம் உகந்தபிரதமையில்
இந்தநல்லவேளையிலே இயலானயென்மகள்தான்
புட்பவதியானாள் புராணத்தைப்பாருமென்றான்
அப்போதுவைகுந்தன் ஆனதொருவடெடுத்து
சாஸ்திரத்தைப்பார்த்து சலிப்பாகத்தானிருந்தான்
அப்போதுமன்னன் அடைவாகத்தான்பார்த்து
உபாத்தியார் நீதான் மதிமறந்துயிருப்பானேன்
சொல்லுமையாவென்று சொன்னாரேராசாவும்

வைகுந்தவாத்தியார் மனதுதுயரமுடன்
என்னசெய்வோம்ராசாவே யியல்புடையவுன்மகள்தான்
உன்மகள்திரண்டநாள் உலகுக்கழிவுவரும்
ஆண்டவனே ராசாவே அரண்மனைக்கழிவுவரும்
இந்தவொருபெண்ணை நீர் யியல்பாகவைத்திருந்தால்
சீமையிலெங்கும் தீப்பிடிக்குமப்போதே
என்றுசொல்லிவாத்தியார் இவ்வார்த்தைதானுரைக்க
மன்னவனுமப்போது வாயிலடித்துக்கொள்ள
வைகுந்தவாத்தியார் வகைவார்த்தைதனைச்சொல்வான்
பொன்பேழைகொண்டுவந்துபெண்ணையதனில்வைத்து
தாலியுங்கூறையும் தரிக்குமுடைமைகளும்
ஒருவரிசைஉடைமையெல்லாம் ஒப்பமுடனதில்வைத்து
ஐந்துகட்டுகட்டி அரக்குமுத்திரைதான்போட்டு
ஓடுகிறவாற்றிலே ஒழித்துவிடும்ராசாவே
தோஷங்களெல்லாம் தொலைந்துபோமத்தோடே
அப்போதுமன்னன் ஆனவியாகூலமாய்
பொன்பேழைகொண்டுவந்து பெண்ணையதனில்வைத்
ஐந்துகட்டுகட்டி அரக்குமுத்திரைதான்போட்டு [து
ஐயோமகளேயென்று அழுதானேமன்னவனும்
அத்தைமகனிருக்க ஆற்றோடேபோறாயோ
அழுதுபுலம்பிமன்னன் ஆற்றிலேதள்ளிவிட்டான்
உபாத்தியாயரப்போது வகையாய்த்தானெழுந்து
பள்ளிக்கூடத்து பசங்களைவிட்டுக்கொண்டு
புனலாற்றங்கரையில் பிரியமுடனோடிவந்து
பேழைவருகுதடா பிடியுங்களென்றுசொன்னான்
வழிபார்த்துக்கொண்டிருந்தான் வைகுந்தனப்போது
அப்படியங்கே யமர்ந்திருக்கும்வேளையிலே
பேழைவருகுதையா புனலாற்றங்கரையோரம் [ன்
அவளுடையஅத்தைமகனவ்விடத்தில்வேட்டைவரா
வேட்டைகளாடி வேங்கையொன்றுதான்பிடித்து
கூண்டிலடைத்துக்கொண்டு கொற்றவனுங்கொண்டுவா
வேட்டையுஞ்சிக்காமல் விடுபட்டுவாரானும் [ரான்
அவ்வேளையில்பேழை ஆற்றோடேவந்ததுகாண்
கண்டுமேமன்னவனும் களித்துமனமகிழ்ந்து
ஆடாசேவகரே ஆனதொருமந்திரியே
பேழையடா உங்களுக்கு பேழைமுதலெந்தனுக்கு

என்றுசொல்லிராசா இயல்பாகத்தானுரைப்பான்
நல்லதென்றேமுடியே நாலுபேர்பிடித்தார்கள்
பேழைதனைக்கொண்டு பிரியமுடன்வைத்தார்கள்
பேழையில்பெண்ணாகியொரு பொற்கொடியுந்தானிருந்
இராசாக்களுக்கேற்ற நல்லதொருபெண்ணாச்சு [தாள்
எங்களுக்கேவாழும் விலைவரியுந்தானாச்சு
நீ-ஆரென்றுகேட்க அப்போதுரைக்கலுற்றாள்
பொல்லாதவினையிலே புத்திபறிந்தேனென்று
ஓடுகிறதண்ணீரில் உகந்துதான்தள்ளிவிட்டான்
வந்தவாலாற்றை வகையாகச்சொல்லிவிட்டாள்
கேட்டந்தராசாவும் கிளிமொழியைத்தானெடுத்து
பெண்ணிருந்தபேழையிலே பெருவேங்கைதனையடைத்
ஓடுகிறதண்ணீரில் விட்டுவிட்டானுத்தமனும் [து
மாமன்திருமகளை வகையாகத்தானெடுத்து [ன்
பல்லக்கில்வைத்துக்கொண்டுபண்புடனேவந்துவிட்டா
அப்போபேழைவருகிறதைப் புனலாற்றங்கரைதனிலே
வாத்தியார்கண்டு மனதுசந்தோஷமுடன்
வாசிக்கும்பிள்ளைகளை வகையாகத்தான்பார்த்து
ஆற்றில்போய்ப்பேழைதனை யன்பாய்ப்பிடியுமென்றான்
நீந்திப்பிடித்தார்கள் நேர்த்தியாய்ப்பேழைதனை
எட்டிப்பிடித்துமே எடுத்தார்கள் தலைமேலே
எடுத்துவந்தபேழைதனை வைத்தார்கொலுதனிலே
பரிவுடனேதன்வீட்டில் பாங்காகத்தானிறக்கி
பள்ளிக்கூடத்துப் பசங்களைத்தானழைத்து
மங்கிலியந்தான்தரிப்பேன் வாழ்வேந்தன்மங்கையற்கு
தார்வேந்தர்வைகுந்தனார்சதாஸ்தென்றுசொல்லுமென
அப்போதுவாத்தியார் அன்பாகத்தான்மகிழ்ந்து [ரூர்
சோபனகலியாணது சீக்கிரமாய்முடிக்கவேணும்
தலைவாசலையடைத்து தாப்பாளும்பூட்டிவிட்டான்
பேழையுடன்வந்த பேடையவளேயென்று
பூங்காவனந்தனிலே போயிருக்கச்சொன்னானே
கலியாணசோபனம் கலந்துசெய்வோமென்றுசொல்லி
கட்டையவிழ்த்தானே கட்டழகன்வைகுந்தன்
வேங்கையுந்தானெழும்பி மிகவேபசிதீர
குறலைப்பிடித்துதங்கே குடித்துதேவைகுந்தனை
வேங்கையப்போது வெளிப்பட்டுப்போனதுவே

அந்த-வேங்கையோடொக்குமையா விஜயன்மகன்மைத் [துனரும்
வாத்தியோடொக்குமையா மடையன்பெற்றலக்குண னு [ம்
மாயன்பெருமாளே மன்னவனே கேளுமினி
கற்றூணைமேலே கல்லுவண்டிவந்தாக்கால்
கல்லுக்குசேதமோ கற்றூணைக்குசேதமோ
கல்லுவண்டிக்கொக்குமையா காண்டீபன்பெற்றபிள்ளை
கற்றூணைகொக்குமையா இரியோதிரன்பெற்றபிள்ளை
கொக்குத்திரளிலே இராசாளிபுகுந்தாப்போல்
கொக்குக்குலக்குமையா குருடன்பெற்றூன்நன்மகனும்
இராசாளிக்கொக்குமடா நல்லத்தைதன்மகனும்
அவர்களுடையசவுரியம் அறிந்துமிகக்கண்டறிந்தும்
பஞ்சவர்கள்சாதிவகை பாவியறியாயோடா
ஐவருடவீரியமும் ஆண்மையறியாயோடா
முன்னேயுன்தங்கையவளை மொய்குழலாளத்தையவளை
இரியோதிரனும்வந்து தீவிரமாய்க்கொள்ளுகையில்
பலராமரிடத்தில்வந்து பரியமதுதான்கொடுத்து
மண்மேலேதானிருந்து மங்கிலியந்தானெடுக்க
அப்போது அர்ச்சுனரும் ஆகாயமாகவந்து
சந்நியாசிவேடங்கொண்டு தேர்விசயனப்போது
தாலியைத்தான்பிடுங்கி தாலிகட்டி அப்போது
அர்ச்சுனனுர்தேவியென்று அறியவேதாலிகட்டி
வெட்கஅடித்தாரே விசையனுரென்னம்மான்
அப்படிக்கொற்றவனை அறிந்திருந்துளன்தகப்பா
பஞ்சைபாய் நீயும் பணத்துக்குஆசைவைத்து
உன்னுடையசாதிபோல வுத்தமனேபார்த்தாயோ
மடபுத்தியாலே நினைத்தாயோமாட்டிடையா
பெண்சாதிதானிழந்து போனுயேமுன்பிறப்பில்
அரக்கனுந்தேவியைத்தான் அழைத்தேர்டிப்போனுனே
சீதையானதேவியவை சிறையிலேவைத்தானே
ரோஷமுனக்குண்டோ துரோகிப்படுவானே
இப்படிசொல்லியல்லோ எசினுள்சுந்தரியும்
இன்பமுடன்கேட்டு இருதயத்தில்தாழைத்து
வாயைத்திறவாமல் மறுவார்த்தைபேசாமல்
தலையைக்குனிந்துகொண்டு சுவாமியிருந்துவிட்டார்

சுந்தரி தன்தகப்பனிடத்தில் சபதமிட்டது.

அப்போதுசுந்தரியும் ஐவர்மனமறிய
பருத்தியும் ஆமணக்கும் பரிவாய்விதைத்திடுவேன்
துவாரகாபுரியெல்லாஞ் சுட்டுக்கரியாக்கி
திரியோதிரன்கூடச் சேனைகளுள்ளதெல்லாம்
கரியாக்கிசுட்டு கடலிலேபோட்டுவைப்பேன்
ஆகாதலக்குணனை ஐந்துகுடுமிவைத்து
தலையைச்சிரைக்கச்சொல்லி சவுக்காலேதானடித்து
அரசாணிக்காலுடனே அவனையுங்கட்டிவைத்து
ஆயிரம்பெருந்தீயை அவன்தலையிலேதிவைத்து [து
மற்றுமுள்ளபேரையெல்லாம் மரத்துடனேகட்டிவைத்
அத்தைமகனென்புருஷர் அபிமன்னராசாவை
தத்துவமாகத்தாலி தரிப்பிக்கப்பண்ணிவைப்பேன்
என்றுசொல்லிசுந்தரியும் பேசிசபதமிட்டாள்
மாயன்பெருமாளும் மனதுபிரியமுமாய்
தாயேமகளே எனதன்பானசுந்தரியே [மா
பஞ்சவர்களாண்டமனையெல்லாம் பார்த்துமகிழ்ந்தேனம்
அவர்கள்-காடேகுடியிருப்பு கானவேடைவிளக்கு
வீடேதுமில்லை மிகவாழத்தேசமில்லை
நாடேதுமில்லை நல்லமனைதானுமில்லை
காணியுமில்லை கழுகுவளநாடுமில்லை
ஏழையர்களாருலும் இந்தவுலகிலில்லை
ஊருமில்லைபேருமில்லை உற்றுறவுமில்லை
ஆனபடியாலேதான் அஸ்தினபுரிக்கரசன்
தேசத்தழகன் திரியோதிரப்பெருமான்
ஆனையுள்ளான்சேனையுள்ளான் அண்டாதனமுள்ளான்
தேசமெங்கும்ஆளவல்லான் சேவகங்கள்பண்ணவல்லா
அவனுக்கெதிரான அரசர்கள்யாருமில்லை [ன்
ஆனபடியினல் அம்மாகேள்கண்ணேயிப்போ
இலக்குணர்க்கென்றுசொல்லி நாளுமுகூர்த்தம்நாளுமி
ஆளவிடந்தேடி அரசுபுரிந்தேனம்மா [ட்டேன்
வாழுமிடந்தேடி வாழைபதித்தேனம்மா
ஒன்றுங்குறையுமில்லை உத்தமியேஉந்தனுக்கு
அப்போதுசுந்தரியும் ஆன [illegible]ன்
வந்தாளேதாய்மனைக்கு மாளிகையிலுட்புகுந்தாள்
ஆத்தாளைக்கண்டு அடித்துப்புரண்டழுதாள்

அலமேலுமங்கையரே ஆட்டிடையன்தேவியரே
மங்கையரே நாயகியே மாட்டிடையன்தேவியரே
இப்படித்தான்செய்யாரே ஈனங்களில்லாமல்
சாதிகெட்டவுங்களுக்கு சாவுவரவில்லையோதான்
பணத்துக்கும்பொன்னுக்கும் பாதலித்துநின்றீர்களோ
இரியோதிரன்சகுனி சீரைக்குலைத்தானே
பாவிதிரியோதிரன் பணமெத்தத்தந்தானே [ன்
என்னையவன்கொள்ளவந்தால இளமையிலேகெட்டழிவா
வேசிமகன்லக்குணர்க்கு விரல்கொடுக்க நீதியுண்டோ
தாசிமகன்லக்குணர்க்கு தலைசாய்க்க நீதியுண்டோ
சுண்டுவிரல்பிடித்து சுத்திவர நீதியுண்டோ
ஒருதாலியென்றிருந்தேன் உலகத்திலுள்ளபடி
இருதாலியென்றிருந்த தெந்தன்விதிவசமோ
சாண்கயிறு பஞ்சமோ என்னுயிரைமாய்ப்பதற்கு
நஞ்சுமலரியும் இடையாதோராச்சியத்தில்
பொன்னுங்கயிறெடுத்து பொருந்தக்கழுத்திலிட்டு
பூப்போலஎன்னுயிரை போகவறியேனே
ஆகாப்புலையனுக்கு ஆசைதான்சொன்னீர்களோ
வெட்கந்தானில்லையோ மெல்லியரேதாயாரே
இக்கற்றவுங்களுக்கு தெய்வந்துணையாமோ
வயிற்றைக்கிழித்துதான் வாளைவாங்கிவைப்பேன்
இருவரையுங்கொன்று எமலோகமோட்டிடுவேன்
அவனையுங்கொன்று அனுப்புவேன் ஆகாசம்
என்றுசொன்னாள்சுந்தரியும் இட்டாள்சபதமெல்லாம்
மகள்முகத்தைப்பார்த்தாளே மங்கையவள்மேலும்
என்மகள்சுந்தரியே இந்தவகைநானறியேன்
கலியாணப்பேச்சுகளை காதிலேயுங்கேட்டறியேன்
இரியோதிரன்சேனை இரள்வந்துசென்றார்கள்
அவ்வளவுதான்சொல்லக்கேட்டேன் மறுவார்த்தைநா
பெண்வந்துகேட்ட பேர்களைநானறியேன் [னறியேன்
என்றுசொல்லிசுந்தரிக்கு எடுத்துரைத்தாள்லட்சுமியும்
நல்லதுநல்லதென்று நடந்தாளேசுந்தரியும்
தாதியுடன்கூட தன்மனைக்குவந்துவிட்டாள்
மாணிக்கத்தொடிகையேறி வந்தாளேசுந்தரியும்
அரண்மனைக்குவந்து ஆசனத்தின்மீதிருந்து
ஐந்துபோர்தாதிகளை அண்டையிலேதானழைத்து

ஆலோசனைசெய்து ஆங்காரகோபமுடன்
அபிமன்னராசனுக்கு ஆளனுப்பவேணுமென்று
ஓலையெழுதென்று உத்திரவுசொன்னுளே
தாதிகளுமப்போது சம்மதித்துக்கொண்டார்கள்

சுந்தரி அபிமன்னனுக்கு ஓலையெழுதுவது.

ஓலையெழுதவென்று உத்தமியாள்சுந்தரியும்
வண்ணக்குருத்தோலை வாரியவளொப்பமிட்டு
சுழப்பனையோலை இருபக்கங்காம்பறிந்து
தாளிப்பனையோலை தலைபக்கங்காம்பறிந்து
விநாயகரைப்பூசைபண்ணி விக்கினரைத்தோத்தரித்து
சிவசிவாவென்று சிவனுரைத்தோத்தரித்து
வந்தெனைக்குமுன்னடைவாய் வள்ளிமணவாளா
மாயோன்மருகோனே மலர்ப்பாதந்தெண்டனிட்டேன்
மாமிசுபத்திரைக்கு மனமுவந்துதெண்டனிட்டேன்
மைத்துனரேயுன்பாதம்மலர்தூவித்தெண்டனிட்டேன்
அபிமன்னராசனுக்கு அடிவணங்கித்தெண்டனிட்டே
ஓலையெழுதுகைக்கு உவமைமொழி நானறியேன் [ன்
வாசகங்கள்தானெழுத வகையறியேன்மைத்துனரே
என்றுசொல்லிசுந்தரியும் எழுதுகிறாள்வக்கணையாய்
தேசத்தழகுமன்னன் திரியோதிரன்சகுனி
கர்னனுடனேசேனை கடல்போலநிறைந்தது
வல்லமைபேசியெங்கள் மாயவரைப்பெண்கேட்டார்
நல்லமுகூர்த்தம் ராசிகளுந்தான்பார்த்து [ராம்
லக்குணர்க்குவேணுமென்று நாள்பார்த்துக்கொண்டா
பொன்மெத்ததாரேனென்று பேசினானும்திரியோதிரன்
மன்னர்பெருமாளும் மதிமயங்கியப்போது
செல்வப்பெருமாளுந் திரவியத்தைவாங்கிவிட்டார்
பொன்மெத்தவாங்கி பெருமாளும்சம்மதித்தும்
என்னையந்தலக்குணர்க்கு இசைந்துகொடுக்கவேதான்
பகல்முகூர்த்தமென்றுசொல்லி பாக்குகள்தான்மாற்றி
இன்றைக்குஎட்டாநாள் இசைந்தசுக்காவாரமென்று
கலியாணமுகூர்த்தமிட்டு போனான்திரியோதிரன்
தேசத்தழகுமன்னன் திரியனும்போனபின்பு
இந்தவிசேஷமெல்லாம் என்தாதிகேட்டுவந்து
சொல்லினாளெந்தனுக்கு தோழியவள்செங்கழனி
செங்கழனிசொல்லவேதான் சிந்தைகரைந்தழுதேன்

அப்போதுமாமரண்டை அடித்துப்புரண்டழுதேன்
பேசாதும்பேசி பெருமாளுடன்சண்டையிட்டேன்
என்னசண்டைசெய்தாலும் எரெடுத்துப்பார்க்கவில்லை
என்தகப்பன்முன்பாக இட்டேன்சபதமெல்லாம்
அஸ்திறைபுரிநகரம் ஆளதுவாரகையும்
பரிசுத்தமாகச்சுட்டு பாழாக்கிப்போட்டிடுவேன்
சுட்டுக்கரியாக்கி ஆலைகளாட்டிப்பேன்
மொட்டைத்தலைக்குணனை எட்டிமயிர்பிடித்து
கொள்ளவந்தலைக்குணனை குடுமிதனைசிரைத்துவைந்து
கள்ளன்குருடனைநான் கடுகத்தலைசிறைத்து
அபிமன்னர்வாளாலே ஐந்துகுடிமியிட்டு
அரசாணிக்காலோடே அவனையுங்கட்டிவைத்து
ஆவின்சாணிகொண்டு அவன்தலையிலேவைத்து
ஆயிரம்பெருந்திரியால் அவன்தலையில்விளக்கேற்றி
மணைமேலேதானிருந்து மைத்துனரேயுன்கையால்
மங்கிலியங்கட்டி மகிழ்ந்திருப்பேனென்றுசொல்லி
சபதங்கள்நானுமிட்டு தாய்மனைக்குத்தான்போனேன்
சண்டைமெத்தநான்தொடுத்தேன் தாயாருடன்கூட
சத்தியங்கள்கூறினள் தாயாரிபேனென்று
பின்னையுமெத்தப் பெரியசபதமிட்டேன்
சபதமழிக்காதே தயவாகமைத்துனரே
சீக்கிரமாகமைத்துனரே செய்தருளுதம்மங்கிலியம்
வந்துஎன்னையிப்போ மங்கிலியங்கட்டுமென்றுள்
பள்ளிக்கூடந்தனிலே இருந்துபந்தடித்தோமே
பஞ்சைசிரிக்கியைப்போல பத்தாவேநானிருந்தேன்
கஞ்சைசிரிக்கியைப்போல் கூடத்திரிந்தேனே
அப்படித்தானென்றுதே அபிமன்னராசாவே
வளர்ந்தேன்சமைந்தேன் வடிவுமிகவானேன்
மயிரழகைக்கண்டாலே மயங்குவீர்மைத்துனரே
கொண்டையழகைக்கண்டால் கொற்றவனே நீதறியாய்
நெற்றியழகைக்கண்டால் நீபொருக்காய்மைத்துனரே
மூக்கழகைக்கண்டால் மூர்ச்சையாய் நீவிழுவாய்
கண்ணழகைக்கண்டால் கனைத்துவிடுவாய்மைத்துனரே
கண்புருவம்ரெண்டழகும் காமனார்வில்லதுபோல்
மேற்புருவம்இரண்டும் வேப்பிலைச்சாயலையும்
சிவிமுடித்தகொண்டை சிறுத்தபம்பாப்போலே

மனைவரைத்தான்மயக்கும் மதிமுகத்தினதிசயமும்
வடிவானகாதிரண்டும் வள்ளிக்கொடியதுபோல்
கூறியமூக்கிரண்டு குமிழம்பழமதுபோல்
வாயழகைக்கண்டால் மயங்குவாய்மைத்துனரே
பல்வரிசையாணிப் பவழமுத்துப்போலிருக்கும்
தோளழகுமைத்துனரே சொல்லுகிறேன் நீர்கேளும்
மூங்கிற்குழுத்தது போல மூனாத்தயிருதோளழகும்
மார்பழகைச்சொல்லுகிறேன் மைத்துனரே நீர்கேளும்
அகண்டமணிமார்பும் ஆபரணபூஷணமும்
இரண்டிஸ்தனமிரண்டும் செண்டாணபந்ததுபோல்
ஒப்புடனேநாளும் ஒளிவாயிருக்கிறேன்காண்
மட்டிடப்போகாது மைத்துனரேஎன்னழகு
ஆலிலைபோலாக அமர்ந்ததிருவயரும்
இடையழகுசொல்ல எனக்குத்தெரியாது
சிங்கத்துடையென்று செப்புவார்தோழியர்கள்
நடையழகுமைத்துனரே நல்லன்னம்போலிருக்கும்
முழங்காலின்பேரழகோ முனைசிரசுபோலிருக்கும்
கணுக்காலின்சீரழகோ கனத்தவிரல்போலிருக்கும்
குதிக்காலின்பேரழகுங் குவிந்தசெண்டுபோலிருக்கும்
பொருந்தியபாதமிரண்டும் புத்தகம்போலிருக்கும்
திருந்தியவிரலனைத்தும் செப்பமுடியாது
பவழம்பதித்தாப்போல் பாதவிரலழகும்
மைத்துனரே நீர்பார்த்தால் மயங்கிவிழுந்திடுவீர்
அரம்பையரைப்பார்க்கிலும் அதிகவழகாயிருக்கும்
மேனகைதிலோர்த்தமையு மெல்லியெனக்கிடல்லவே
மன்மதன்தேவியிலு மழகாயிருப்பேன்
இப்படியாய்தான்வளர்ந்து இருக்கிறேன்பத்தாவே
கொஞ்சமென்றுபாராதே கோபங்கள்வையாதே
உம்மைநினைத்து உமதுகணையாழியைதான்
கண்களொடொத்தி களித்துப்படித்திருப்பேன்
இப்படியாய்ச்சொல்லி யெழுதினாளோலையிலே
அவ்வேடுவிட்டு மறுவேடுதானெடுத்து
கோபித்தெழுதுகிறாள் கோபாலன்றன்மகளும்
பெருமாள்வயிற்றிலே பெண்ணாய்ப்பிறந்தேனே
அருமைகுலந்தேனே ஆக்கினைக்குள்ளானேனே
உளுத்தமமாமானேன் வுள்ளுருசெக்கானேன்

பட்டமரமானேன் பாழுருசெக்கானேன்
கட்டைமாமானேன் கன்றுகட்டுந் தும்பானேன்
கெட்டமாமானேன் கேடுகெட்டகொம்பானேன்
மட்டைமரமானேன் மாடுகட்டுந் தும்பானேன்
கானலிலேகாய்ந்த நிலவானேன்கண்மணியே
எட்டிப்புறத்திலே எழுத்தானேன்கண்மணியே
நாட்டுப்புரத்திலே நட்டநடவானேன்
ஆற்றில்கரைத்த புளியானேன் ஆணழகா
சேற்றிற்கவிழ்ந்த தேனானேன்தேர்வேந்தா
விழலுக்கிறைத்த நீரானேன்வித்தகனே
கானகத்திற்பெய்ந்த மழையானேன்பத்தாவே
அங்காடிக்கிட்ட பதரானேன் ஆண்டவனே [வே
இடையன்வெட்டுங்கொம்பானேன் என்னுடையபத்தா
மடையன்வெட்டுங்கொம்பானேன் மன்னர்பெருமானே
தாய்தகப்பனென்னை சதிசெய்துவிட்டார்கள்
நீரிப்போவந்தால் நிற்பேன் நிலைதரிப்பேன்
வாராமற்போனால் மாண்டிடுவேன்மைத்துனரே
என்னாணைமைத்துனரே என்தகப்பன் தன்னாணை
மாமன்மாராணை மடிவேனுன்மன்னவனே
போகமனம்வருமோ புத்திகெட்டுப்போனேனே
ஓலைகண்டபோதே நீயோடிவாராய்மைத்துனரே
ஆகாப்புலையன் அழிவானரண்மனையில்
நீதிநாலைசொன்ன நிர்ணயங்கள் தப்பாது
நாளையதினந்தான் நடந்தோடிவாருமென்றாள்
வாராமல் நீயிருந்தால் மானிடர்களெல்லோரும்
இருதாலிகட்டியென்று ஏசுவாரெந்தனையும்
நம்முடையஜாதியிலே நடக்குமோராசாவே
புருஷனொருத்தனென்று பூரித்தேன்ராசாவே
புருஷனிருவரென்று பிரித்தானேயாண்டவனும்
அதுவுந்தானில்லாமல் அபிமன்னராசாவே
கொண்டதைவிட்டாலும் குறித்தபெண்ணைவிடுவாரோ
பெண்ணைவிட்டாயென்று ஏச்சுபேச்சுமாகிவிடும்
கர்த்தாவேமைத்துனரே கடுகவேவந்திங்காண்
லக்குணனைக்கொன்று ரணபேரிகைபோட்டுவைப்பேன்
அவனையும்பிடித்துவந்து அரசாணிக்காலோடே
சிக்கெனவேதான்கட்டி சிரசைக்குயிவெட்டி

முக்குடிமிசிறைத்து மூன்றுவிளக்கேற்றிவைப்பேன்
சபைமன்னர்பார்த்திருக்க தலையிலேசாணிவைத்து
ஆயிரந்திரிபோட்டு அணிவிளக்கேற்றிவைப்பேன்
பார்த்திருக்கதாலிகட்டி பக்ஷமுடனிருப்பேன்.
நேர்த்தியாய்தாலிகட்டி நிர்வகிப்பேனிப்போது
சொன்னசபதமிது சும்மாயழியாமல்
மன்னவனே நான்சொன்ன வார்த்தையைத்தள்ளாமல்
என்னுயிதுவென்று என்புருஷாமைத்துனரே
மன்னவரே நீர்வந்து மங்கிலியந்தான்தரியும்
என்றுசொல்லிசுந்தரியும் எழுதினளோலையிலே
சுத்தமுடனே சுருளோலைதான்சுருட்டி
ஒப்பமுடன்போட்டு யுக்தியுடன்தான்சுருட்டி
கடைவோலையிட்டுக் கணையாழிமோதிரத்தால்
ஆரக்கால்முத்திரையும் ஆரணங்குதான்போட்டு
ஓலைச்சுருளை வைத்து வுத்தமியுமப்போது
செப்பமுடன்சுந்தரியும் சீக்கிரமாய்த்தான்நடந்து
வடக்குமுகமாகி வந்துநின்றுமங்கையரும்
சிவசிவாவென்றுசொல்லி செபித்தாளேமந்திரத்தை
பாட்டனைத்தானினைந்து பக்தியுடன்முன்பணிந்து

வாய்வுபகவான் சுந்தரியிடம் வருவது.

வடக்கேவெகுதூரம்வாய்வுபகவான்தான்கேட்டு[ன்முன்
பொட்டெனவேயோடிவந்துபுகழ்பொருந்திமுன்னே நி
பாட்டனைத்தான்பார்த்துமை கொடியும்தெண்டனிட்டு
வந்தீரோஎன்பாட்டா மனதுகுளிந்துவிட
உபசாரஞ்சொல்லி உட்காரவைத்தானாம்
பேத்தியயைத்தான்பார்த்து பேசுவாரப்போது
என்னை நினைக்கவந்த காரணமேன்பேத்தியரே
வல்லவியேசொல்லுமென்று வாயுராசன்கேட்க
சொன்னளேசுந்தரியும் திரியோதனன் துடுக்கை
பெண்கேட்கவந்ததும் பெருமாளிசைந்ததுவும்
அர்ச்சுனனுரென்மாமன் அவருடையபுத்திரனூர்
ஓலையெழுதிவைத்து உம்மை நினைத்தேனென்றுள்
என்றுசொல்லசுந்தரியும் எடுத்துரைப்பான்பாட்டனும்

### வாயுவுபகவான் சொல்வது.

அந்தவிசேஷம் அதுகேட்டுவாயுபகவான்
சுந்தரியைத்தான்பார்த்து சொல்லுவான்பாட்டனுமே
பஞ்சவர்கள் காடுறைந்து பணங்காசுமில்லாமல்
நாடுவிட்டுக்காடுறைந்து நல்லபதியிழந்து
வில்லிழந்துவாளிழந்து வீமாபுரமிழந்து
காய்கிழங்குதின்று காட்டில்திரிகின்றார்
சீமையில்லைபூமியில்லை செலவழிக்கசொம்பொன் இல்லை
நாடுநகரயில்லை நல்லமனை வீடுமில்லை
ஊருமில்லைபேருமில்லை வுற்றாருறவுமில்லை
படுக்கவிடமுமில்லை பள்ளிகொள்ளத்தாவுமில்லை
சுபத்திரையாளுன்மாமி சோற்றுக்கழுகிறாள்
தரித்திரப்பட்டு தடமாட்டமாயிருக்க
அபிமன்னனுக்குவாக்குபட்டா லாகாதுசுந்தரியே
திரியோதிரன்வீட்டிற் திரவியங்கள்மெத்தவுண்டு
கற்பக்குழலாளே கராம்பசுந்தேனே
இத்தனையுந்தான்பார்த்து இசைந்தானேவுன்தகப்பன்
வைக்கமிடமிருந்தும் வாழைபதித்தாண்டி
பூக்குமிடமறிந்து யுன்னைபதித்தாண்டி
காய்க்குமிடந்தேடி கமுகுபதித்தாண்டி
உண்ண நல்லசோறும் உடுத்தநல்லஆடையுண்டு
தின்ன நல்லபாக்குமுண்டு செலவழிக்ககாசுமுண்டு
எனக்குமெத்தசந்தோஷம் ஏற்றமுள்ளமாமயிலே
உத்தமியேஉந்தனுக்கு உறுதிகொண்டாய்சுந்தரியே
என்றுமேசொல்லி யெடுத்துரைத்தான்பாட்டனுமே

### சுந்தரி கோபித்தல்.

சுந்தரியும்தான்கேட்டு சுருக்காயெழுந்திருந்து
சந்திராயுதமெடுத்தாள் தன்பாட்டன்தலையறுக்க
தலையையறுத்து சமுத்திரத்திற்போட்டிடுவேன்
மார்பைப்பிளந்து வைகுந்தஞ்சேர்த்திடுவேன்
பாட்டனென்றுபாரேநான் பறக்கடிப்பேனுன் னுயிரை
திட்டமுடன்வாளுருவி சிரசைத்துணிக்கவந்தாள்

### வாயுபகவான் சொல்லுவது.

கண்டானேவாயுராசன் கன்னியுடசத்துவத்தை
அல்லடிபேத்தியரே அறியாமல்சொன்னேனடி

உன்மனந்தரியசொன்னேனடி வனக்கிளியேசுந்தரியே
பரியாசஞ்சொன்னேனடி பைங்கிளியேசுந்தரியே
நல்லதென்றுசொல்வாயோ நான்பாட்டேனென்பாயோ
வல்லவியேவுந்தன் மனதரியசொன்னேனடி
கோபித்துக்கொள்ளாதே கோபாலன்றன்மகளே
போகவிடைதாரும் பூங்கிளியேசுந்தரியே
ஆலயமழியுதடி அடிதொடைகள்நோகுதடி
வயிறுபசிக்குதடி வாயுலர்ந்துபோகுதடி
வயிற்றுக்குசோறுமிட்டு மறுசோறுமூட்டைகட்டி
போகப்பலன்கொடுத்தால் போவேனநான்சுந்தரியே
இப்படியாகச்சொல்லி எடுத்துரைத்தான்வாயுதேவன்
சொன்னவிசேஷமெல்லாம் தோகையுந்தான்கேட்டு
சற்றேநகைத்தருளி தாதிகளைத்தானழைத்து
ஆயிரக்கல அரிசி யடிசில்சமையுமென்றாள்
கட்டமூதுக்காயிரங்கலம் கன்னிசமையுமென்றாள்
அப்படியேதாதியர்க ளடிசில்சமைத்தார்கள்
செப்பமுடனற்கறிகள் திரளாய்சமைத்தார்கள்
வாழையிலைபோட்டு வட்டித்தாள்பாட்டனுக்கு
கொட்டினள்கோபுரம்போல் குவித்தாள்மலைபோல
சிறுமலைகள்போலே சேரவைத்தாள்நற்கறிகள்
அந்தமுடன்சுந்தரியும் அமுதுபடைத்தாளாம்
பாட்டனைசுந்தரியாள் பசியாறுமென்றுசொன்னாள்
வந்தானமூதுமுன்னை வாயுராசன்பாட்டனுமே
பிசைந்தானேசோற்றை யெல்லாமொருமிக்க
மூன்றுபிடியாய்ப்பிடித்து யுருட்டிமுகம்பார்த்து
சிவனேதுணையென்று விழுங்கிவிட்டான்வாயுராசன்
கஞ்சியும்சோறுமாய் கால்வயறு ஆச்சுதுகாண்
கட்டமூதுசோற்றை கனமாய்படையுமென்றான்
மூவாயிரங்கலவரிசி சமையுமென்றாள்மூப்பிகட்கு
சமைத்துபடைத்தார்கள் தாதிசமர்த்திகளும்
மூவருக்குப்பிரீதியென்று அன்பாய்புசித்தபின்பு
யாவருக்குப்பிரீதியென்று அன்பாய்புசித்தபின்பு
கைகழுவிவாய்துடைத்துக் கடுகிவந்தான்பாட்டனுமே
அதிப்ளவுவெற்றிலை யள்ளிரொம்பகைகொடுத்தாள்
ஓலைச்சுருளெடுத்து வுத்தமியுந்தான்கொடுத்தான்

போடா நீபாட்டாவென்று போற்றிவிடைகொடுத்தாள்
வாயுராசன்தான்வாங்கி மடியிலேவைத்துக்கொண்டு
மறுவார்த்தைசொல்லுகிறான் வஞ்சியாள்சுந்தரிக்கு
அடிபெண்ணே ஓலையை அவன்கையில்தான்கொடேன்
ஆக்கினைகள்செய்து அறுப்பாண்டிவாளாலே
பொல்லாதடையனவன் பூங்கொடியேயுன்புருஷன்
கிட்டதின்று நான்கொடுத்தால் வெட்டியெறிந்திடுவான்
கண்ணுக்குக்காணமல் காற்றூடேபோட்டிடுவேன்
ஓலையைநான்போட்டோடியேபோய்விடுவேன்
சம்மதியோ உந்தனுக்கு தயவாகச்சொல்லுமென்றான்
மாலைக்குழலாளும் மறுவார்த்தைசொல்லுகிறாள்
இந்தச்சுருளோலை யெப்படிதானாலும்
அந்தமுள்ளமைத்துனரவர்கையிலகப்பட
கொண்டுபோயோலையை கொடுவென்றாள்சுந்தரியும்[து
நலலதென்றுசம்மதித்து நடப்போயென்றெழுந்திருந்
கட்டமுதுமூட்டைதனைக் கைகொடுத்தாராயிரம்பேர்
சுண்டுவிரலிலே தூக்கியேகொண்டானே
போறேநான்பேத்தியரே போய்வாருமென்றுசொன்னு
பாட்டனைப்பார்த்துபட்சமுடன்தெண்டனிட்டாள் [ள்
அப்போதுதானும் அடியெடுத்துவைக்கலுற்றான்
இருப்பானெழுந்திருப்பானிளைப்பாரித்தான்போவான்
பார்த்தாளேசுந்தரியும் பாட்டன்பயணமெல்லாம்
எதடாபாட்டா இப்படிக்குநீநடந்தால்
ஆனைகுந்திபட்டணம் ஆறுமாதம்பயணமாச்சுக
என்சபதமெல்லாம் மெலிந்துபுகைந்துவிடும்
அப்பாலவர்வந்து ஆகிறகாரியமென்ன
மோசமும்பண்ண விசைந்தாயோவென்பாட்டா
நாளைதவறினல் நடக்குமோகாரியங்கள்
இல்லைதப்போனல் என்னுயிரழிந்துவிடும்
என்றுசொல்லிசுந்தரியும் இருந்தாள்துயரமுடன்

வாயுராசன் போகிறது.

அப்போதுவாயுராசனவன் முகத்தைதான்பார்த்து
மாலைக்குழலாளே மனுவொன்று நீகொடுத்தால்
ஐந்தாறுநாழிகையி லபிமன்னனிடம்போய்சேருவேன்
என்றுசொல்லிபாட்டனெடுத்துரைத்தான்சுந்தரிமுன்

ஒன்றுக்குமஞ்சாதே வுத்தமியேயென்றுசொல்லி
ஓலையைக்கொண்டே ஒருநொடியில்நான்போவேன்
சிமிட்டிவிழிக்குமுன்னே திரியோதிரன்படையை
அதட்டியரைக்கணத்தி லாடிபலியிடுவான்
உன்னைமணம்புரிந்து உலகாள்வான்கண்டாயோ
என்றுசொல்லிபாட்ட னெழுந்திருந்தாகப்போதே
கட்டமுதுவாங்கி கடுகிநடந்தானே
அண்டங்கிடுகிடென்ன ஆகாயந்தானதிர
எண்டிசையுந்தானடுங்க எமலோகந்தத்தளிக்க
நாடுகடந்து கரியமலைதான்கடந்து
நாடுகடந்து நல்லவனந்தானகடந்து
ஆறுகடந்து அரியவனங்கடந்து
இஞ்சிவனங்கடந்து எலுமிச்சையுட்புகுந்து
ஆனைகுந்திபட்டணத்தை யடுத்தானேவாயுராசன்
மாந்தோப்புசாலையிலே வந்துநின்றனப்பொழுது
ஆனைகுந்திபட்டணத்தில் அபிமன்னராசதுரை
தோழமார்தன்னுடனே துணையாகஆயிரம்பேர்
உண்டுவில்லுதானெடுத்து வுத்தமனூர்தன்மகனும்
அம்பெடுத்துவில்லெடுத்து அரிவாளுங்கையெடுத்து
தாயாரைச்சுற்றிவந்து சாஷ்டாங்கம்தெண்டனிட்டு
வேட்டைக்குபோக விடைதாருமென்றுசொன்னார் [தி
அப்போதுசுபத்திரையும் அபிமன்னனைத்தான்வாழ்த்
போய்வாருமென்று புகழ்ந்துவிடைகொடுத்தார்

## அபிமன்னன் வேட்டையாடுகிறது.

அங்கேவிடைபெற்று அபிமன்னன்தோழருடன்
கச்சுகளுந்தட்டிகளும் கட்டியபிமன்னனுந்தான்
சந்திரகாந்திதட்டிகட்டி தாமரைபூசுங்குவிட்டு
இந்திராதிதேவரெல்லா மிவனைவணங்குவார்கள்
வெளியேபுறப்பட்டு வேட்டைக்குத்தான்போனான்
நாடுகடந்து நல்வேட்டையாடுகிறார்
காடைகவுதாரி கலைமான்கடம்பைகளும்
மஞ்சள்குருவிகளும் மயிலுங்குயிலினமும்
விந்தைவிந்தைபட்சிகளும் விளையாடிதான்பிடித்தான்
கொண்டலாத்திவல்லூறுகோலமுடன்தான்பிடித்தான்
ஆற்றுக்குவந்து அபிமன்னராசாவும்

குப்பிகந்துவாயுமணல் குவித்திடும்வேளையிலே
மாயன்பெருமாளும் மனதிலொன்றுதானினைத்து
வேட்டையாடும்பாலனிடவீரியத்தைபார்ப்போமென்று
கிளிப்பிள்ளையாகவே கிருஷ்ணரெழும்பிவந்தார்
வந்தார்பறந்து மரத்தில்கிளியாயிருந்தா
அதனையுங்கண்டானபிமன்னனப்பொழுது
இதனை அடிக்கவென்று ஏற்றிவிட்டான்வில்லதனை
உண்டைவில்லுதானெடுத்து ஊடுருவத்தானடித்தான்
கிளிபிள்ளைதானும் கிளம்பிற்று அப்போது
கிளப்பிப்பறக்குது கேசரிமார்க்கமதாய்
பாலனபிமன்னனும் பாங்குடனப்பொழுது
வல்லூருடேகையை வானத்திற்போகவிட்டான்
அதுவுமிதுவும் அந்தரத்திற்றான்பறக்க
அபிமன்னராசாவு மதன்பின்னேதான்போனார்
தோழருமன்னவரும் தொடர்ந்தார்போல்போனார்கள்
கிளிபிள்ளைதானும் கெம்பீரமாய்த்தான்பறந்து
வாயுராசன்காட்டில் தொடர்ந்துபறந்தது
வல்லூரும்டேகையையும் வலுவாய்பறந்ததுகாண்
பறந்துதொடரவே பதுங்கிற்று அக்கிளியும்
மாயமாய்த்தான்பறந்து மறையோனாகமாயவனும்
பாட்டைவழியிலே வந்திருப்பாரப்பொழுது
கிளிப்பிள்ளைபின்னாகக் கிட்டிவந்தவல்லூரும்
மாயமாய்த்தான்போய் மரத்தின்மேல்நின்றது
இதுதன்பிறகே இரைக்கவேதானோடி
அபிமன்னராசாவு மக்காடேதான்வந்தார்
அப்போதபிமன்னன் கிளியைக்காணாமல்
மெத்தகிலேசமாய் விசாரமாய்த்தானிருந்தார்
வல்லூரைக்காணாமல் வரவழைத்தானப்போது
டேகையுங்கையேலே திண்ணையாய்வந்தது
அப்போதுபிராமணனை அபிமன்னன்தான்கண்டு
இதுயாருடையபட்டணமையாவேயென்றுகேட்டான்
துருவாசன்தன்னுடைய சொல்லையேபட்டணந்தான்
பட்டணத்தையெல்லாம் பாலனுஞ்சூறையிட்டான்
இப்படியாக இருக்கின்றவேளையிலே
வழியிலேநின்றமாயன் மறையோனும்போகையிலே
வாயுராசனங்குமப்போ மாயவனைத்தான்தேடி

எங்கிலும் காணுமே யென்செய்வோமென் றிருக்க
அப்போ பிராமணரு மவ்வழியேதான்வரவே
வாயுராசன்கண்டு மறையோனைத் தெண்டனிட்டு
ஐயா பிராமணரே அபிமன்னனைக்காணீரோ
என்றுசொல்லக்கேட்க எடுத்துரைப்பார்வேதியரும்
ஆரோ தெரியாதையா அரியா தபிள்ளையுமாய்
பார்த்தாலும்பாலகன்போல் பாய்ந்தாலும்புலியதுபோல்
வீரரையுஞ்சூரரையும் வென்றிடுவா னென்றவனை [ல்
பொல்லாதபாலவன் போல் கன்றெலித்திடுவான்
எதிர்த்தவனைக்கொன்று இருப்ளவாய்போட்டிடுவான்
கண்டவரைவெட்டிக் கழுவிலேயேற்றிவைப்பான்
அத்தனைக்கும்வல்லவனும் மறியாதபாலனுமாய்
தார்வாசல்பட்டணத்தை சூறைகளடிக்கின்றான்
நான்-யாசகத்துக்கின்று அறியமல்வந்துவிட்டேன்
கண்டேனவனையங்கே கலங்கிபயந்தவந்தேன்
எவனோதெரியாதையா அறிந்துகொள்ள நீர்வாரும்
குன்றேறி நீர்பார்த்து குறிப்பாயறியுமென்றார்
என்னத்துக்காகநீ ரிப்போது தேடுகிறீர்
அவனுடையகாரியம் ஆணமுசா நீருரைப்பீர்

வாயுராசன் சொல்வது.

வாயுராசனப்பொழுது வயணமாய்ச்சொல்லுகிறான்
மாயன்மகள்சுந்தரியாள் வரவிட்டாளென்னையிப்போ
இரியோதிரனுடைய செல்வனாலகுமாற்கு
பெண்ணைக்கொடுக்கவென்று சம்மதித்து என்தகப்பன்
பணமெத்தவாங்கியே பரியமிசைநதாலும
அதுகேட்டசுந்தரியும் அவலாகத்தான்சீறி
அபிமன்னனைக்கண்டு அவன்பதியுமிவனபதியுஞ்
சுட்டுக்கரியாக்கி சூறையிடவேணுமென்று
ஓலையெழுதி உளவாயெனக்கைகொடுத்தாள்
அதனைநான்கொண்டுவந்து அபிமன்னனைத்தேடுகிறேன்
என்றுசொல்லக்கேட்டு எடுத்துரைப்பார்வேதியரும்

வேதியர் சொல்வது.

ஆனாலும்நீயவன் அண்டையிலேபோகாதே
சூரியனை நீநினைத்தால் கருக்காகக்காயும்வெய்யில்

வெய்யிலிலேவேர்த்து விடாய்பட்டுத்தான்வருவான்
அவ்வேளை நீபார்த்து ஆணழகாதானெழும்பி
மாயமாய் நீபோட்டு மறைந்துபோவென்றுசொன்னார்
அப்படியாய்ச்சொல்லி ஐயர் நடந்துவிட்டார்
வாயுராசனுமப்போ வளர்ந்தகுன்றுதானேறி
உயரவேதானேறி ஊடுருகத்தான்பார்த்து
அப்போதுகண்டு அறிந்தானபிமன்னனென்று
வேதியர்சொன்ன விசேஷமதுமெய்யென்று
சூரியனைத்தான்பார்த்து சொல்லலுற்றாரப்பொழுது
ஐயாவேயிப்பொழுது அரைநாழிகைமாத்திரந்தான்
நீபதினாறுகண்ணாலும் பார்க்கவேவேணுமென்றார்
வாயுராசனைப்பார்த்து வகுத்துரைப்பான்சூரியனும்
காய்ந்தால்களைவருமோ கட்டழகாயிப்போதே
காற்றடங்கிநீர் நின்றால் கடுவெய்யல்தானாவேன்
களையுந்தவிப்பும் கடுகெனவேவந்துவிடும்
அப்படியே நீங்களும் அண்ணன்தம்பிதானிருவர்
காதுங்கனிவாயும் நால்வழிமூடி நின்றால்
யானுமேருட்டியாய் நன்றாயெரிக்குறேன்பார்
என்றுதான்சொல்ல இதுவுமெய்தானென்று
வாயுராசனப்போ வாய்நாடிதான்மறந்து
குகையில்மறைந்துமப்போ கூடாமல்தானினைத்தான்

### அபிமன்னன் வேட்டையாடிப் பந்தடிக்கிறது.

அப்போதபிமன்ன னருஞ்சூரைதானாடி
வெய்யலிலுங்கானலிலு மெத்தவெதும்பிநின்றான்
அபிமன்னதோழர்களும் ஆனதுரையன்னர்களும்
மெத்தவெதும்பி விடாய்பட்டார்தண்ணீரின்றி
தண்ணீர்கிடையாமல் தாகவிடாயாலிளைத்தார்
கண்டானபிமன்னனும் களைபட்டுவீழ்ந்தவரை
தாகவிடாய்தீரவென்றால் தண்ணீருங்கிட்டவில்லை
மாயமாய்ப்போகவே செய்தார்மகாதேவர்
எங்குமவர்திரிந்து ஏகலுற்றாரப்போது
ஆற்றருகேசென்று ஆருவோந்தாகமென்று
அபிமன்னனுந்தோழருமா யாற்றருகேவந்தார்கள்
தண்ணீர்விடாய்தீர்ந்து தாகந்தெளிந்தார்கள்
கூப்பிகந்துபாயமணல் குவித்திடும்மண்ணையெல்லாம்

மணலைக்குவித்து மன்னர்களும்தோழர்களும்
பந்துகளாடியே பாலன்விளையாடுவதும்
ஒப்பமுடனேடுவதும் ஓடியடிப்பதுவும்
நூறுபேர்தோழருமாய் நிற்பாரொருபக்கலிலே
இவன்தானொருபக்கலிலே எகிரியடிப்பதுவும்
சென்றுவிளையாடுவதும் நின்றுவிளையாடுவதும்
ஓடியடிக்கிறதும் ஒருவன்மேல்பாயுவதும்
மோதியடிக்கிறதும் முனைமுகத்தில் நிற்கிறதும்

வாயுராசன் காற்றடிப்பதும் ஓலையைவிட்டு ஓடுவது.

கண்டானேவாயுராசன் காளையிடசத்துவத்தை
பாலனிடசத்துவத்தை பார்க்கவேணுமென்று
வாயுராசன்றானு மலையைவிட்டுதானெழும்பி
நான்குதிக்கும்பார்த்தானே நடுவாகநின்றுகொண்டு
ஆற்றின்கரையோரம் அதினருகேதோப்புகளும்
பார்த்துமேவாயுராசன் பதறியெழுந்திருந்து
வேகமாய்க்காற்றடிக்க வெண்மணலாய்தானெறிக்க
வானமும்பூமியும் வளர்ந்திருக்குங்காட்டகத்தே
ஆகாயந்தான்பறக்க அடித்தானேகாற்றாக
காடுமலைகளும் காடிசிங்கம்யானைகளும்
ஓடிவந்துமேல்விழவே வுறுதியுடன்காற்றடித்தான்
நூறுபேர்தோழருமே காற்றோடேதான்பறந்தார்

அபிமன்னன் கோபித்து வாளுருவிப்புறப்படுதல்.

அபிமன்னன்ராசவும் ஆலோசனைபண்ணி
நின்றொருவனுமே நெடுமூச்செரிந்தானே
அந்தமலைகளெல்லா மரஞ்செடிகளுள்ளதெல்லாம்
ஆண்சிங்கம்யானை அதிலுள்ளமிருகமெல்லாம்
வாளாலேவெட்டி எறிந்தான்மலைமலையாய்
வாயுராசனுக்கிந்த வலுமைவந்தகாரணமேன்
சோதித்தவன்தலையை துணுத்திடுவேனென்றுசொல்லி
பூரித்தெழுந்திருந்து புறப்பட்டான்வாளுருவி
வாளாலேவீசுவதும் மலைமரங்கள்சாயுவதும்
தோளால்லகுவெடுத்து துரத்திவருகிறதும்
காற்றுக்கெதிராக காவலனார்வருகிறது
பார்த்தானேவாயுராசன் பாலன்வருகிறதை
திரியோதிரன்படையை சேரவடித்திடுவான்

நூற்றொருவர் தன்முடியை நொடியில்கொய்திடுவான்
பதினெட்டக்ரோணி படையும்பரிகலமும்
கண்டபொழுதில்வெட்டி கைலாசம்போக்கிடுவான்
சிந்தைகலங்கி செடிமரத்தைத்தானபிடித்து
பந்துபோல்சுருண்டு படுத்திருந்தாரக்காட்டில்
அப்போதுவாயுராசன் அன்பாகஓலையைத்தான்
ஓலைச்சுருளெடுத்து ஓட்டவிட்டான்காற்றூடே
ஓலையைவிட்டபின்பு ஓடியேபோனானே

அபிமன்னன் ஓலையெடுத்துக்கொண்டுபோகுதல்.

அந்தசுருளோலை அபிமன்னன்முன்னேவந்து
பந்துபோல்தானெழும்பி பக்கத்தில்விழுந்ததுகாண்
கண்டானேஓலையைத்தான் காண்டீபன்தன்மகனும்
கணையாழி முத்திரையும் கடைஓலைச்சுற்றதுவும்
மணவாளசுந்தரிதான் வரவிட்ட ஓலையென்று
கனமாகத்தானெடுத்து கனிவாயால்முத்தமிட்டு
கோபித்துவாளுருவி கோபமுள்ளபாலனுமே
துணித்திடுவேனென்றுசொல்லி துரத்தினான்பாட்டனை
பார்த்தானே நாலுதிக்கும் பாட்டனைகாணாமல் [யும்
போய்விட்டானென்றுசொல்லி பூரித்தான்பாலனுமே
திருப்பிநடந்தானே திக்குதிசைதானடுங்க
தோழன்மார்தங்களுடன் சொல்லவேவேணுமென்று
தேடிப்புறப்பட்டு தோழரைக்கண்டானே

அபிமன்னன் தோழருக்குச்சொல்லல்.

அந்தவபிமன்னனவனையுந்தானெழுப்பி
சிந்தைதெளியவைத்து சிவனுரைத்தோத்தரித்து
காற்றிலகப்பட்டீர்களோ கட்டழகர்தம்பிகளே
வேற்றோலையாகவந்து விழுந்ததுபாயென்மேலே
ஓலையைக்கொண்டுநான் உங்களையுந்தேடிவந்தேன்
தப்பிப்பிழைத்தீர்களே தடமாட்டமாகாமல்
காற்றடித்தான்பாட்டன் கடலிலேபோயொளித்தான்
ஓலையைப்போட்டுவிட்டு ஓடினானென்பாட்டன்
உங்களையான்பார்க்க ஓடிவந்தேனுத்தமரே [மே
அரண்மனைக்குப்போவோமென் றழைத்தானேபாலனு
நல்லதென்றுசொல்லி நடந்தாரண்மனைக்கு

அம்மாள்சுபத்திரையா ளாசாரமண்டபத்தில்
சிங்காதனத்திலே இருந்தாள்சுபத்திரையும்
மன்னவர்கள்பிள்ளைகளும் மாயன்மருமகனும்
அம்மானைச்சுற்றிவந்து அடிவணங்கிதெண்டனிட்டார்
வாழ்த்திவிடைகொடுத்து மருமகன்கள்கேட்டாளே

அபிமன்னன் தாயாருக்கு ஓலைகொடுப்பது.

அப்போதபிமன்னனும் அம்மானைத்தான்பார்த்
தாற்றோடே தம்பிமார் கண்டெடுத்தாரிவ்வோலை
பார்த்தெனக்குச்சொல்லுமென்று பாலனுங்கைகொடுத்
அந்தச்சுருள்வாங்கி அம்மாளும்வைத்திருந்தாள்[தான்
பொழுதுபுகுந்ததுகாண் புதுநிலாகாயுதப்போ
சலக்கங்களாடி சந்திசெபந்தான்முடித்து
சாப்பிட்டனைவரும் தம்பிமார் தூங்கினபின்

சுபத்திரை ஓலைவாசிப்பது.

அம்மாளெழுந்திருந்து அரண்மனையைத்தான்மூடி
ஒருவரைக்காணாமல் ஓலைச்சுருளெடுத்து
தூண்டாவிளக்குமுன் பார்த்தாள்சுபத்திரையும்
உருகிக்கரைந்தாள்உடம்பெல்லாம்புண்ணானாள்[மேலே
அண்ணனைத்தானினைந்து யறைந்துகொண்டாள்மார்
கண்ணில்லான்பேரனுக்கு கலியாணம்வந்ததென்ன
வண்ணமகள்சுந்தரியும் வாழ்க்கைப்படுவாளோ
என்னசெய்வேனென்று ஏங்கிமனந்தளர்ந்தாளே
தம்பியிந்தபேச்சறிந்தால் தரிப்பானோபூமியிலே
அந்தச்சுருளோலைதனை அன்பாகமறையவைத்தாள்
இந்தவிசேஷம் எடுத்துரைக்கப்போகாது
என்றுசுபத்திரையாள் இருந்தாள்மனதில்வைத்து

அபிமன்னன் சொல்வது.

பொழுதுவிடிந்தபின்பு போர்மன்னராசாக்கள்
எழுந்திருந்துமுகங்கழுவி ஈஸ்வரனைத்தானினைந்து
திருநீறுபூசி சிவனைத்தோத்தரித்து
தம்பியபிமன்னன் சாப்பிட்டபிற்பாடு
வாடாபிமன்னன் மாதாவைத்தெண்டனிட்டு
தாயேநான்தந்த சுருளோலையாசகத்தை
விபரமுடன்சொல்லுமென்று கேட்டானே நற்பாலன்

### சுபத்திரை சொல்லது.

தாயார்சுபத்திரையுந் தம்பிமுகம்பார்த்து
யாருக்குவந்ததோடா மகனேயென்வோலை
மாயமாய்வந்ததோடா வகையொன்றுமில்லையடா
கிழித்தெறிந்துபோட்டேனென்று சொன்னாள்சுபத்தி
சொன்னவுடன்பாலன் துள்ளியெழுந்திருந்தான்[ரையும்
தாயாரைகோபித்து தம்பியபிமன்னனும்
ஓலையைதந்நால் உயிருடனானிருப்பேன்
வாளின்மேல்நான்விழுந்து மடிந்திடுவேன்மாதாவே
தோழன்மார்கண்டுதங்கள் துடைகளுந்தானடுங்க
அண்டங்கிடுகிடென்ன அடிதுடைகள்தானடுங்க
கண்டுசுபத்திரையாள் கைவாளைத்தான்பிடுங்கி
கிழித்தெருந்தவோலை-வருமோதான்கொற்றவனே
பழிக்குப்பிறந்தாயோ பாலகனேஎன்வயற்றில்
இப்படியாகச்சொல்லி எடுத்துரைத்தாளேந்திழையும்
என்னதான்சொன்னாலும் ஏந்திழைநான்கேளேனே
செத்துமடிந்திடுவேன் உன்சிந்தைகலங்கவேதான்
சௌரியங்கள்பேசி சபதமிட்டானப்போது

### சுபத்திரை ஓலையைக்கொடுத்து. அபிமன்னன் வாசிப்பது.

பார்த்தாள்மகனுடைய பட்சங்களும்பத்திரங்களும்
காற்றுடனேடிவந்த வோலையவன்கைகொடுத்தாள்
ஓலைச்சுருள்பிரித்து பார்த்தானேஉத்தமனும்
மச்சினியாள்தானெழுதி வரவிட்டவாசகத்தை
திட்சயமாய்க்கண்டு நிதானமிட்டான்பாலனுமே
தாயாரைத்தான்பார்த்து தம்பியபிமன்னனுமே
இப்படிதான்செய்வானோ என்தாயேஉன்தமையன்

### அபிமன்னன் சொல்வது.

காணியிழந்தாலும் கற்பழியப்போமோதான்
இடைபுத்திபிடரியிலே என்பாரேவையகத்தில்
மடபுத்தியாலோயல்லோ மாராட்டஞ்செய்தானே
தென்னமுடிவேந்தன் திரியோதிரன்பாவி
தன்மகன்லக்குணனை தலையெடுக்கப்பார்த்தானே
பூமியிழந்தாலும் பெண்டிழந்துபோவேனோ

காணியிழந்தாலுங் காதலியைவிடுவேனோ
தோஷமெனக்கில்லையோ தான் லோகமெல்லாமேசாதோ
கொண்டபெண்ணை ஒருவருக்கு கொடுப்பாரோவையகத்
வண்டார்குழலாளும் மறுதாலிகட்டுவளோ [தில்
என்தகப்பனார்ச்சுளன்றான் இந்தப்பிழைகேட்டாக்கால்
உன்னையுங்கொன்று உலகமெல்லாங்கொளுத்தி
அந்ததிரியோதிரனை அனைவரையுந்தானுய்யான்
தீயாயெரிப்பானே திரள்விசயனென்தகப்பன்
இப்படியென்று எடுத்துரைத்தான்பாலனுமே
இடையனுடன்பிறந்து இளப்பமாய்ப்போனாயோ
மடையனுடன்பிறந்து மதியில்லாதவளானாயோ
நான்போகவென்றாயே நல்லவிடைதாருமம்மா
என்றுசொல்லிப்பாலனுமே எதிர்நின்றுகேட்டானே

சுபத்திரை சொல்வது.

தாயார்சுபத்திரையும் தப்பிமுகம்தான்நோக்கி
மாயன்பெற்றசுந்தரியாள் வரவிடுத்தவோலைதனை [முதி
மெய்விசேஷம்பொய்விசேஷம்வேணதெல்லாந்தானெ
பகைவெல்லவேண்டி கபடோலையனுப்பிவைத்தான்
இந்தவிசேஷமெல்லாம் என்மனதுதானறிய
யான்போயறிந்து யனுப்புகிறேனுன்னையென்றாள்
இந்தவிசேஷம் இதுமெய்யோதாயாரே
அப்படியேசெய்குறேன் என்றாள்சுபத்திரையும்

சுபத்திரை துவாரகைக்குப் பயணப்படல்.

பாங்கிகளைத்தானழைத்து பல்லக்குசோடியென்றாள்
அப்படியேதாதியர்கள் அலங்கரித்துவைத்தார்கள்
அப்போசுபத்திரையும் அன்பாகத்தானெழுந்து
ஆயிரம்பேர்தாதியரும் அம்மாள்சுபத்திரையும்
நேயமுடன்கூடி நிதானமிட்டாரப்போது
துவாரகாபுரிக்கு துரிதமிட்டாரப்போது
அம்மாள்சுபத்திரையும் எறினாள்தண்டிகையிலே
பயணம்பயணமென்று பாரதமுக்கடித்தார்
அதிரவேமேளமெல்லாம் அடித்தார்களப்போது
எக்காளம்பூரிகையும் பிடித்தார்களப்போது
ஆலவட்டம்வீசுறதும் அகிலைப்பிடிக்கிறதும்

மேலாவட்டம்வீசிவர வெண்சாமரம்போடுவதும்
ஆயிரம்பேர்தாதியரும் அருகேநடந்துவர

சுபத்திரை அபிமன்னனுக்கு புத்திசொல்வது.

தனயனபிமன்னனையுந் தன்னருகேதானழைத்து
அப்பாமகனே நீ அறிவுள்ளகண்மணியே
ஒப்பமுடன்போய்வாரேன் உத்தமனே நீகேளு
அரண்மனைவாசல்விட்டு அப்புறத்தேபோகாதே
தோழர்மார்தன்னுடனே சுகமாயிருங்கானும்
சொக்கட்டான்சதுரங்கஞ் சுகமுடனேதானுடி
உண்டுசுகித்து ஒருநினைவுமெண்ணுமல்
சந்தோஷமாகவே நீங்கள்யிருங்களென்று
துக்கங்கள்கொண்டு நீ சுந்தரிமேலாசைவைத்து
வெட்கத்தைவிட்டு வெளிப்பட்டுவாராதே
ஐந்துநாளையிலே அங்கேநான்போய்வாரேன்
அந்தவிசேஷம் அதுகேட்டபாலனுமே
தாயாரைச்சுற்றிவந்து சாஷ்டாங்கதெண்டனிட்டு
தெண்டனிட்டதன்மகனை சீக்கிரமாய்த்தானெடுத்து
வாழ்வாய்வளருவாய் வைத்திப்பிருத்திருப்பீர்
தாழ்வுகுறையில்லாமல் சம்பத்துயுண்டாக
வாழ்த்திவிடைகொடுத்து பாலனையும்பத்திரமாய்
காத்திருங்களென்றுசொல்லி கடுகயுரைத்தாளே

சுபத்திரை துவாரகாபுரிவந்தது.

முப்பத்திரண்டுவகை மேளங்களுள்ளதெல்லாம்
தப்பால்கொஞ்சிவர தனிச்சங்கந்தான்முழங்க
வாராள்சுபத்திரையும் மாயனுடபட்டணத்தே
காடுகடந்து கரியமலைதான்கடந்து
நாடுகடந்து நல்லமனைதான்கடந்து
இஞ்சிவனங்கடந்து எலுமிச்சைதான்கடந்து
மஞ்சள்வனங்கடந்து மாதுளையினுட்புகுந்து
சிங்காரதோப்புகளும் தெருவும்பலகடந்து
அண்ணனரண்மனைக்கு வந்தாள்சுபத்திரையும்
ஆயன்பெருமாள் அவரிருக்கும்மண்டபத்தில்
தண்டிகைவிட்டிறங்கி தங்கையாள்சுபத்திரையும்
தமையனுடகால்மேலே தங்கைதான்தெண்டனிட்டாள்

தெண்டனிட்ட தங்கையரை ஸ்ரீராமர்தான்பார்த்து
வாருமம்மா தங்கையரே மகனுஞ்சுகமோதான்

சுபத்திரை சொல்லது

அண்ணரைத்தான்பார்த்து அரியவைசுபத்திரையும்
என்னவென றுகேட்டாளே ஏலங்குழலாளும்
கண்ணிலான்பேரனுக்கு கற்புடையசுந்தரியை
என்னென்று நீர்கொடுக்க இசைந்தீர்பெருமாளே
நம்முடையசாதியிலே நடக்குமோவண்ணுவே
கண்டவர்க்குநன்ரு யிருக்குமோகர்த்தாவே
அண்டத்திலுள்ளவர்கள் ஏசாரோயண்ணுவே
என்னையும்பார்க்காம லேக்கமற்றுப்போனீரோ
அண்ணனென்றுநானிருந்தேன் அநியாயஞ்செய்தீரே
உம்முடன் தான்பிறந்து உலகத்துக்கேச்சாச்சே
என்றுசொல்லித்தான்புலம்பி யேலங்குழலாளும்
அடித்துப்புரண்டழுதாள் அண்ணர்கொலுமுகத்தில்

பெருமாள் சொல்வது.

அப்போதெழுந்திருந்து ஆயன்பெருமாளும்
தங்கைசுபத்திரைக்கு தணியவேகோபமெல்லாம்
இங்கிதமாகவே எடுத்துப்பாரேந்திழைக்கு
என்னுலேவந்ததல்ல ஏலங்குழலாளே
மாமன்சகுனியுட வார்த்தையினல்வந்ததுவே
திரியோதிரன்குடியைச் சேரக்கெடுக்கவென்று
நூற்றொருவர்பூமுடியை நொடியிலறுக்கவென்று
பார்த்திருக்கவவன்சிரசை பாழாக்கவேணுமென்று
சகுனிகெடுத்தாண்டி தங்கையரே நீபோடி
அலமேலுமங்கை அரண்மனைக்குப்போய்வாடி
என்றுசொல்லியப்போ ஏந்திழைக்குச்சொன்னுரே

சுபத்திரை இலட்சுமியை ஏசுகிறது.

அந்தசுபத்திரையும் அரண்மனையிலுட்புகுந்து
அலமேலுமங்கை அவள்முகத்தைதான்பார்த்து
சொன்னுள்சுபத்திரையும் துடுக்கானவார்த்தைகளை
மாட்டிடையன்தேவியடி மதிகெட்டுப்போனுயடி
ஆட்டிடையன்தேவியடி அறிவழிந்துபோனுயடி

இடைகுலத்தில் நீபிறந்து ஏக்கமற்றுப்போனாயடி
கண்டார்நகையாரோ கலியுகந்தாரேசாரோ
வெட்கமுமில்லையோடி வேசிமகளாரே
இப்படியாய்ச்சொல்லி யேசினாள்லட்சுமியை

இலட்சுமியும் சுபத்திரையும் சண்டையிடுகிறது.

அலமேலுமங்கையரு மப்போதெழுந்திருந்து
வண்டியென்னையேசுகிறாய் இடையனுடற்பிறப்பே
மாட்டிடையன் தங்கையரே மதிகெட்டுப்போனாயடி
பேச்சுமிஞ்சிப்பேசாதேயின்னிடைந்துபோகுமென்றாள்
தாட்சணியமாய்சொல்லுகிறேன் சார்பாகநீபோடி
போடியென்றுசொல்லவேதான் பூவைசுபத்திரையும்
அலமேலுமங்கையரு மப்போதெழுந்திருந்து
இருவருமங்கே யிழுத்துமயிர்பிடித்து
சாட்சிபோனண்டையிலேபோவோம்வாவென்றுசொல்லி
பேசியவளை இழுத்தாள் ஆடைகுலைய
அவளிழுக்கயிவளிழுக்க அடிதடி களாச்சுதங்கே
அடித்தாளேதவடையிலே அலமேலுமங்கையரை
இவளடிக்க அவளடிக்க இவளிழுக்கயவளிழுக்க
அடிதடிகள்மிஞ்சுதுகாண் ஆங்காரகோபமுடன்
கட்டிப்புரண்டு கட்டுண்டுதானுருள
தாதிகளெல்லாந் தலைமேலேகையைவைத்து
கெக்கலியிட்டு கூக்குரலுந்தான்போட

சுந்தரி விலக்குவது.

கேட்டாளேசுந்தரியும் கிருபையுடன்ஓடிவந்து
பார்த்தாளிருவரையும் படுகின்றதுன்பமெல்லாம்
ஓடிவந்துமேல்விழுந்து ஒருத்திதலைமேலே
மாமிதலைமயிரை வாங்கிவிட்டாள்சுந்தரியும்
தாயார்தலைமயிரை தனியேவாங்கிவிட்டாள்
மாதுசுபத்திரை மருமகளுந்தான்பார்த்து
அத்தையரேயிப்பேச்சு அம்மாளறிந்ததில்லை
நானறிந்துசண்டையிட்டு நாயகியேசொன்னேன்காண்
அப்போதறிந்தாளத்தையரே அலமேலுமங்கையரும்
அறியாவள்போரில் அடித்துவிழக்காரியமேன்
மாமியார்தன்னுடனே வகையாகச்சொன்னாளே

### இருவரும் சாட்சியண்டை வந்தது.

சாட்சிகளண்டையிலே நாம்போம்வருவோமென்று
அன்றுமுழுகின அக்குளமுந்தான்தேடி
சுபத்திரையுமப்போது சொல்லியழைத்தாளே
கங்கைமாதேவியரே கிருஷ்ணனுடபிறப்பே
தங்கையுரைக்கிறதை தயவாகநீர்கேட்டு
உண்மையாகக்கேட்டு உத்தமியே நீயெனக்கு
அலமேலுமங்கையாள யறியவே நீயுமிப்போ
சாட்சியுரையுமம்மா தயவாகயெங்களுக்கு
லட்சுமியுநானுமப்போ நாலாநாள் நானும்வந்து
சூதகமாய்தலைமுழுகி துய்யகரைவந்துநின்று
ஒருவர்க்கொருவர் வுகந்துமனமகிழ்ந்து
இந்தமுழுக்கோடே இதுகெற்பமுண்டாகி
உன்வயிற்றிலாண்பிறந்து என்வயிற்றிற்பெண்பிறந்தால்
உன்மகனுக்கென்மகளை உத்தமியேதாரேனென்று
என்மகனுக்குன்மகளை ஈந்திடவேணுமென்று
இருவருஞ்சொல்லி இசைந்துரைத்துக்கொண்டோமே
அப்படியேயென்வயிற்றில் ஆண்பிள்ளையுதித்தது
அவள்வயிற்றில்பெண்பிறந்து யதுவும்வளர்ந்ததுகாண்
அன்றுசொன்னவார்த்தையெல்லா மதுவுமவள்மாற்றி
லக்குணர்க்குதான்கொடுக்க நாளுமேயிட்டாளாம்

### கெங்கை சாட்சிசொல்வது.

ஏதென்றுகேட்டாள் இல்லையென்றாள்லட்சுமியும்
நீங்களறிவீரென்று நிர்ணயங்கள்பண்ணினதை
அப்போதுவுங்களையுமறிந்தீரென்றுசாட்சிவைத்தோ
அதுகேட்கவந்தோமே அவளறியநீருரையும் [ம்
என்றுசொல்லக்கங்கையரும் இதுமெய்தானென்றுசொ
குமனியிட்டுப்பொங்கிற்று குளக்கரையின்மேலாக [ல்லி
கண்டீரோலட்சுமியரே கங்கையுடசாட்சிதன்னை

### இலட்சுமி கங்கையின்சாட்சி பொய்யென்பது.

அப்போதலமேலும் அல்லவேசாட்சியென்று
மாமாங்கம்பொங்கும் வருஷமிதுவாகும்
அதனாலேகங்கை யமர்ந்துமேபொங்கிவிடும்
அல்லடிசாட்சியென்றே அலமேலுமங்கையரும்

சொல்லவேதான்கேட்டு சுபத்திரையுமப்போது
ஆலமரந்தன்னை அண்ணாந்துதான்பார்த்து
விக்கினருமிங்கே வீற்றிருந்தார்கீழ்த்தான்
முழுகவத்தபோது முன்னமேமொழிந்தவற்றை
அறிவீரென்றுஉம்மையைப்போ|யறியவேசாட்சிவைத்
அந்தவிசேஷ மறியவேஅத்தாட்சி [தோம்
சொல்லுஞ்சொல்லுமென்று சுபத்திரையும்கேட்கயிலே
அலமேலுமங்கையென்று அப்போதுஎண்ணுகிறாள்
ஆலடியிற்பிள்ளையாரே ஐந்துகரத்தோனே
இவ்வார்த்தைநீயுமப்போ சொல்லாதிருக்கவேண்டும்
அப்பளமும்வடைதோசை யதிரசமுப்பழமும்
செப்பமுடனுந்தனுக்கு திரளாகயான்படைப்பேன்
குன்றாய்குவிக்கிறேன் கூறாதேசாட்சியென்றாள்
நல்லதென்றுவிக்கினரும் நட்டாப்போலேயிருந்தார்

ஆலமரமும் விநாயகரும் சாட்சிசொல்வது.

அசையாமல்தானிருக்க ஆயனதுவறிந்து
வண்டாகவேகுடலை துளைக்கிறார்மாயவரும்
ஆலமரமானது அசைந்ததுகாணப்போது
அப்போதுவிக்கினருந் அப்பம்வடையாசைவிட்டு
சாட்சியிதுமெய்யென்று தானசைந்தாரப்போது
சுபத்திரையும்லட்சுமியும் சோதனைபார்த்தார்கள்

இலட்சுமியும் இதுவும் பொய்யெனல்.

அப்போதுலட்சுமியும் ஆலமரத்தடியில்
பிள்ளையார்தானுமங்கே பிலனாயிருக்கையிலே
மேல்காற்றுநன்றாய் வீசியடிக்கையிலே
ஓசையாய்விக்கினரும் விரைவாகதானசைந்தார்
இதுசாட்சியல்லவென்று இடைஞ்சானாம்லட்சுமியும்
ஆனால்தானுந்தனுக்கு ஆர்சொன்னால்மெய்யென்பாய்

இலட்சுமி சொல்வது.

ஆகாயவாணியரும் ஆட்டிடையன்சொன்னாக்கால்
மெய்காணுந்தனுக்குத்தன் மெல்லியரைத்தாரேனென்
அன்றிருந்தகிலாறி மறுபதுமேல்நாற்பதுவும் [றாள்
சென்றுயிருந்தானே செலவழிந்துபோகாமல்
இந்திரரும்வானவரும் இருந்துசொல்லபோறாரோ

ஆகாயவாணியரும் அவளுஞ்சொல்லப்போருளோ
இவளுமிசைந்திடுவாள் இதுவேவுபாயமென்று
அப்போதிடையனும் அன்றிருந்தாப்போலிருந்தான்
இவனிருந்தபோதே இவள்கடையுமீடேறும்
எண்ணியேலட்சுமியும் இருந்தால்மன துடனே
சுபத்திரையுமப்போது சுந்தரியேலட்சுமியே
வாடியென்றழைத்தாள் ஆட்டிடையன்தன்னருகே
ஆட்டிடையனண்டையிலே அருகாகவந்து நின்று
அண்ணுகோபாலா அன்றிருவர்நாங்கள்வந்து
சம்பந்தம்பேசியே சாட்சிவைத்துப்போனோமே
அலமேலுமங்கையின்று ஆகடியம்பேசுகிருள் [ன்ருள்
உண்டோதானில்லையோதான் உத்தமனேசொல்லுமெ

பெருமாளும் ஆகாயவாணியுஞ் சொல்வது.

ஆமாண்டி என்பிறப்பே ஆகடிசுபத்திரையே
கொள்வேன்கொடுப்பேனென்று கூசாமலப்போது
என்முன்னேசொன்னதுண்டு அநேகநாளாச்சுது
ஆனலிடைச்சியல்லோ அகததுமதிகெட்டாளோ
சொன்னதுண்டுகேட்டதுண்டு சுபத்திரைமெய்யென்று
ஆட்டிடையன்சொல்லுகையில் ஆகாயவாணியும்
மெய்தான்காணென்று விளம்பினுள்மேலாக
கேட்டையோலட்சுமியே கீர்த்தியுடனப்போது
என்றுசுபத்திரையா ளெடுத்துரைத்தாள்லட்சுமிக்கு

இலட்சுமி அதுவும் பொய்யெனல்.

இடையனுர்சொல்லுவது ஈடல்லயெந்தனுக்கு
பெரியவயதிலே பினத்தினுன்கோனுரும்
மூன்பின்னுந்தோன்ருது மூதுவயதும்பெற்றதினுல்
ஆகாயவாணியரும் அதுவும்நான்நம்பேன்
மேகமதிர்ந்ததினுல் விளம்பினதுபோலாச்சு
சாட்சியிதுவல்லவென்று தானடந்தாள்லட்சுமியும்
எந்தவரிசையுடன் என்பெண்ணைக்கேட்டாயோ
ஊருமில்லைபேருமில்லை வுறங்கவுமிடமுமில்லை
நாடுமில்லைவீடுமில்லை நாட்டிலேயும்பாதியில்லை
காணியில்லைபூமியில்லை கானகத்துவேடருக்கு
என்பெண்ணைக்கேட்க இசையுமோவுந்தனுக்கு

### இலட்சுமிக்குஞ் சுபத்திரைக்குஞ் சண்டை

என்றுசொல்லலட்சுமியும் எட்டியேயப்போது
மயிரைப்பிடித்தாள் மங்கைசுபத்திரையும்
அலமேலுமங்கையரும் அவள்மயிரைத்தான்பிடித்தாள்
அடித்தாளேசுபத்திரையும் அலமேலுமங்கையைத்தான்
அவளிழுக்க இவளிழுக்க இடுப்பிலேதானுதைக்க
அடிதடிகள்மிஞ்சுதுகாண் ஆங்காரகோபமுடன்
வெய்யலிலேதான்புரண்டு மேதினியில்தான்விழுந்தார்

### சுந்தரி விலக்குவது.

மாயன்மகள்சுந்தரியு மறுபடியுமோடிவந்து
பார்த்தவளேயத்தையரின் பரிதாபந்தாளாமல்
ஓடிவந்துமேலவிழுந்து ஒருத்திதலைமயிரை
மாமிதலைமயிரை வாங்கிவிட்டாள்சுந்தரியும்
தாயாரைத்தான்விலக்கி தள்ளிவிட்டாளப்போது
என்னமனதுகுறை என்றுபேசேகட்கலுற்றாள்
நானிங்குதானிருக்க நடக்குமோசண்டைகளும்
ஏனம்மாவுங்களுக்கு இத்தனைகோபமென்ன

### சுந்தரி சொல்வது.

ஆகாப்புலையன் அழிவான்கழுசிறையன்
தேசத்தாசன் திரியோதினன்பாவி
மோசம்பண்ணசகுனி மூதேவிசண்டாளன்
சதிக்குச்சமர்த்தன் சகுனிபடுபாவி
ஆசரித்துக்கொள்ளவே நீயேத்தானொருப்பாவி
உங்களுக்குவந்ததென்ன ஒருவர்க்கொருவர் சண்டை
க்ஷமித்துமனங்கொள்ளென்று சாஷ்டாங்கதெண்டனி
மாமிசுபத்திரையை மருமகளுந்தான்பார்த்து [ட்டு
அத்தையரேயப்பேச்சு அம்மானறிந்ததில்லை
கலியாணப்பேச்சுதனைக் காதாலேகேட்டதில்லை
அறியாதவன்மேலே அருஞ்சண்டையேயுனக்கு
மாமியார்தன்னுடனே வகையாகச்சொன்னாளே
கோபங்கூடாதென்று கூறினாள்சுந்தரியும்
என்மைத்துனனைசீக்கிரமாய வரவிடுங்காண் அத்தைய
தலைமுழுகிப்பூசைசெய்து சாப்பிடவேவாருமம்மா [ரே
சாப்பிடடேன்மருமகனே தயவுமறவாதே

போய்வாரேனென்று புறப்பட்டான்பூவையரும்
தாதிகளைத்தானழைத்து தண்டிகைபிடியுமென்றான்
மருமகளுமோடிவந்து மாமிக்குத்தெண்டனிட்டு
பாலமுதுகொள்ளாமல் பட்டினியாய்ப்போவாரோ
என்றுணையத்தையரே இருந்தமுதுகொள்ளாமல்
இத்தனைசண்டையிலே அழுதுகொண்டாலேசாரோ
அழுதாயிரங்குமோடி அன்னப்பசுங்கிளியே
இருவென்றேசொல்லி ஏறினாள்தண்டிகைமேல்

சுந்தரி சொல்வது.

சுந்தரியுமோடிவந்து சொன்னாள் ஒருவிசேஷம் [ரே
என்மைத்துனரை நாளையிங்கே வரச்சொல்லுமத்தைய
அவர்-வாராமல்தானிருந்தால்மடிந்திடுவேன்மாமியரே
அக்கினியில்நான்விழுந்து அபகீர்த்திவைத்திடுவேன்
ஐவர்மார்தம்மானை அனுப்புவிப்பத்தையரே
தாலியுங்கூறையுந் தரிக்குமுடைமையெல்லாம்
தேயமாயிருக்கிறது நிலவாமாயிங்களுப்பும்
இன்றேடேமூன்றுநாள் இருக்கிறதுகலியாணம்

சுபத்திரை ஆனைகுந்திப்பட்டணம் போகிறது.

நல்லதுநல்லதென்று நடந்தாளேசுபத்திரையும்
போனாள்சுபத்திரையும் பொன்கிளிபோல்தான்பறந்து
ஆனைகுந்திபட்டணத்தே போனாள்சுபத்திரையும்
அப்போதபிமன்னன் அழகுரதமேறி
பார்த்தானேதாயாரை பார்த்தன்மகனும்
மதிலையும்விட்டுகீழ் குதித்தானேமன்னவனும்
தாயாரும்வந்து தண்டிகையும்விட்டிறங்கி
அரண்மனைக்குள்ளே போனாளேதாயாரும்
தம்பியபிமன்னனும் தாயாரைச்சுற்றிவந்து
சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டான்வேந்தன்
வாழ்த்திமகனை மடியிலெடுத்தணைத்தாள்
நூறுபேர்தோழருடனபிமன்னன்வந்து நின்று [ன்
வந்தீரோதாயேயென்றே மலர்தாவித்தெண்டனிட்டா
தெண்டனிட்டபிள்ளைகளை சீருடனேவாழ்த்தியம்மாள்
இருக்கச்சிங்காதனங்களிட்டாளிள கொடியாள்
அப்படியங்கேயமர்ந்தவேளையிலே

### அபிமன்னன் கேட்பது.

பாலனபிமன்னவனும் மாதாவைத்தான்பார்த்து
போய்வந்தகாரியத்தை புதுமைகளைச்சொல்லுமென்றார்
உங்கள்தமையன்பெருமான் சமூகங்கிடைத்ததோ அம்
அலமேலுமங்கையிட அதிசயத்தைக்கண்டீரோ [மாவே
கலியாணங்கூடினதும் காரியங்கள்பேசினதும்
திண்ணமாய்க்கேட்டீரோ நீதியுள்ளதாயாரே
பின்னையுமுண்டான பேச்சுகளுள்ளதெல்லாம்
நன்றாகக்கேட்டீரோ நானறியச்சொல்லுமென்றான்

### சுபத்திரை சொல்வது.

ஏதென்றுகேட்க ஏசினேன்மாயவரை
தலைகுனிந்தாப்போலே இருந்தார்பெருமாளும்
உள்ளபடிதப்பாது என்றார்ஒருவிசேஷம்
அலமேலுமங்கையண்டை வந்தேன்மகனே
பேசாமல்தானிருந்தாள் பெண்பெருமாள்நாயகியும்
ஏசினேனவளை எண்ணிக்கையில்லாமல்
அவளுமென்னைஏசினாள் அடிதடிகளாச்சுது
நான்மயிரைபிடித்து இழுத்தேனேமங்கையரை
என்மயிரைப்பிடித்து இழுத்தாளிளங்கொடியாள்
இருவருஞ்சண்டை இசைவாகத்தான்போட்டோம்
அடிதடிகள்மிஞ்சி ஆக்கரித்துகொக்கரித்து
இடுகிடென்றுபூமியிலே கீழவுந்தான்விழவே
தாதிகளெல்லோரும் தவித்தழுது நிற்கையிலே
ஓடிவந்தாள்சுந்தரியும் ஓகோகோதாயேயென்றே
மயிரைப்பிடித்திழுத்த கையையும்வாங்கிவிட்டாள்
தாயார்மயிரை தயவாகவாங்கிவிட்டாள்
குறுக்காகநின்றுகொண்டாள் கொம்பனையாளும்
கோபமுந்தீர்ந்தபின்பு குனிந்துமெத்தெண்டனிட்டாள்
இன்றைக்குமூன்றுநாள் இருக்குதென்றாள் கலியாணம்
நாளைக்குவாங்களென்று சொன்னாளேசுந்தரியும்
என்றுசொல்லக்கேட்டு எழில்விஜயன்புத்திரனும்
ஆலித்துவாளபிமன்னன் ஆச்சியற்குத்தெண்டனிட்டு
என்னஎன்னமாதாவே இன்னமொருக்காலுரையும்
அல்லகாண்சுந்தரியும் மாமன்மகளாரும்
உன்மாமியாருநானும் மாரொருதாள்வேளையிலே

வந்துபாதப்பணிந்து மயிலைவிலக்கிவிட்டு
என்மைத்துனனுரையிப்போ வாவிடுங்காண்மாமியரே
அபிமன்னர்வாராதிருந்தால் அக்கினியில்விழுவேனே
இதுவேயுரைப்பான்காண் இனியொன்றுநானறியேன்
அல்லகாண்மாதாவே இன்னமொருக்காலுரையும்
அடித்தவடிக்காகவல்லோ ஆயன்பதியழிப்பேன்
மங்கைமகள்சுந்திரியும் வாக்குபட்டாளாமாகில்
காணவும்போறேனே கன்னிநல்லாள்சுந்தரியை
ஆசையால்சொன்னேன்காணுச்சியரேகோபம்வேண்டா
தாய்தகப்பன்வேண்டாத தாரமெனக்கேனு [ம்
பெற்றதாய்வேண்டாத பெண்டாட்டிநான்வேண்டேன்
உலகத்தில்வார்த்தை உரைக்கவிடமாச்சு
பஞ்சவர்கள்வமிஷத்தில் பார்த்தன்மகனுக்கு
பெண்கேட்கப்போயிருந்து பெருமானிடதேவிகையில்
அடிபட்டுவந்தீரென்று ஆனவருமேசாறே
தாயாதிகளேசாறே சத்துருக்களேசாறே
காணியாளர்கேட்டாலோ கனங்குலையயேசாறே [ன்
காணியாளர்கேளாமுன்கழுத்தறுத்துக்கொள்ளுகிறே
வாளையுருவி வலதுகையில்தான்பற்றி
சாவேனேயென்றழுதான் தனஞ்செயனார்புத்திரனும்
கண்டாள்சுபத்திரையும் கலங்கவேதானடுங்கி
பழிக்குப்பிறந்தாயோ பாலகாயென்வயிற்றில்
வாடாமகனே வையகத்தில்பெண்ணிலையோ
பஞ்சவர்கள்புத்திரனும் படைபொருதமாட்டாமல்
பொருந்திமணஞ்செய்யாமல் போக்கிரிவாளபிமன்னன்
மாண்டானேயென்றுசொல்லி வையகத்தில்வார்த்தைய
மாறுதிருவாணை மன்னவர்கள்தம்மாணை [ல்லோ
என்றாணை நீமகனே என்வார்த்தைதள்ளாதே
வாடாமகனேயென்று வாள்பறித்துக்கீழ்போட்டு
மைந்தனுக்குமாதா மனதுயரவார்த்தைசொல்லி
இத்தனையுங்கேட்டு எழும்பியேவாளபிமன்னன்
அண்டங்கிடுகிடென்ன ஆகாயந்தானதிர
மீசையின்மேல்கைபோட்டு வீரியமாய்வாளெடுத்து
இலக்கணனைக்கொன்று ரணபலிபோட்டுவைப்பேன்
துரியோதனன்கூட்டம் சேனைபடைகளமும்
அதிரவேவெட்டி எமலோகஞ்சேர்த்திடுவேன்

அஸ்தினபுரத்தை அடியோடே தானிடித்து
பருத்தியும் ஆமணக்கும் விதைக்கிறேன்பாருமம்மா
சுந்தரியைக்கொண்டுவந்து சுகமாகதாலிகட்டி
உந்தனுண் மனையில் ஊழியங்கள்செய்யவைப்பேன்
என்னையனுப்புமம்மா எனக்குவிடை தாருமம்மா
தம்பிசொன்னவார்த்தைகளைத் தான்கேட்டுசுபத்திரையு
அப்பாமகனே அறிவுள்ளபாலகனே [ம்
எப்படிப்போகவிட்டு இருப்பேன்டா பூமியிலே
பாலுங்குடித்தறியாய் படைமுகத்தில் நின்றறியாய்
அறியாதபாலகனை அனுப்பவேஞாயமுண்டோ
கொஞ்சுமொருபாலகனை கூட்டனுப்பஞாயமுண்டோ
உங்கள்-ஐயமார்வந்தபின்பு ஆளவிடந்தேடி
தையலரைக்கொண்டுவந்து தாலிகட்டிவைக்கிறேன்
பூமியிலேபெண்கள் இலையாதோபுத்திரனே
ரூபசவுந்தரிகள் உலகத்தில்மெத்தவுண்டு
சுந்தரிக்குமிஞ்சினபெண் தேசத்தில்மெத்தவுண்டு [ன்
அந்தமுள்ளகன்னியரை யழைத்துமணஞ்செய்விப்பே
எந்தனிசைகேளும் இல்லாதசண்டைகளும்
வெட்டுவதுக்குத்துவதும் வெறித்தவரைவெல்லுவதும்
கொண்டாலுமாகாது குலத்திலிகழ்ச்சியடா
இப்படியாகச்சொல்லி எடுத்துரைத்தாள்சுபத்திரையும்
மாதாமுகம்நோக்கி மைந்தனெடுத்துரைப்பான்
பூமியிழந்தாலும் பெண்டிழந்துபோவாரு
தாரமிழந்தாலும் தாலியிழப்பதுண்டோ
நாட்டுக்குள்ளேச்சல்லவோ நாயகியேயென்தாயே
ஐவர்குலத்தில் அழுப்புண்டோஎன்தாயே
சாவேன்கெடுவேன் சமுத்திரத்தில்போய்விழுவேன்
சுந்தரிமேல்போய்விழுந்து துணிந்துகறுத்தழுப்பேன்
எந்தன்கழுத்துங்கூட சறியாயறிந்திடுவேன்
இப்படியாகச்சொல்லி எழில்வீரன்தானுரைத்தான்
தாயார்சுபத்திரைக்கு சரீரமெல்லாந்தானடுங்க
வயிற்றில்நெருப்பை வாரியெறிந்தாப்போல்
எறிந்துகுலைநடுங்கி எல்லாநினைவுமற்று
மயக்கம்பிறந்தது மங்கையருந்தான்விழுந்தாள்
தாதியொருத்தி தலைமாட்டில்நின்றுகொண்டு

சாதிமணக்கவுறி சந்தனைத்தில் நீர்தோச்சி
வீசினார் காதியர்கள் மேனியெல்லாந்தான்குளிர
விழித்துமுகம்பார்த்தேனே விஜயன் மகனுரை
இகழ்ச்சியாய்ச்சொன்னு விருப்பானேவாளபிமன்னன்
இதுவுமொருவிசை அறியோமேயென்றுசொல்லி
வாடா நீவாளபிமன்னு கேளாயொருவார்த்தை
ஆமென்றுசொல்லி அறியாயோசுந்தரியை
மாடாடுமேய்க்கும் மடையரிடக்குலந்தான்
செத்தாடுதின்பான் சினையாட்டைமேய்த்திடுவான்
தண்டுகடைதோறும் தயிர்விற்குஞ்ஜாதியடா
பாளையங்கள்தோறும் பால்விற்குஞ்ஜாதியடா
பெருமாளவனுமொரு பெரியவிடையண்டா
எக்குலங்களானாலும் இடைக்குலங்களாகாது
அந்தகுலத்திலே அடுக்குமோயென்மகனே
ராசகுலத்தில் நடக்குமோயினிமேலே
லட்சுமியாளுன்மாமி நாடறிந்தகன்னிடைச்சி
உனக்குநிகரான வுலகத்துராசாக்கள்
மன்னவர்பெற்றதொரு மங்கையர்கள்தானிருக்க
பெருமாள்மகளொழிய பின்னொருத்தியாகாதோ
பெருமாள்மகளாரை மறந்துவிடுயென்மகனே
மாயன்மகளாரை மச்சினியாள்சுந்தரியை
நான்மறவேன்மறவேனம்மா வாழ்விசையன்தேவியரே
உந்தலைதுகுலத்தை வுச்சிதமாய்சொல்லவந்தால்
இந்தமிராட்டுக்குப் பயமெடுத்துபோவேனே
ஏச்சாகயிடகுலத்தை என்தாயே நீபழித்தாய்
கூடப்பிறக்கிலையோ கூட்டுப்பாலுண்ணலையோ
ராசாவுக்குக்கையீந்து ராசாத்தியானாயோ
வாடா நீயென்மகனே கேளாயொருவார்த்தை
ஆகாதசுந்தரியை அபிமன்னு நீமாலையிட
ஆரைக்கழுத்தியடா ஆனையனைக்காகாது
கோரைக்கழுத்தியடா குடித்தனத்துக்காகாது
சுருட்டையயிர்சுந்தரியாள் சுத்தமும் ஆகாது
பாட்டைத்தலையுடையாள் பட்டணத்துக்காகாது
துடையிலேபாம்படா துறைத்தனத்துக்காகாது
அரையிலேபாம்படா அபிமன்னு அவள்வேண்டாம்
வேண்டாங்காண் அபிமன்னுவிசையன் திருமகனே

### ஆகாதாகாணும் அச்சுதனார்பெண் நமக்கு அபிமன்னன் சொல்வது.

ஆனாற்கேள்தாயே அர்ச்சுனனார்தேவியாரே
ஆனைக்கழுத்தானால் அன்றுபிழைத்தேனம்மா
தலையிலேபாம்பாகில் தாசங்கட்டிவாழ்ந்திடுவேன்
அரையிலேபாம்பாகில் அடசயலட்சணங்கான்
மாதுசுபத்திரையு மறுத்துரைக்கக்கூடாமல்
அபிமருமாச்சியரும் ஆனைகுந்திவந்தார்கள்

### சுபத்திரையும் அபிமன்னனும் சதுரங்கமாடுதல்.

அந்தநாள்போக மறுநாள்கழிந்தபின்பு
மாயன்பதிநோக்கி வாளபிமன்போகாமல்
மறக்கடிக்கவேணுமென்று மங்கைசுபத்திரையும்
சதுரங்கமாடுவோம் தம்பியென்றுதானழைத்தாள்
தாதியர்களோடி சதுரங்கங்கொணடுவந்தார்
விரித்தானேசதுரங்கம் வேல்பொருதுங்கண்ணாளும்
தன்மகனுந்தானுஞ் சதுரங்கமாடலுற்றார்
அபிமருமாச்சியரு மாடலுற்றாப்போது

### பெருமான் பிராமணராய் வருகிறது.

அப்போவதுவாரகையில் ஆயனுந்தானினைந்து [ல்
அடிப்பட்டதங்கையரும் அபிமன்னனைவரவொட்டாம
மாற்றான்றுரியோதனன் வருவதற்குமுன்பாக
அபிமன்னரையிங்கே யழைத்துவரவேணுமென்று
மாயன்பெருமாளும் மறையவன்போலேவர
ஈறக்குடைபிடித்து பூசைபெட்டிதோளில்வைத்து
பஞ்சாங்கங்கைபிடித்து பிராமணவேடமுடன்
ஆயன்பெருமாளும் வனத்தில்புதுமைசொல்வேன்
பட்டமரந்துளிர்க்கும் பாற்பசுக்களீந்திடுமாம்
பூக்காதமரங்களெல்லாம் பூத்துப்பழுத்திடுமாம்
காய்க்காதமரங்களெல்லாம் காய்த்துப்பழுத்திடுமாம்
வெடிக்குங்குளங்களெல்லாம் வழிந்துசொரிந்திடுமாய்
ஆறுகடந்து அரியவனமுட்புகுந்து
கற்பகக்காவுகளும் கரியவனந்தாண்டி
காடுகடந்து கரியவனந்தான்தாண்டி

ஆயன்பெருமாளும் ஆனைதுந்திவந்தமர்ந்தார்
வீதியும்வீதி தெருவும்பலகடந்து
தேரோடும்வீதி தெருவும்பலகடந்து
ராஜர்பெருந்தெருவில் நாராயணர்வருகிறார்
தரணியளந்தவரும் தங்கைமனைதனிலே
சுபத்திரையாள்வாசலிலே ஸ்ரீராமர்வந்தமர்ந்தார்
ஆரடிதாதியரே ஆருடையமாளிகைதான்
சொல்லடிதாதியரே சுபத்திரையாளெங்கேயடி
தாதியருங்கேட்டு சரணமென்றுதான்பணிந்தாள்
வேதியரே நீரெங்கே மெல்லியரைக்காணவந்தீர்
இந்தவரண்மனைதானேந்திழையைக்காணுமென்றார்

பெருமாள் சொல்வது.

வந்தமறையவரும் மாதுமுகம்நோக்கி
சேஷையரிசியிட்டு தெர்ப்பையுங்கைகொடுத்தார்
பஞ்சாங்கங்கைபிடித்து பார்ப்பானும்நிற்கலுற்றார்
மாதுசுபத்திரையு மறையோர்க்குதெண்டனிட்டு
வந்தபிராமணரை வணங்கியெழுந்திருந்து [சென்று
வாருமையாவென்றுசொல்லி மண்டபத்தில்கொண்டுசெ
ஆசனத்தில்தானிருத்தி அடிபணிந்துதெண்டனிட்டு

சுபத்திரை சொல்வது.

மறையவரைநோக்கியந்த மங்கையருங்கூறுவாள்
வேதியரே நீரும் விருத்தக்கிழவனையா
எங்கிருந்திங்குவந்தீர் எனக்கரியக்கூறுமென்றார்
மங்கையரேகேளீரென் வார்த்தையுரைத்திடுவேன்
காசிவளநாடு கன்னியர்குமரிதேசம்
தூரம்வடக்கேயம்மா துவாரகாபுரிக்குமப்பால்
புண்ணியதீர்த்தம் புனலாகபூசைபண்ணி
காசிக்குப்போயிருந்து வந்தேன்நான்காரிழையே
தேசத்தழகன் திரியோதனன்வீட்டில்
ஏர்நிறைந்தலக்குணர்க்கும் ஏலங்குழலாட்கும்
கலியாணமென்றுசொல்லி கன்னியரேநான்போறேன்
மெத்தவிடாயினாலே மெல்லியேயிங்குவந்தேன்
மற்றொருகன்னியிடத்தை மங்கையரேநானறியேன்
மாயனிடநங்கையென்று வள்ளற்கெதிரேவந்தேன்

என்செய்வோமென்று எண்ணிவிசாரமிட்டான்
அந்தவிசேஷம் அபிமன்னனுந்தான்கேட்டு
சிந்தைகலங்கி சிவசிவாவென்றுசொல்லி
நானுங்கூடவாறேனென்று சொன்னானே நற்பாலன்
ஆற்றிலே நீந்திவரத் தெரியுமோஐயாவே
நீந்திக்கரையேற நின்னையங்கள்தான்வருமோ [ன்
என்றுசொல்லிப்பாலனுமே எடுத்துரைத்தானேயருட
நல்லதுஎன்றுசொல்லி நடந்தாரிருவருமாய்

அபிமன்னன் ஆற்றில் நீந்துவது.

ஆற்றிலேயிறங்கினார் அரையளவு தண்ணீரில்
கைகோர்த்துக்கொண்டார்கள் கட்டழகரிருவரும்
மார்மட்டுந்தண்ணீர் வந்ததுபாமைநதி
அது நீந்திப்போகச்சே யாரும்பெருகியெத்த
மேல்வெள்ளம்வந்து மூழ்கியிருவருமே
அந்தச்சமயம் அறிந்துபிராமணரும்
நழுகவிட்டுப்பாலகனை நடந்தாரேஐயருமே
ஆற்றுச்சுழலிலே அழுத்திவிட்டுப்போனாரே
தம்பிசமர்த்தைத் தானறியவேணுமென்று
வெம்பிட ஆற்றிலேதான விட்டார்பெருமாளும்
சுழட்டுவதுமிருக்கிறதுஞ் சொருகிறதுமணலகீழே
கிளம்புவதும்தாக்கிறதுங் கிருகிறென்றுசுழட்டுவதும்
தூக்கியடிக்கிறதுஞ் சுழலயிட்டுநீந்துவதும்
ஐந்நூறுகாதவழி நடந்திருக்குமப்பாதை
அரிகரியென்றுசொல்லி ஆண்டவனை நினைக்கிறதும்
அபிமன்னன்படுந்துயரம் ஆயனுந்தானறிந்து
தெர்ப்பைப்புல்லாகவந்து நின்றார்பெருமாளும்
பார்ப்பானைப்பார்த்தானே பாலனபிமன்னனும்
ஐயாபிராமணரே ஆற்றில்விட்டுப்போனீரோ
பார்ப்பான் துணையுமல்ல பயிற்றங்காய்கறியுமல்ல
பார்ப்பானை நானும் படைத்துணையாய்நம்பிவந்தேன்
என்றுவிசாரமிட்டு எழில்வீரன்தானிருந்தான்
வாளுடன்கேடயமும் வைகையிலேபோச்சுது
ஆறுவடித்தபின்பு அக்கரைதான்திரும்பி
வாளகேடயங்கொண்டு வருவோமென்றுசொல்லி
மாயன்பதிதனிலே மன்னவர்வந்திருந்து

மாதுநல்லாள்சுந்தரியை மணஞ்செய்வார்தப்பாது
மாதாவுநம்மை வரவொட்டாளென்றுசொல்லி
கச்சைவரிந்துகட்டி கைக்கொன்றுமில்லாமல்
ஆற்றங்கரைவிட்டு ஆயன்பதிநோக்கி
காடுகடந்து கடியவனந்தான்கடந்து
குன்றும்பருவதமுங் குளிர்ந்தமலைத்தோப்புகளுங்
சுற்றுப்பதிங்காதஞ் சூழ்ந்தமலைத்தோப்புகளும்
மெத்தகாடிகளும் வெம்புலியுஞ்செம்புலியும்
காட்டானையாளிகளும் கருங்குரங்குசெங்குரங்கும்
அப்படிக்கொத்த ஆரண்யகானகத்தில்
நடையாகப்பாலனுமே நடந்தானே அக்காட்டில்

### அபிமன்னன் வல்லரக்கன்
### பாறைமேல் படுத்துக்கொண்டது.

மெய்யானவல்லரக்கன் வீற்றிருக்குமக்காட்டில்
வல்லரக்கனுண்மைகளை மட்டுரைக்கப்போது
ஐம்பதுகாதம் அகண்டதிருமார்பும்
எண்பதுகாதவழி யிசைந்திருக்குந்தோளிரண்டும்
ஐந்நூறுகாதவழி கடந்திருக்குமப்பாறை
நானூறுகாதவழி யுண்டாமவனுக்கு
ஐந்நூறுகாதவழி மூக்குமுயர்ந்திருக்கும்
வல்லரக்கன்சிரசு மகாமேருபருவதம்போல்
இப்படிக்கொத்த இடும்பனென்னும்வல்லரக்கன்
கமலகன்னியுடன்பிறந்த சுசனடந்தவல்லரக்கன்
அந்தவனத்திலே அபிமன்னராசனுமே
போனவழிதப்பிப் பொல்லாதகானகத்தில்
அந்தஅரக்கனவன் தூங்குமந்தகற்பாறை
விந்தைவிந்தையாகமெத்த அழகாகவேயிருக்கும்
அந்தமாய்த்தானிருக்கும் அழகானபாறையின்மேல்
ஆற்றிலடிபட்ட அபிமன்னராசாவும்
கைசோர்ந்துமெய்சோர்ந்து கண்மூடிதான்சோர்ந்து
மெய்சோர்ந்துடம்பெல்லாம் வெகுவாய்கடுப்பெடுத்து
தூக்கம்போல்வந்து சோர்ந்துபடுத்தானே
பள்ளிக்கையானனே பாறையின்மேற்றான்படுத்து
வல்லரக்கனிறைதேடப் போயிருந்தான்வடதிசையில்

சுபத்திரை அபிமன்னனைத் தேடுதல்.

இனிஆனைகுந்திபட்டணத்தை ஆளுடையவுதனைகேளீர்
தோகைசுபத்திரையுந் தோழியார்களுடனே
தோட்டமுந்தோப்புந் துறவுகளுந்தான்தேடி
எங்கெங்குந்தேடி இராசனைக்காணாமல்
பூங்காவனங்களும் புல்லின்களைதேடி
வாளபிமன்னனசிற்றடியு மறையாள்பெருவடியும்
புனல்க்கரைநோக்கிப் பொன்அடிபார்த்து
ஐயோ அபிமன்னெயென் னுயிர்க்கொருமருந்தே
என்செய்வேன்வாளபிமன்னே ஏழைமதியானேன்
பார்ப்பானை நம்பி பரிதவித்தேன்பாவிநான்
நம்பினேன்வேதியனை நட்டாற்றில்விட்டானோ
தக்கபுகழுடைய தருமருமிங்கேவந்து
வெற்றிமதயானை வீமருமிங்கேவந்து
நம்முடையநகுல தம்பிக்குஎன்னசொல்வேன்
தோருவடிவழகி துரோபதையும்இங்கேவந்து
ஆணழகனிங்குவந்து அபிமன்னன்யெங்கேயென்றால்
தக்கபுகழுடைய தருமருக்கேதுசொல்வேன்
வெற்றிமதயானை வீமருக்கேதுசொல்வேன்
நம்முடையநகுலர் தம்பிக்கென்னசொல்வேன் [ல்வேன்
ஆச்சியார்க்கென்னசொல்வேன் ஆணழகர்க்கென்னசொ
கோணுதமாதவத்துக் குந்தியருக்கென்சொல்வேன்
ஐயோ அபிமன்னே நீ ஆற்றில்விழுந்தாயோ
ஆயன்மகள்சுந்தரிக்கா யாற்றில்விழுந்தாயோ
என்னென்றுசொல்லி எடுத்துரைப்பேன்வெட்காமல்
மன்னவர்கள்முன்பாக மனந்தளரபண்ணினையே
ஐயோ அபிமன்னென்று அலறியேதானழுது
அபிமன்னோருடனேநானு மாற்றிலேவிழுவேனென்று
பொய்கையில்விழுவேனென்று பொற்கொடியுந்தான்ப
அழுதுமனந்துணிந்தாள் ஆச்சிசுபத்திரையும் [ணிந்து
இப்படிக்கொத்த இக்கட்டுவேளையிலே

துரோபதை கனவுகண்டு தருமருக்குச் சொல்லுதல்.

அப்போவனத்தி லிரவை துரோபதையும்
சொற்பனங்கண்டு தோகையருந்தானெழுந்து
ஐயாவொளுவிலே ஆச்சியுமேதுரைப்பாள்

கண்டேன்காண் காவலனே கடியவொரு சொப்பனந்தான்
ஆயனுடன் பிறந்த வழகுசுபத்திரையாள்
வைகைக்கரையிலே மரிப்பேனென்றுசொல்லியே
மைந்தனைப்போகவிட்டு தங்கையழுகிருள்
என்னபுதுமையிது என்கனவுதப்பாது
என்னசகாதேவனெழுந்திருந்து அப்போது
தாமமுடியானுஞ் சாஸ்திரத்தைத்தான்பார்த்து
தர்மர்முகம்பார்த்து சகாதேவன் கூறலுற்றான்
ஆர்காணுமண்ணுவே உள்ளபடி தப்பாது
ஒக்குமிது அண்ணுவே உள்ளபடி தப்பாது
மாயன்மகளார் மருதாளிசுந்தரியாள்
ஆளப்பிறந்த அபிமருக்கிருந்தபெண்ணை
மன்னன் திரியோதிரன் தன்மைந்தன் லக்குணற்கு
இந்தவெள்ளிக்கிழமையிலே எம்பெருமாளதன் மகளை
மணஞ்செய்யவேண்டுமென்று மன்னவர்கள் தான்போரு
அத்தவிசேஷம் அபிமன்னருந்தானறிந்து [ர்
மாமனுமானாலே வாளபிமன்னன் தானறிந்து
மாதுலனையறியாமல் மாயர்பதிநோக்கி
புனலின் கரைதாண்டி போனானே வாளபிமன்னன்
சேர்ந்துமணம்புரிந்து திரும்புவான் தப்பாது
ஆகையினாலே அழகுசுபத்திரையும்
ஆளப்பிறந்த வபிமன்னனைத்தான்தேடி
புனலின்கரையருகே புலம்புகிறாள் மங்கையரும்
ஆற்றில்விழுவேனென்று அழுகிறாளென்றுரைத்தாள்

## தருமர் அருச்சுனனை சுபத்திரையிடத்துக்கு அனுப்புதல்.

தக்கபுகழுடைய தருமராதுகேட்டு
காண்டாவனமெரித்த காளைமுகம்நோக்கி
ஆயர்பதிநோக்கி அபிமன்னனும்போனான்
மைந்தன் நிமித்தியமாய் மங்கைசுபத்திரையும்
மாளநினைத்தாளாம் வாள்விசையாயுன்தேவி
வைகைக்கரையிலே வந்தேபுலம்புருளாம்
மாறுவேடமாகி மாயவரைப்போலாக
வேகமுடனேதான் விசையனே நீயும்போய்
உன்மாதுக்குப்போயுரைத்து மனதைமிகதிருத்தி

ஆனைகுந்திக்கேகவிட்டு அர்ச்சுனுவாருமென்ருள்
தக்கபுகழுடைய தருமருனைக்கலுமே

அருச்சுனன் மாறுவேடங்கொண்டு சுபத்திரைக்குச்
சொல்வது.

அங்கேவிடைபெற்று அர்ச்சுனஞர்வீரியனும்
வாயுவேகமாக வந்தாரந்தப்புனலருகே
தண்டுகமண்டலமுஞ் சேர்ந்ததொருபுத்தகமும்
பின்குடுமை நூலும் பிரப்பங்கோல்கைபிடித்து
திருமால்தன்மைத்துனருஞ் சித்தரைப்போலாக
தன்தேவிக்கெதிராக தேர்விசையன்வந்துநின்று
ஆர்காணும்பெண்ணே ஆற்றங்கரைதனிலே
ஏன்காணும்பெண்ணே யிருந்தழுதாயிப்போது
உன்மைந்தனெருவனிந்த வைகைக்கரைதனிலே
விழுந்தானெனவழுதாய் விழவில்லைதானுமவன்
பெண்பேயே நீயுமப்போ போம்போமெனவுரைததான்
மாதுசுபத்திரையு மனதுமிகக்கலங்கி
திக்கென்றெழுந்திருந்து தேர்விசையன்முன்பாக
மூக்கால்வலம்வந்து முன்னேவந்துதெண்டனிட்டு
சித்தரே நீரும்என் சித்தத்தையறிந்துரைத்தீர்
மற்றுமுரைக்கவென்ருல் வாள்விஜயன்தேவியரும்
காண்டாவனமெரித்த காளையுங்கூறுவான்
மாயன்சகோதரி யல்லவோமங்கையரே
நீ-வாள்விஜயன்தேவியல்லோ பறையாமல்கூறுமென்
உன்மைந்தனெருவனல்லோ மாதேஒளியாதே [ருன்
மாயன்மகளொருத்தி உண்டில்லையோமங்கையரே
உன்மாற்ருன்மணம்புரிய வந்ததுங்கண்டில்லையோ
ஒன்றுமொளியாதே உத்தமியேகூறுமென்ருன்
மாதுசுபத்திரையும் வாள்விஜயனைப்பார்த்து
சித்தரே நீருந் தெரிந்துரைத்தீர்தப்பாது
ஒளிப்பதெங்கேவேதியரே வுள்ளபடிசொல்லிவிட்டீர்
அபிமன்னனெந்தன்மைந்தனாற்றில்விழவில்லையென்றீர்
பிழைப்பானேயென்மகனும் பிராமணரேகூறுமென்ரு
வேதியனைதொரு விஜயனுங்கூறுவான் [ள்
மங்கையரேவுன்மகனும் மாயன்பதிதனிலே
மாற்ருனைவென்றுஇரு மாயன்மகளானாரை

மணஞ்செய்துமீண்டு திரும்புவான்மங்கையரே
வருக்குமஞ்சாதே எம்பெருமான் தங்கையரே
எட்டாறுனுன்மகனு மிளங்கொடியைமாலையிட்டு
மன்னர்பதிக்க வருவான்தான்மங்கையரே
அஞ்சாதேமாதே நீ யரண்மனைக்கேகுமென்றார்

சுபத்திரை தன்னரண்மனைக்குப்போய்விடுவது.

ஆச்சிசுபத்திரையு மருச்சுனருக்குத்தெண்டனிட்டு
சித்திரவர்சொன்னதெல்லாம் திருவுளத்தில்தானிருத்தி
தப்பாமல்நம்பி நடுவேயரமனைதாய்
அபிமருடனேவாய் ஆனைகுந்திபோய்ச்சேர்ந்தாள்
காண்டாவனமெரித்த காளைமிகத்திரும்பி
அணைமுகர்கோமானும் ஐவருடன்போய்ச்சேர்ந்தார்

அருச்சுனன் தர்மருக்குச்சொல்வது.

தக்கபுகழுடைய தருமருக்குத்தெண்டனிட்டு
வெற்றிமதயானை வீமருக்குத்தெண்டனிட்டு
நாமமுடைய நகுலனைத்தான்தழுவி
நாமமுடைய சகாதேவனைசென்றணைத்து
தீயிற்பிறந்தவளை துரோபதையைஎச்சரித்து
ஐவருடன் அர்ச்சுனனுமேதுரைப்பான
போனேன்பிராமணன் போலேவடிவுகொண்டு
மெய்யாகவந்திருந்தான் மெல்லிசுபத்திரையும்
உள்ளபடிசாஸ்திரங் குருரைத்தேன்காணுத்தமிக்கு
மெய்யாகநம்பினாள்காண் மெல்லிசுபத்ரையும்
வருவானோஎன்மகனு மென்றேவணங்கினாள்காண் [ன்
மணஞ்செய்துவாருன் காண்வாளபிமகனென் றுரைத்தே
தக்கபுகழுடைய தருமர்மனமகிழ்ந்து
ஆயர்மகிமை அறிந்தோமென் றுசொல்லி
ஆலோசனைகள்பண்ணி இருந்தாரேஐவர்களும்

வல்லாக்கன் பாறையண்டை வருவது.

அப்போவனந்தனிலே அபிமன்னனுந்தாங்கையிலே
அந்தவனங்காக்கும் ஆங்காரராட்சதனும்
இட்டைபொழுதாறு விறைதேடலேனுமென்று
எழுநூறுமயானைத் திரளிரங்கிப்பேப்புக்கமீக
ஆனைஎழுநூறு மதுநாவில்தாங்பொசித்து

கீழ்க்கடல்நீரையெல்லாங் கிலாரித்துத்தானுரிந்து
அதிலுள்ளமீனையெல்லா மடைவாகத்தான்பொசித்து
வாய்மூக்கில்நீரைவிட மறுகடல்தானிரையும்
மச்சம்பொசித்தபின்பு மதயானைதான்பொசித்து
வயறுதிறம்பாமல் மாற்றுடித்தான்வருவான்
தான்தூங்கும்பாறையண்டை வந்தான்தரித்தலையன்
அபிமன்னன் நித்திரையைவல்லரக்கன்தான்கண்டு

வல்லரக்கன் அபிமன்னனை எழுப்புவது.

கண்டானேபையனைத்தான் கண்கள்பொறிபறக்க
என்காட்டுக்குவந்தவனார் காட்டையழித்தவனார்
ஈயெறும்புபூறுதே யென்னுடையகாட்டுக்குள்ளே
மானிடன்தூங்கவர நாளாச்சோஎன்காடு
கோபித்துக்கண்சிவந்து கோபமதிகமதாய்
பாம்புபோல்சீறி பட்சிப்பேனென்றுசொல்லி
பாவியரக்கனவன் பாறையின்மேலேறி
ஆரடாபையலே அஞ்சாமல்தூங்கவந்தாய்
நான்தூங்கும்பாறையின்மேல் நரிகுட்டிபோலேவந்து
தூங்கவந்தகாரியமேன் தூக்கியடிப்பேனடா
நித்திரையில்நான்பொசித்தால் நிலையாதுபாபமென்று
பாவமிகுந்துவரும் பரிகரிக்கக்கூடாது
எழுப்பிவிழுங்கவென்று இராட்சதனுங்கையெடுத்து
அரக்கன்துடைதட்டவுமே அந்தவனங்களெல்லாம்
கோடையிடிபோலிடித்துக் குமுறினதுபோலாக
அண்டையிலேதானிருக்கும் அதிகமலைமாமுந்
துண்டுதுண்டாக துணிந்துவிழுந்ததுகாண்
இடிசத்தந்தான்கேட்டு இயலபிமன்தான்புரண்டு
வலதுகைதான்மாறி இடதுகைகீழ்போட்டு [டான்
மற்றுமந்தபாறையின்மேல் வாளபிமன்பள்ளிகொண்
நித்திரைதான்செய்துருவு என்பதுங்கண்டோமே
காலின்பெருவிரலால் தன்பாறைதான்போக
பாறையுடனேந்தி பையனைக்கொண்டுவந்து
கல்சுனையிலேபோடவென்று கடுகிவாறான்ராட்சதனும்
கல்சுனைதன்னருகே கனபாறைதானிருக்க
அரக்கன்கரையேறி அபிமன்னனைத்தின்னவென்று
அரக்கனுந்தன்துடையி லறைந்தானிடிபோல

மனது திடுக்கிடவே வாளையேந்தாவெழுந்து
அபிமன்னனெழுந்தது.

சொற்பனங்கண்டெழுந்தான் சுபத்திரையாள்தன்மகனு
பாரளந்தார்தன்மகனை பவளவாய்சுந்தரியை [ம
வட்டமுலைசுந்தரியை வலக்கையைத்தான்பிடித்து
சரசங்கள்செய்வதுபோல் தான்கண்டான்கனவுபோல
பழிக்கக்கனவுகண்டேன் பாவியெழுப்பிவிட்டான்
மடையா அரக்கா நீ வன்னரகில்போய்விழுவாய்
என்றுசொல்லிவாளபிமனிருத்திவிட்டான் நித்திரையை
என்று அரக்க னெழுந்து மிகக்களைத்து
உன்கதையைச்சொல்லி வுரைத்தாய்சிறுபயலே
எங்குமிரைதேட யில்லாமலிங்குவந்தேன்
என்பசியாலுன்னையிப்போ வெனக்களித்தாரீஸ்வரனும்
என்பசிதீர்ந்தாலே யன்பாவமுன்னுடனே
அகப்பட்டாயென்கையிலே ஆயுசுமாண்டதினால்
பசிக்குதடாவெந்தனுக்கு பயலேயெழுந்திரென்றான்
தூக்கத்தைவிட்டு அரைமன்னன்கால்விழித்து
அப்போ-பார்த்தானேபாலன் பாரமுள்ளராட்சதனை
கண்டானேராட்சதனை கைபிசகுவந்ததென்று
அப்போ-ஈஸ்வரனைத்தானினைத்து இருபாதந்தெண்ட
மாயர்பெருமானை மனதிலேதானினைந்து [னிட்டு
தேவேந்திரனை சிந்தையிலேதானினைந்து
எழுந்திருந்தான்ராட்சதன் முன்னென்ன தான்சொன்னையெ
கைகட்டிவாய்மூடி கனத்தவிசேஷமெல்லாம் [ன்றான்
மெய்யாகவேசொல்லி விருக்கொண்டான்பாலனுமே

வல்லரக்கனிடத்தில் அபிமன்னன் தலைமுழுகி
வருகிறேனென்றது.

ஐயாவே நீகேளு மடியேன் தன்விண்ணப்பம்
உன்கையில்தான்மடிய வுழுதவிருந்தேன்
உன்னிடந்தேடிவந்தே னொருவிடம்நானறியேன்
செத்தவுடன்மோட்சம் சேரவேனுமையாவே
நித்திரைகொண்டதாலே செத்தாரிரியல்லோ
ஐயாவேஎன் னுடம்பு அழுக்காய் இருக்குதுகாண்
முழுகிக்குளித்துமே முன்வந்து நிற்கிறேனென் [ன்
பசியாலேஎன்னையப்போ பசியாத்திக்கொள்ளுமென்று

நல்லதென் றுவல்லரக்கன் ஞாயமுள்ளமன்னனென் று
ஆற்றுக்குநீபோ யப்படியேதான்முழுகி

அபிமன்னனிந்திரனை வரங்கேழ்க்கத் தவஞ்செய்தல்.

நல்லதென் றுபாலனுமே நடந்தானேயப்போது
கைபிசகுவந்ததே கைவாளுமில்லையென் று
எண்ணிவிசாரயிட்டு ஈசர்செயலென் று
ஆற்றிலேபோயிறங்கி அபிமன்னராசாவும்
முழுகித்தலையாற்றி முக்கண்ணனைப்பூசைபண்ணி
கிழக்குமுகமாக யிருந்தேகிருபையுடன்
சூரியனைத்தெண்டனிட்டு தோத்திரங்கள்செய்தானே
கடலிலேமுழுகிநின் று கதிரோனேசரணமென்றான்
பச்சைக்குதிரையுள்ளாய் பணிப்பாதையாளவனே
அழகுபனிரண்டுடைய ஆதித்தாசரணமென்றான்
அர்ச்சுனனார்புத்திர னபிமன்னனடைக்கலமே
அப்போகதிரோனும் அதிசயமாய்த்தான்பார்த்து
கண்டறியவேணுமென் று கதிரோனிறங்கிவந்து
கூறடாபையா கூப்பிட்டவயணமென்ன
ஆரியரேஎன்மரபு சொல்லுகிறேன்கேளுமையா
தருமருடன்பிறந்த தனஞ்சயனார்புத்திரன்நான்
என்பேரபிமன்ன னென்பாட்டனிந்திரன்காண்
மாயன்மகள்சுந்தரியை மணஞ்செய்யவேணுமென் று
வழிதப்பியிங்குவந்தேன் வல்லரக்கன்போகவொட்டான்
எதிர்த்துப்போர்செய்யவென்றே னென்கையில்வாளுமில்
அத்வானகானகத்தில் லகப்பட்டேன்சூரியனே [லை
வல்லரக்கன்கையாலே மடிந்துவிடநாளாச்சு [ஒட்டான்
பொருதவென்றால்வாளுமில்லை போகவென்றால்போக
ஆதித்தா நீர்கேளும் ஆகையினாலழைத்தேனுந்தனை
வல்லரக்கனைசெயிக்க வலுவையில்லையெந்தனுக்கு
இலுக்கெழுந்து நாங்கள் இரணங்கள் தன்னுடனே
என் றுசொல்லியிந்திரனும் இணைவாளைகற்பமிட்டார்
கதிரோனைதானழைத்து கனத்ததேர்நடத்துமென்றார்
பின்னையுமிந்திரனார் பெருகவேதானினைந்து
வாளொன் றுபோதாது மன்னவர்ப்பருக்கு
பாணமும்வில்லும் பத்திரகாளிகோயிலிலே
அடைக்கலமாய்வைத்தார்கள் ஐவருட ஆயுதங்கள்

வனையுடனேவாங்கி மன்னவனுக்குத்தருகவென்று
முப்பத்துமுக்கோடி முனிவர்களும்தேவர்களும்
நாற்பத்தெண்கோடி சத்தரிஷியோரும்
இந்திரனுந்தேவருமெல்லோரும்வந்தார்கள்
வந்தார்கள்பூமியிலே மாகாளிகோயிலண்டை
தேவரைக்கண்டு இடுக்கிட்டுமாகாளி
வீரமாகாளியிவளவள் கோவிலண்டை
வந்தவரைஎன்னவென மனங்குளிரகேட்டாளே
தேவேந்திரனுந் தெரியவேசொல்வாரும்
எந்தனிடபோரனுக்கு இளைப்புமெத்தவந்ததுகாண்
வுந்தனடைக்கலமாய் வைத்திருக்குமாயுதத்தை
அருச்சுனனுர்காண்டீபம் அம்புறாதூணியும்
இப்பாலே நீதா னெடுத்துக்கொடுமம்மாவென்றார்
தேவேந்திரனுந் தீவிரமாய்க்கேழ்க்கலுமே
வீரமாகாளி விசேஷமுரைத்தாளே
ஐவருவந்து அடியேனருமனையில்
அடைக்கலமாய்வைத்த ஆயுதத்தையான்கொடுத்தால்
நடக்குமொருஞாயங்கள் நான்கொடுப்பதில்லையென்றாள்
அதை-தேவேந்திரன்கேட்டு தேவிமுகம்பார்த்து
மாகாளிதனக்கு மறுவார்த்தையேதுரைப்பார்
பாரமுள்ளராட்சதனிடம் பாலனகப்பட்டதுவும்
பொல்லாதராட்சனவன் புசிக்கநினைத்ததுவும்
நல்லதென்றுபாலன் நம்மைநினைத்ததுவும்
எல்லோருங்கூடி இளப்புவந்ததென்றுசொல்லி
பாலனைதப்பவைக்க வந்தோமேகாரிழையே
நீமாட்டேனென்றுசொன்னால மடிந்திடுவான்பாலனும்
அபிமன்னன்மடிந்தாலே அர்ச்சுனனும்தான்மடிவான்
மெத்தப்பழிகள் விளைந்திடுமேபாலனுக்காய்
ஒருநாழிகைக்குள் ஒப்பிவைப்பேனுன்கையில்
என்றவருஞ்சொல்லி இதமாய்யெடுத்துரைத்தார்
வீரமாகாளியரும் விரும்பிமனதுவந்து
அர்ச்சுனராயுதத்தை அவர்கையிலொப்பிவைக்க
பார்த்தாரேஇந்திரரும் பாரவில்லுமாயுதத்தை
ஆயிரஞ்சூலவண்டி அடங்காதபாரமிது
போயுதவமாட்டாது பிசகுவருமென்றுசொல்லி
என்றுவிசாரமிட்டு இந்திரரும்அப்போது

ஓலைப்பூவாக ஒளிவுடனே தான்சபித்து
காளியைப்பார்த்து கதிரோனுமிந்திரனும்
நாங்கள்கொண்டுபோக நடக்காதுகாளியரே
இப்படியேபோனலோ இராட்சதன்தான்பார்த்து
எங்குந்திரியவொட்டான் எமகண்டசண்டாளன்
ஆதனலே நாங்க ளஞ்சுவோமவன்தனக்கு
கொண்டுபோய் நீகொடுங்காண் உன்குமாரபிமனுக்கு
என்றுசொல்லகாளியரு மிதுவேதுதலைபாரமென்று

காளி அபிமனுக்கு வாள்கொடுப்பது.

வாளைச்சடையிலே மங்கையருந்தான்சொருகி
வில்லம்புபாணமெல்லாம் மேனியிலேபூஷணமாய்
கட்கத்தைவாய்தனிலே கவ்வியந்தகாளியரும் [ல்
மச்சந்தைவிச்சுளிதான் வந்தொருக்கால்பாய்ந்ததுபோ
தக்கதொரு துாக்கையரு்ம் சலத்திலேபோய்பாய்ந்தாள்
நீர்நாகமபோலேயல்லோ நீந்திவாருள்கடையாற்றில்
வாருள்காண் நீரில்வரு மாதாவைக்கண்டானே
ஆலித்துவாளபிம னம்மையைத்தோத்தரித்து
மாயனிடதங்கையரே மகாதேவன்தேவியரே
நீலிதிரிசூலி நிரஞ்சனியேயேகவல்லி
பிள்ளையைகாப்பாற்றும் பெருமையுள்ளமாதாவே
மைந்தனைக்காப்பாற்றும் மாதாவே நின்சரணம்
மாயாபராஞ்சோதி மைந்தனுக்குபுத்திசொல்லும்
வாழ்த்தியேவாள்தாரும் வல்லரக்கனைகெலிக்க
என்றதொருவாசகத்தை ஏகவல்லிதான்கேட்டு
மைந்தனைபார்த்து மகிழ்ந்துரைப்பார்காளியரும்
மாற்றானைவென்றிடுவாய் மகாபலமுண்டாவீர்
எதிர்த்து அமர்பொருந்தி இராட்சதனைவென்றிடுவீர்
என்றுவாயாரவாழ்த்தி வாட்கடகம்கைகொடுத்து
வில்லம்புபாணம் வீராமாகாளிதந்தாள்
செயம்பொருந்தும்மகனேயென்றுதேவியும்போய்மறை
வாட்கடகம்வாங்கி வருவதற்குமுன்பாக [ந்தாள்

அபிமன்னன் வல்லரக்கனோடு எதிர்க்கிறது.

அரக்கனுமப்போது அபிமன்னனைத்தானழைப்பான்
வாடாசிறுபயலே என்வயறுபசிக்குதடா

காலைபசியெடுத்து கடுகியிளப்பாருதடா
நாபலிஇன்றால் நாவில்ருசியுமுண்டு
எத்தனைநேரமாய் நீமூழுகப்போயிருந்தாய்
வாடா நீபயலேயென்ன வல்லரக்கன்கூப்பிடவே
வந்தானேவாளபிமனன் வல்லரக்கன்தன்னெதிரே
வாடா நீவல்லரக்கா வலுமையுண்டோயுன்கையில்
நில்லடாவல்லரக்கா நிலைதப்பிபோகாதே
ஓடியொளித்து வுயிர்தப்பிப்போகாதே
கேளடாராட்சதனே கெர்வமேன்உந்தனுக்கு
இந்தவனத்தி லிருந்ததொருமிருகமெல்லாம் [ன்
கொன்றுதின்றாயித்தனை நாள உன்குடலைப்பிடுங்கவந்தே
என்றுசொல்லராட்சதனும் வங்கிமிகச்சிறித்து
வாடாசிறுபயலே வாயாடவேண்டாங்காண்
சாகதுணிந்தல்லவோ சண்டையிட்டுப்பேசுகிறாய்
நசுக்கிப்பிழிந்துஉன்னை என்றுவில்தடவுவண்டா
கெருவமேனுந்தனுக்கு கிட்டவாவென்றுசொன்னான்
வீரிட்டெழுந்திருந்து வில்வாங்கி அம்புதொடுத்து
ஆக்கரித்துப்பற்கடித்து அரக்கனைத்தான்பார்த்து
ஏண்டா நீவல்லரக்கா என்னையழைக்கிறாய்
காண்டாவனமெரித்த காளைமகன் நான்தாண்டா
வாடா நீசண்டைக்கு வாள்வீரா வல்லரக்கா [ன்னான்
என்றுசொல்லிபாலனுமே எடுத்தெரித்துவார்த்தைசொ
பார்த்தானேவல்லரக்கன் பையனிடவார்த்தைகளை
அறியாதபாலனுக்கு ஆண்மைகள்வந்ததென்ன
நன்றாச்சுநன்றாச்சு நரிஎதிர்த்தாற்போலாச்சு
நரிஎதிர்த்தாற்சிங்கமாமோ நாயெதிர்த்தால்புலியாமோ
என்று நீட்டினான்கைகள்ரெண்டும நீலமலைபோலே

அபிமன்னனுக்கும் வல்லரக்கனுக்கும் சண்டை.

கண்டானேபாலகன்தான் கைவருஞ்சத்துவத்தை
அண்டாதபாணத்தை அபிமனும்வில்விளைத்து
துண்டாககலைபடவே தொடுத்தானேபாலனப்போ
பாணம்வருகிறதைப் பார்த்தந்தவல்லரக்கன்
பூணிக்கையாகவே பிடித்துபிசைந்துவிட்டு
பின்னையும்வல்லரக்கன் பாணம்பின்வருகுதென்று
கல்லுமலைகளும் கனமலைகளுள்ளதெல்லாம்

எல்லாம்பிடிங்கி பிடிபோலேதான்சொரிந்தான்
அந்தமலைகளு மற்றுள்ளமரங்களும்
பஞ்சுபோல்தான்பறக்க பார்த்தனேபாலனுமே
வல்லரக்கன்கோபங்கள் மட்டிடப்போகாது
வெல்லும்பெருமலையை வேரோடேதான்பிடுங்கி
நல்லஅபிமன்னை னடுத்தலையிற்போட்டானே
வாரபெருமலையை வாளபிமன்தான்கண்டு
அன்றுகணைதொடுத்து அறுத்தான்பொடியாக
இரண்டுமலைபிடுங்கி இராட்சதனும்விட்டெறிந்தான்
இரண்டுமலைநாலாக இணைவாளால்வீசிவிட்டான்
பிலத்துடனேவல்லரக்கன் பெருப்புலிபோலசிரித்து
இருநாறுகாதவழி எடுத்துவந்தோம்தின்னவென்று
எடுத்துவிழுங்கிவிட்டா லிந்நோஞ்செறித்துவிடும்
நரியெதிர்த்தால்சிங்கமென்று நாட்டில்கதைகேட்டோம்
இவனோசிறுபாலனென் றெழுந்தானேவல்லரக்கன்
மூன்றுமலைபிடுங்கி மூகத்தின்மேல்விட்டெறிந்தான்
மூன்றுமலைத்தூளாக மூறியடித்தான்வாளபிமன்
நாலுமலைபிடுங்கி ராட்சதனும்விட்டெறிந்தான்
நாலுமலைதூளாக நூறுங்கடித்தான்வாளபிமன்
ஐந்துமலைதான்பிடுங்கி அபிமன்மேல்விட்டெறிந்தான்
ஐந்துமலைதூளாக்கி அபிமனெழுந்திருந்து
எழுகணைதொடுத்து இராட்சதன்மேல்விட்டானே
மார்பிலேபட்டு வருகுது உதிரமங்கே
வல்லரக்கன்கோபித்து மலைபிடுங்கிக்கைபிடித்து
பூமியதிர்ந்துவிழ பூலோகம்நெக்குவிட
கதிரோனுஞ்சந்திரனும் வீதிதப்பிப்போய்மறைய
வனத்தில்மிருகமெல்லாம் மதுவனமோடிவிட
சிங்கங்களெல்லாம் சீறியெழுந்தாற்போல்
ஆனைகளெல்லாம் அடித்துவிழுந்தாற்போல்
கீழேழுலோகமெல்லாம் கிடுகிடென்றுதானதிர
எதிர்த்தாரிருவருமே இருண்டவனந்தனிலே
ஒருவர்க்கொருவர் உரத்ததுதெப்பையங்கே
ஆறுமலைபிடுங்கி அபிமன்மேல்விட்டெறிந்தான்
வாடாநீவல்லரக்கா உன்வாழ்வொழிக்கவந்தேன்
கேளடாவல்லரக்கா உன்செருவமழிக்கவந்தேன்

நில்லடாவல்லரக்கா நீயோடிப்போகாதே
என்றுசொல்லிவல்லரக்கனிதுபுதுமையென்றுசொல்லி
ஏழுமலைபிடுங்கி எதிர்த்தானேவல்லரக்கன்
ஏழுபதினாலா விழவடித்தான்வாளபிமன்
எட்டுமலைபிடுங்கி விட்டெறிந்தான்ராட்சதனும்
எட்டுமலைபட்டுவிழ இணைவாளால்வீசிவிட்டான்
பத்துமலைபிடுங்கி பையன்மேல்விட்டெறிந்தான்
பத்துமலைசிதற பறக்கடித்தான்வாளபிமன்
கோபம்வந்துவல்லரக்கன் கோடையிடிபோலே
வேகாளம்வந்துவிழுந்தானே வல்லரக்கன்
பார்த்தானேபாலன் பாவியிடசத்துவத்தை
அடித்தானேவாளபிமன் அவனங்கப்பொடியாக
விழுந்தானேவல்லரக்கன் மேனியெல்லாந்தானடுங்க
கண்டானேபாலன் கபடானராட்சதனை
துண்டாகவேவெட்டி துணிக்கவேவேண்டுமென்று
வாளுருவியோடிவந்தான் மாயன்மருகோனும்
காளையவன்வல்லரக்கன் கடுகெனவேதானெழும்பி [ன்
மலைகளெல்லாம்மாண்டிடவே மரம்பிடுங்கியோடிவந்தா
வாடா நீவல்லரக்கா கேளாயொருவார்த்தை
மலைபட்டபாடுதெரியுமே மரங்களென்னசெய்யுமடா
இட்டவாடாராட்சதனே வெட்டிபலியிடுவேன்
காடுகண்டுவல்லரக்கன் கைகொண்டுதானீட்டி
ஈரல்வேலகுத்தி எடுத்துவிழுங்கவென்று
நீட்டினான்கையை நெடியமரம்போலே
வல்லரக்கன்தான்வரவே வாளாபிமனுஞ்சிரித்து
எத்தனைநேரம் இவனுடனேபோராட்டம்
மந்திரவாளெடுத்து வாளபிமன்கைபிடித்து
அரக்கனிடகையிரண்டை மறுத்தானேபொடியாக
கூவுகிறான்வல்லரக்கன் கொடிமுடிதானதிர
ஆவென்றசத்தம் அண்டங்கிடுகிடென்ன
ஆகாயப்பூமியதிர்ந்து நடுங்கவே
சத்தசமுத்திரமும் ஜலம்வற்றியுள்ளடங்க
சந்திரசூரியர்கள் தானடுங்கியோடிவர
முப்பத்துமுக்கோடி தேவர்களும்முனிவர்களும்
தேவேந்திரன்கூட திகைத்துமுகம்பார்த்து
வல்லரக்கன்சண்டை பலவந்தமாச்சுதென்று

சொல்லிநகைக்கிறதும் சூட்சங்கள்பேசுவதும்
இப்படியாகச்சொல்லி யிருக்கின்றவேளையிலே
பையவேமன்னன் பாணசரத்தாலே

வல்லரக்கன் இறந்துவிட்டது.

விழுந்தானரக்கனுமே மேருமலை துண்டானதுபோல்
அசைந்துகிடக்கச்சே அபிமன்னராசாவும்
அரக்கன்முழங்காலை தரித்தானேயன்னேரம்
தலையறுத்துத்தரையில்விழ தன்வாளால்வீசினான்
அழுதுவிழும்போது ஆவென்றுவாய்குளறி
தங்கைகமலகன்னி தாயென்றுகூச்சலிட்டான்
பட்டான்வனந்தனிலே பையன்கைவாளாலே
அறிந்தாள்கமலகன்னி அவனிடகூச்சல்களை
கேட்டேகமலகன்னி கடோர்கஜாயென்மகனே
மயங்கிவிழுந்தவளு மகனைத்தேடலுற்றான்
வல்லரக்கன்முண்டமது மலைமரங்களுள்ளதெல்லாம்
உருண்டுஉருண்டு பொடிப்பொடியாகுதுகாண்
இட்டமுடன்கொன்று இரண்டதுகாண்முண்டமது
பூமியொரு அம்மியுமாய் அவனொருகுழவியுமாய்[போல
அவ்வனத்தில்மிருகமது அம்மியின்மேல்மிளகாயது
அரைத்துதுவைக்குதுகாண் அரக்கனிடமுண்டமது
அப்போதுவாளபிமநரக்கனண்டைவந்துநின்று
ஏதடா இவனுக்கு இந்தபலம்வந்ததென்று
அமிர்தகலசம் அடிவயிற்றிலுண்டோதான்
என்றுசொல்லிபாலனும் எதிராகவந்துநின்று
வாளாலேகுத்தி வயிற்றைக்கிழித்தானே
அறுத்தானேகலசத்தை ஆற்றிலேபோட்டுவிட்டான்
போனானேவல்லரக்கன் புலம்பியேஆகாயம்
அவனுயிர்தானு மழித்துவிட்டார்பெருநாகில்
இந்திரனும்தேவர்களும் எல்லாமனமகிழ்ந்து
பூமாரிதான்பொழிந்தார் போயபிமன்னர்தம்மேலே
அப்போதபிமர்வந்து ஆற்றிலேதான்முழுகி
கைகால்கழுவி கனிவாயுங்கொப்பளித்து
மேலேறிவந்து முழுகிப்பசியதனால்
கானகத்திலுள்ள கனிபழங்கள்வேணதெல்லாம்
பண்டுபலாதிகள் பலாப்பழங்கள்மாம்பழங்கள்

திட்டமுடன்புசித்து தீர்த்தான்பரிதனை
வாள்வில்லைக்கைபிடித்து வானபிமனேது சொல்வான்
அரக்கன்விழும்போது அதுவென்றுதான்கூவி
மருமகனைத்தானினைத்து வாட்டிமசலுவையென்று
சலுவைவருமளவும் செடியிலேவாள்சொருகி
வழிபார்த்துவாளபிமன் மலைபோலவீற்றிருந்தான்
ஆலமரத்திலே அதின்விழுதையுஞ்சவிட்டு
ஏறிவிளையாடி இருந்தானேவாளபிமன்
அப்போ-காலகன்னிதன்மகனை கடிவேதாளனழைத்து
வாடாகடோற்கஜா மதவீமா தன்மகனே
உன்-அம்மானரக்கனுக்கு ஆபத்துவந்ததென்று
என்னை நினைத்து இடிபோலேகூச்சலிட்டான்
போயறியவேணுமடா போர்புரியும்வீரனே
ஏதடிதாயாரே எங்களம்மான்றனக்கு
ஆபத்துதான்வருமோ அம்மாவே நீர்கேளும்
தேவர்களாலும் செயிக்கவேபோகாது [ன்
எங்களம்மான்வல்லரக்க னிடும்பனுக்குச்சமானமுள்ளா
என்றுகடோற்கஜனுமெடுத்துரைப்பானப்போது
அப்படியல்லவடா அறியாய்நீதம்பியரே
போயறிந்துவாருமென்று போகவிடைகொடுத்தாள்
அப்படியேநல்லதென்று அடிவணங்கிதெண்டனிட்டு
தெண்டுகபண்டலமும் திடமானவில்லையுமாய்
எட்டுதேர்கட்டி யிடிபோலகொக்கரித்து
மருத்துமவனுரைப்பான் மாதாமுகம்நோக்கி
அம்மானுக்காபத்து வந்ததென்றுசொன்னீர்
அவனைச்செயிக்கிறவ ரொருவருமில்லைவையகத்தில்
சிவன்பிர்மாவிஷ்ணுவுந் தேவேந்திரன்முதலாய்
எமதர்மராஜனு மெதிர்விழிக்கப்போகாது
அப்படிக்கொத்தவர்மேலார்சண்டைசெய்வார்கள்
கூப்பிட்டானென்று கோதையமேசொன்னீரே
அப்படியேமெய்யானாலாபத்தேயானாலும்
கஞ்சிகொண்டுபோனால் தனக்குதவுமாதாவே
காவடியில்கட்டி கனமாகயிப்பொழுது [னும்
கொண்டுபோகவேணுமென்று சொன்னான்கடோற்கஜ
அவ்வசனங்கேட்டு அம்மாள்கமலகன்னி
கடிகவேதாளியரைக் காதலுடன்தான்கலந்து

பதினாயிரக்கலம் பச்சரிசிதானெடுத்து
பொன்னாயிருகலமும் கூடவேதான்கலந்து
ஒசிபாய்காச்சி காவடியில்வையுமென்றான்
பண்ணைப்பாட்டை பருந்தம்பையின்னையுடன்
குன்றுபோல்தான்பிடுங்கி கொப்பரையில்தான்சமைத் [தான்
துகட்டியுருட்டி பெருமலைபோல்தான் இரட்டி
கஞ்சியொருபக்கம் கறிகளொருபக்கமுமாய்
வைத்தார்கள்காவடியில் மலைபோலேராட்சதனும்
எடுத்தான்கடோற்கஜனும் யிருதோளுந்தானடுங்க
கொப்பரையில்கஞ்சி குச்சிதளும்பவேதான்
சீக்கிரமாய்தானேவந்தான் சிறுவன்கடோற்கஜனும்
கால்நடையாய்தானடந்து கடுகவேவாரானே
பச்சைமலைதேடி பவழமலைதான்தேடி
கொல்லிமலை ஆராய்ந்து குடகுமலைதான்தேடி
அம்மான்சலங்குடிக்கு மரியபடுதனிலே
காட்டானை நீர்குடிக்க கண்டான்கடோற்கஜனும்
தென்னையுங்காவடியும் சீருய்தலையில்வைத்து
அம்மானைத்தேடியே அருஞ்சுனை நீர்குடித்து
கரையேறிவந்து காவடியுந்தானெடுத்து
மாமனிருக்கும் வனந்தேடிதான்வரச்சே
மேல்கடல்பொங்கி வெள்ளமிட்டுவாராப்போல்
செவ்வானம்போலிரத்தம் சிவந்துவரக்கண்டானே
கண்டான்கடோற்கஜனும் கைகாலசைத்துநின்றான்
என்னபுதுமையிது எண்ணமிட்டுகடோற்கஜனும்
உதிர ஆறுதாண்டி ஓடிவாரான்கடோற்கஜனும்
அம்மானிருக்குமந்த அக்காட்டிலுட்புகுந்தான்
பார்த்தானே நாலுதிக்கும் பட்டமலைமரத்தை
தோப்புகளெல்லாம் தூளாய்க்கிடக்கிறதும்
மாமரங்களெல்லா மடிந்துகிடக்கிறதும்
காடுகள்சிங்கங்கள் காட்டானையுள்ளதெல்லாம்
பொடிப்பொடியாய்த்தானங்கே பூமிநிறைந்ததுவும்
கண்டான்கடோற்கஜனும் காலிரண்டும்பாவாதே
காடுகடந்துமவன் கண்டானேயம்மானை
மலைபோல்விழுந்திருக்கும் வல்லரக்கன்தன்தலையை
பார்த்தான்கடோற்கஜனும்பார்த்துமேதலையசைத்தான்
ஆரடாகொன்றவர்க ளம்மானையென்றுசொல்லி

அபாரமாயழுதா னம்மானைத்தானினைத்து
உன்காட்டை யழித்தவனோ கட்டைகுலைத்தவனோ
ஈயெறும்புநீண்டாத இருண்டவனந்தனிலே
மானிடர்வந்து வதைக்கவழியாச்சோ
ஆலித்தெழுந்து அம்மானைகொன்றவனை
இப்பொழுதேகொன்று எமலோகஞ்சேர்த்திடுவேன்
என்றுசபதமிட்டு இராக்கினைவைத்தான்காவடியை
அம்மானைகொன்றவனை அழித்துபழிவாங்கவென்று
தெண்டெடுத்துதோளில்வைத்து சீக்கிரமாய்த்தானெழு
காடெல்லாந்தேடுகிறான் கடோற்கஜனப்போது [ந்து
ஓடியேயெங்கும்பார்த்து உயர்ந்தவடிகாணவில்லை
பாலனேயல்லாமல் பரந்தவடிகாணவில்லை
பழுதுகளைதெளித்து ஆலமரத்தடியில்
விழுதின்மேலேறி விளையாடும்பாலனைத்தான்
கண்டானேகடோற்கஜனும் காளையபிமன்னவனை
தம்பிசிறுபிள்ளாய் தாட்டீகராட்சதனை
கொன்றவனைக்காணாயோ கொற்றவனேசொல்லுமென்
அம்மானைக்கொன்றவனை அறியாயோபாலகனே [றான்
அவ்விசேஷங்கேட்டு அபிமன்னராசாவும்
சொன்னானேவாய்திறந்து சூதானவார்த்தைகளை
ராட்சதனைக்கொன்ற நற்பாலனிப்போது
வடக்குமுகமாகப் போனானேமலைமேலே
இடுக்கென்றுதானோடி தீவிரமாய்ப்பார்க்கலுமே
அப்படியேபோனா னவன்சொன்னசாடையெல்லாம்
தேடியேகாணாமல் திரும்பிவந்தான்பாலனண்டை
காணேனென்றுசொல்லி கவலையுடன்கேட்டானே
தெற்குவடக்கு தென்மேற்குதென்கிழக்கு
நான்குதிக்குமோடி நலமாகப்பார்த்தானே
அரக்கனைக்கொன்றவ னகப்படுவானென்றுசொல்லி
ஓடியேபாருமென்று உத்தாரப்பண்ணினானே [து
பூனையானையைப்போல் பெருப்புலிபோல்தான்றிரித்
தேடிப்பிடித்தவனை சீக்கிரமாய்கொல்லுமென்றான்
அவ்வார்த்தைகேட்டு அப்படியேதானோடி
நாலுதிக்குமோடி நாட்டமுடன்பார்த்தானே
காடுமலையும் கடியவனந்திரமும்
வடகடலுந்தென்கடலு மற்றுமுள்ள தீவுகளும்

திட்டமுடன்பார்த்து திரிந்தெங்குங்காணுமல்
எங்கேயுங்காணுமலெங்கிவிசாரமிட்டு
மறுபடியுந்தான்வந்து வருத்தமுடன்கேட்டானே
கேட்டவுடனே கிருபையுள்ளபாலனுமே
உன்-அம்மானைக்கொன்றவனை யவனை நீகண்டாக்கால்
என்ன நீசெய்வாய் எனக்கறியக்கூறுமென்றான்
அச்சொல்லுகேட்டவுமே கருக்காகத்தானுரைப்பான்
என்-அம்மானைக்கொன்றவனை யறிந்தேனேயாமாகில்
வெட்டிபலியிடுவேன் வீரமாகாளியற்கு
குத்திவலித்து குடலீரல்தான்பிடுங்கி
வெட்டிதலைபிளந்து விட்டெறிவேன்நாலுதிக்கும்
நன்றாயுடல்பிளந்து நாலுதிக்கும்போட்டிடுவேன்
என்றான்கடோற்கஜனுமே துரைப்பான்பாலனுமே
கோபித்துக்கண்சிவந்து கொக்கரித்தவப்பொழுது
அடங்கியிருந்தா லரக்கனுஞ்சட்டைசெய்யான்
ஆலிக்கடிப்பாய்ந்து அபிமனும்கொக்கரித்து
வெட்டினவன்நானிருக்கப் பட்டிமகனைதேடுவதேன்
ஆபடாராட்சசனே அரக்கனுக்குநீயுறவோ
பாபாயரக்கனைப்போல பாழ்பட்டுப்போவாயே
வாடாநீயுத்தத்தில் மஞ்சனமாட்டுகிறேன்
போபடாசெய்குவேன்நான் புக்கியின்போகாதே
கொன்றவனுந்தானல்லடாய் கொலமுள்ளராட்சசனே
உன்-அம்மானைக்கொன்றொரு ஆணப்பிள்ளை நான்தான்

கடோற்கஜனுக்கும் அபிமன்னனுக்கும் யுத்தம்.

என்றேடேசண்டைக்கு எதிர்த்துவாவென்றுசொன்னு
தாவியவில்லெடுத்து சரபாணந்தான்பார்த்து [ன்
கானேயபிமனுடன் கடோற்கஜனே துரைப்பான்
வாருய்சிறுபயலே என்னம்மானைக்கொன்றவனார்
உனக்குத்துணைதானே ஒளியாமல்நீசொல்லு
உன்துணைநான்கண்டா யுன்னம்மானைக்கொன்றவன்
நீயெதிர்த்தாலுன்னையும் இருப்ளவுசெய்வேன்நான்
என்றுசொல்லவாளபிமன் வங்கிக்கடோற்கஜனும்
பக்கத்தில்வாளைவைத்து பட்சமாய்சொல்லுகிறுன்
உள்ளேயழைத்துக்கொண்டு துள்ளித்திரிகிறுன்காண்
மடிந்தவனைப்பார்த்தால் மலைபோல்பெரியவன்காண்
அணிந்தவனைப்பார்த்தால் துரும்பில்சிறியவன்காண்

முன்னேபெரியோர்க ளுரைத்தமொழிப்படியே
சிறியதெல்லாம்பெரியதுக் கிறையென்றுசொல்வார்கள்
பெரியதெல்லாஞ்சிறியதுக்கு இறையாச்சுதையாவே
இந்தப்புதுமையை இனியறியவேணுமென்று
மூன்றுமுழக்கச்சை மூணுசுற்றாயிறுக்கி
எழுநூறுயானை யிழுக்கவொண்ணாதெண்டுகளை
சுற்றியெடுத்துதோளின்மேல் வைத்துக்கொண்டுநின்று
பொருமப்பாவென்று சொல்லிபோற்களத்தில்வந்து[ன்
இருப்புலக்கைகைபிடித்து எறிந்தானவன்தலைமேல்
வருகிறதண்டையவன் வாளாலேதட்டிவிட்டான்
காதவழியெழும்பி கால்மேலேவந்துவிழுந்தது
கடோற்கஜன்தாவெழும்பி கடுங்கோபந்தானாகி
பாரமலைபிடுங்கி பாலன்மேல்விட்டெறிந்தான்
அந்தமலையை அபிமன்னராசாவும் [மன்
பந்தடிக்குந்தன்மையைப்போற் பறக்கடித்தான்வாளபி
கடோர்கஜனுமப்போது கனகோபங்கொண்டெழுந்தா
வில்லையெடுத்து வீரிட்டுகடோற்கஜனும் [ன்
ஆயிரம்பாண மபிமன்மேல்பொழியவே
உபதேசம்பண்ணி யுக்கிரமாய்விட்டானே
பாலனதுகண்டு பாரியவில்லெடுத்து
தூளாகிப்போக தொடுத்தானெதிர்பாணம்
பாணமும்பாணமும் பாவியெதிராகொண்டு
பாளையாகப்பறந்து துணிந்துவிழுந்ததுகாண்
ஐந்நூறுபாணம் அபிமன்னராசவும்
அரக்கன்தலைவிழவே அந்நேரம்விட்டானும்
கடோற்கஜன்கண்டுமே கையாலேதட்டிவிட்டான்
வடக்கேயெறிந்துவிட்டான் வாளபிமன்பாணத்தை
கோபித்துப்பாலனுமே கோடையிடிபோலே
வாய்விட்டுக்கூறி மறுபாணந்தான்தொடுத்தான்
ஆயிரத்துமூன்று அதிகபாணந்தான்தொடுத்தான்
மாயக்கடோற்கஜனும் வந்ததொருபாணமெல்லாம்
ஓயாமல்தட்டி உதிரவடித்தான்பூமியிலே [லாம்
கடோற்கஜனும்தண்டாலே வந்ததொருபாணமெல்
வாளபிமன்னன் வருந்தண்டைதட்டிவிட்டான்
தண்டையிடையவைத்து திகைத்துமலைப்பேருக
முகத்துமுடியசைத்து மூக்குமேல்கையைவைத்து

இந்தவுலகி லெவருமெதிரில்லை
சக்கரட்டுமுனியுங் கட்டுமந்திரவாளமதும்
ஒட்டியப்பொருதாலதும் உடையும் நடையழகும்
தம்முடையவங்கிஷதவான் போலேயிருக்குதென்று
ஈஸ்வரனோவிஷ்ணுவோ எழுதும்பிரமாவோ
சூரபத்மனைச்செயித்த சுப்ரமண்யவேலவரோ
கஜமுகனைக்கொல்லவந்த சண்முகவிக்கினரோ
தக்கன்தலையறுத்த தனிவீரபத்திரரோ
ஐவர்க்கரியவரோ ஆதிநாராயணரோ
ஆரடாபயலேயென் றதட்டிக்கேட்கலுற்றான்
எனக்கேட்கக்கடோற்கஜனு மேதுரைப்பான்பாலனு
மாறுய்நீராட்சதனே கேளாயொருவார்த்தை [மே
காவலழிக்கவந்தேன் கட்டுரைப்பேசவந்தேன்
வில்லதனைக்கருவறுப்பேன் வல்லுயிரைக்கொள்வேன்
பொருதடாவென்றான் போகாதேநில்லென்றான்
கனவீமன்பெற்றெடுத்த கடோற்கஜன்தான்கேட்டு
வாடாசிறுபயலே கேளாயொருவார்த்தை
என்னம்மான்பழிதீர பண்டைசிதறடிப்பேன்
போனீயாகில போகவொட்டேனானும்மை [ர்
என்றுசொல்லியப்பொழுது இருவருமேபதாமெதிர்த்தா
ரெண்டால்கடோற்கஜனும் தீவிரமாய்த்தாடித்தான்
பந்துவிழுந்தாற்போல் வந்துவிழும்பாலற்கு
அப்போதுபாலனுமே அனலாயெறிபறந்து
வாளாலேவெட்டினான் மன்னன்கடோற்கஜனை
பூமாலையாகவே சேர்ந்தவன்கழுத்தில்
கண்டான்கடோற்கஜனும் கபடதோவென்றுசொல்லி
எறிதீனத்து எண்ணையிட்டுகடோற்கஜனும் [றான்
இதையறியவேனுமென்று அபிமன்னனைவந்துநின்
தம்பிசிறுபிள்ளாய் சமர்த்தா நீசண்டைபண்ணுய
வித்தையயா என்மனதில் சந்தோஷந்தானுச்சு
உன்பேருதனைச்சொல்லி பொருதடாயென்றான்
வாடாநீராட்சதனே மாமன்பழிவாங்கவந்தாய்
ரணைக்களத்தில் ஒப்பாரி கேட்பாரோதார்வேந்தர்
படுகளத்தில் ஒப்பாரி கேட்பாரோதார்வேந்தர்
ஊரார்தான்கேட்பார்க ளேற்றகவிவாணர்
என்பேரை நீகேட்க என்பேரில்கவிபாடுவையே [ன்

பேருமில்லையூருமில்லை பொருதுவோம்வாடாவென்று
அப்போகடோற்கஜனும் அபிமருடனே தசொல்வான்
பிற்பாடுசொல்லுகிறையா பெறுமையுள்ளசிறுபிள்ளாய்
ஊர்பேரைக்கேட்கவென்று லும்முடைய ஆயுதத்தை
கடக்கவெறிந்துவிட்டு கைகட்டிவாய்புதைத்து
வித்துவர்போலேதான் விரைந்துடன்கேட்டாலே
சொல்லுவனேசொல்லேனே துரைமன்னனெப்படியோ
என்றுசொல்லிவாளபிம னெழுந்திருந்தப்பொழுது
உயர்ந்தமரந்தனிலே உற்றவாளதான்சாற்றி
கால்மேலேகால்போட்டு காளையுட்கார்ந்தானே
அப்போகடோற்கஜனு மபிமனைத்தான்பார்த்து
ஆக்கவழிப்பயலேயுன் அக்குலத்தைசொல்லுகைக்கு
வெட்குவையோயாமாகில் விளம்புகிறேன்கேளடா நீ
என்னோடேசொல்லாதே எதிர்மரத்தில்சொல்லுமென்
சண்டையிட்டுவாளபிமன் சதிராகவீற்றிருந்தான் (முன்
காளைமுகம்பார்த்து கடோற்கஜனே துரைப்பான்

கடோற்கஜனும் அபிமன்னனும் சமாதானமானது.

தருமர்பெரியப்பன் தமக்கிளையாரென் தகப்பன்
அருச்சுனன்சிற்றப்ப னவர்க்குமூத்தவரென் தகப்பன்
நகுலசகாதேவர் நல்லதொருசிற்றப்ப
ஐவருக்குத்தேவி யழகான துரோபதையாம் (ம்
எந்தனுக்காயியென்று எடுத்துரைத்தான்கடோற்கஜனு
உறங்குவாரேறாண்டு உருட்டிவரன்தென்மலையை
இணங்காமலைகளெல்லாம் எள்ளுப்பொறியாகும்
விஷமாகநஞ்சையுண்ட வீமசேனனென்தகப்பன்
என்மாதாகமலகன்னி எனபேர்கடோற்கஜன்காண்
என்றுசொல்லகடோற்கஜனு மேங்கியேவாளபிமன்
கேட்டிருந்தபாலன் திடுக்கிடென்றுதானடுங்கி [ன்
மூத்திரைகலந்துகொண்டு மூர்ச்சையாய்த்தான்விழுந்தா
மூர்ச்சைதெளிந்தபின்பு முகம்பார்த்துவ துரைப்பான்
அண்ணேகடோற்கஜா அறியாமற்கொடுமைசெய்தேன்
அண்ணனோடேமர்பொருத யநேகதோஷம்வந்ததுகாண்
தமயனோடமர்பொருந்தி சாமதுரோகியானேன்
என்று-பச்சைதழையொடித்து பாதத்தின்மேற்போட்டு
ஐவர்குலத்தில்வந்த அழகான அண்ணாவே
அருச்சுனனார்பிளளை யபிமன்னன்தான்தானே

என்தாயார்சுபத்திரையா ளென்தகப்பனருச்சுனனார்
இருவரும்ஒருகுலத்தி லிழக்கலிருந்தோமே
என்றுசொல்லியப்போ இருவருந்தானெழுந்து
கட்டியணைத்து கனிவாயைமுத்தமிட்டு
அப்பா நீயெங்கேவந்தாய் அபிமன்னராசாவே
வல்லரக்கன்கையிலே மாளா திருந்தாயே
மெத்தவிசாரமிட்டு வெகுவாய்மனமுருகி
சிந்தையுடன்கலியாண சேதியெல்லாஞ்சொன்னானே
அப்படியேயாகுது அபிமன்னராசாவே
ஒப்பமுடன்சொல்லியுரைத்தான் கடோற்கஜனும் [ன்று
அம்மானைத்தானெடுத்து அடக்கம்பண்ணவேண்டுமே
பட்டமரங்கள் பருங்கட்டையுள்ளதெல்லாம்
எடுத்துவைத்துமூட்டி எரிதணலுமிட்டார்கள்
கொள்ளியும்வைத்து குடமுமுடைத்தார்கள்
செய்யும்வரிசையெல்லாம் செய்துமுடிந்தார்கள்
ஆற்றிலேவந்தார்கள் அலறத்தலைமுழுகி
சத்திசிவபூசையெல்லாம் செய்துமுடித்தார்கள்
வந்தார்கள்கஞ்சியண்டை பாலனும்கடோற்கஜனும்
கஞ்சியுமிலைக்கரியும் கண்டானபிமராசன்
ஏதடா அண்ணாவே இலைக்கரியும்கஞ்சிகளும்
என்று அபிமர்கேட்க எடுத்துரைத்தானப்போது
அம்மாள்கமலகன்னி யனுப்பிவைத்தாளண்ணனுக்கு
கொண்டுவந்துவைத்தேன் குடிப்போம்வா தம்பியரே
அப்படியேயண்ணாவே யமர்ந்துகுடியுமென்றான்
இன்பமுடன்கொப்பறையை எடுத்துவந்துவைத்தானே
அஞ்சிசிரங்கா கஞ்சி யபிமனுங்குடித்தபின்பு
கஞ்சிகுடித்துவிடாய்தீர்ந்து களைகளுந்தானாறி
கொப்பறையில்கஞ்சியெல்லாங் குடியுங்களண்ணாவே
இலைக்கறியும்கஞ்சியு மெல்லாங்குடித்துவிட்டான்
வந்தார்களாற்றிலே வாய்களைத்தான்கழுவி
கொப்பெனவேதானுங் கூடியிருவருமாய்
அம்மாள்கமலகன்னி யரண்மனைக்குத்தான்வரவே
வந்தாரிருவருமாய் தலைமறவில்வந்துநின்றார்
பாலனபிமன்னனும் பதில்வார்த்தைகூறலுற்றான்
அண்ணாவேநானும் அரண்மனைக்குவாரதில்லை
என்னையுங்கொல்லுமென்று சொல்வாளேதாயாரும்
அம்மான்மனைதை யறியவேபோகாது

அண்ணாவெழுந்திப்போய் அறிந்துநீவாருமென்றான்
நல்லதுதம்பியென்று நடந்தானேகடோற்கஜனும்
அம்மான்கமலகன்னி ஆசாரச்சாவடியில்
கண்டானேதாயாரை கைகுவித்துதெண்டனிட்டான்
அப்பாமகனேயுங்க ளம்மானைக்கண்டாயோ
நன்றாயிருக்கிறாரோ நாயகர்என்பிறப்பு
உன்மாமன்முகத்தை உறுதியாய்க்கண்டாயோ
காரியமாய்சொல்லென்று கமலகன்னிதான்கேட்க
மாதாவுஞ்சொல்ல மறுவார்த்தைகூறலுற்றான்
அபிமனைக்கொன்றானடி வல்லரக்கனுங்களண்ணன்
இருவருமகப்பட்டு எமலோகம்போனார்கள்
என்றுசொல்லிதானுரைத்தா னிவன்மனதைத்தாளறிய
அவ்விசேஷங்கேட்டபின்பு அம்மாள்கமலகன்னி
அடித்துபுரண்டு அறைந்துகொண்டாள்மார்மேலே
அபிமன்னராசாவை அவன்கொல்லக்காரியமேன்
அறியாதபாலகனை அடித்திழுத்துபோட்டானே
பாவிபழிகாரன் பாலகனைக்கொன்றானே
ஆகாதவல்லரக்க னவன்செத்தாலாகாதோ
பாலனபிமன்னன் மாண்டால்மனம்பொருந்தேன்
சாவேன்கெடுவேன் சமுத்திரத்தில்போய்விழுவேன்
அபிமன்னன்தன்னுடனே யாவிதனைப்போக்கிடுவேன்
மகனையிழந்துநான் மண்ணிலிருப்பதில்லை
ஐவர்வெளியாகி யருச்சுனனுங்கேட்டாக்கால்
எந்தனுக்குப்பேச்சு இடையூறுவந்துவிடும் [ன்
அபிமன்னன்தன்னுடனே என்னுயிரைபோக்கிடுவே
அப்போமடியாமல் ஐவர்முகம்பாராமல்
இப்போமடிந்திடுவே னென்மகனார்தன்னுடனே
அப்பாமகனே வளர்த்திவிடு அக்கினியை
என்றுகமலகன்னி எழுந்தாள் ஆயாசமுடன்
அம்மான்மனதை யறிந்துமேகடோற்கஜனும்
தம்பிசெத்ததில்லையம்மா தாயாரேஎன்றுசொன்னான்
என்றுசொல்லிகடோற்கஜனு மிருபாதந்தெண்டனிட்டு
தெண்டனிட்டமகனைத் தீவிரமாய்த்தானெடுத்து
பாலனெங்கேயென்று பரிவுடனேதான்கேட்டாள்
இட்டுவருகிறே னென்தாயேமாதாவே
வந்தான்கடோற்கஜனும் வாளபிமன்தன்னுடனே
அம்மானழைத்து ஆதரவாய்ச்சொன்னதையும்

அண்ணனைவிட்டு அபிமன்னனைக்காட்டுமென்றார்
இட்டுவாவென்றுசொல்லி என்னையனுப்பினதும் [ன்
பாலனுக்குசொல்லியப்போ பட்சமுடன்தானுரைத்தா
நல்லதென்றுசொல்லி நடந்தாரிருவருமாய்
நமையனுந்தம்பியுஞ் சந்தோஷமாகவேதான்
அம்மானைச்சுற்றிவந்து அடிவணங்கிதெண்டனிட்டு
தெண்டனிட்டபிள்ளையை தீவிரமாய்த்தானெடுத்து
பாலவபிமன்னனைத்தான் பட்சமுடன்தானெடுத்து
மகனேமகனேயென்று வாய்திறந்துமுத்தமிட்டாள்
உச்சிமுகந்து உடம்பெல்லாந்தான்தடவி
வல்லரக்கன்காட்டு வழியாகஏன்வந்தாய்
அந்தஅரக்கன்மெத்த ஆகாதபாவியடா
பொல்லாதராட்சதனை போராடிக்கொன்றாயோ
ஐயோமகனே அவனுன்னைக்கொன்றாலேதுசெய்வேன்
தாரூர்புகழ்வேந்தர் தருமருக்கேதுசொல்வேன்
நாமக்கொடிவேந்தர் நகுலருக்கேதுசொல்வேன்
சாஸ்திரமிகுந்த சகாதேவர்க்கேதுசொல்வேன்
தேருருவடிவழகி துரோபதைக்கேதுசொல்வேன்
கொடிவளையல்முன்கை சுபத்திரைக்கேதுசொல்வேன்
என்றுகமலகன்னி இருந்தாளப்பொழுது
கண்டாளபிமனும் கமலகன்னியாதாவை [தாள்
கொண்டாடிக்கொண்டாடி குறைகளெல்லாந்தான்தீர்த்
அபிமனைத்தான்பார்த்தாள் ஆயிகமலக்கன்னி
எங்குவந்தாயென்மகனே இந்தஅடவியிலே
வந்தவகையென்னுடனே வழியாகச்சொல்லுமென்றாள்
மாயர்பெருமான் மகளானசுந்தரியை
மணக்கென்றிருந்தபெண்ணை எட்டுதலைலக்குமணர்க்கு
பங்கமறச்சண்டாளன் பாவிதுரியோதனனும்
மணஞ்செய்யவிசைந்தானும் குருடனுடபேரனுக்கு
நாளைக்குக்கலியாணம் நல்லமுகூர்த்தமிட்டு
பகல்முகூர்த்தமென்றுசொல்லி பாக்குபகர்ந்தார்கள்
அந்தவிசேஷமது கேட்டுசுந்தரியும்
சாவேன்கெடுவேன் சமுத்திரத்திலபோய்விழுவேன்
அத்தைமகன்வாராவிட்டா லலைந்துவிழுவேனென்
வாளபிமன்னன் மணவாளனென்றுசொல்லி
வளர்த்தசரீரத்தை மன்னனுக்கிறைகொடுப்பேன்
வந்தாலபிமனு மத்தியானத்துக்குள்ளாக

நான்பிழைப்பேன் என்றுசொல்லிசுந்தரியும்
எந்தனுக்கோலை எழுதிவரவிட்டாள்காண்
சீட்டையெடுத்துபார்த்து சிவாசிவாவென்றுசொல்லி
அம்மாளென்னை அனுப்ப யிணங்காமல்தானிருந்தாள்
அந்தமனதை யறிந்தேயடியேனும்
ஆருமறியாமல் அங்கொருவர்காணமல்
மனதிருக்கமாட்டாதே வந்தேனடியேனும்
வழியுந்தெரியாமல் வல்லரக்கன் றுவனத்தில்
வந்துதிகைத்து வழியறியமாட்டாமல்
பயந்து நடுங்கியந்த பாறையின்மேல்நான்படுத்தேன்
அப்போதுவல்லரக்க னடித்துவிழுங்கவந்தான்
இந்திரனைத்தோத்தரித்து எங்களப்பா ஆயுதத்தை
நான்வாங்கியப்போ சண்டைபண்ணியேஜெயித்தேன்
பின்னையுமுண்டான பேச்சுவகையுள்ளதெல்லாம்
ஒன்றுங்குறையாம லுரைத்தானபிமராசன்
தாயார்கமலகன்னி சந்தோஷந்தானுகி
அபிமனைக்கட்டி யணைத்துமுத்தந்தானுமிட்டு
ஆனலழகுமன்னன் னருச்சுனர்தன்தேவி
நாககன்னிபுத்திரன் நல்லரவானென்றொருவன்
உந்தனுக்குத்தம்பி யுடற்பிறப்புநல்லரவான்
பாலனுக்குநேர்மூத்தோன் பட்சமுள்ள அண்ணனவன்
அவனுடனேமூவருமாய் ஆயர்மனைபுகுந்து
தம்பியபிமன்னனை தலைமறவாயங்கேவைத்து
நீங்களிருவருமே நீறுபொடிதூளாக்கி
சுந்தரியைத்தாலிகட்டி சுகமாகவாங்களென்று
நாககன்னிசொற்படியே நடவுங்கள்பிள்ளைகளே
என்றுகமலகன்னி எடுத்துரைத்தாள்வாசகங்கள்
நல்லதென்றுசொல்லி தாயார்க்குத்தெண்டனிட்டு
தெண்டனிட்டபிள்ளைகளைச் சீராகத்தானெடுத்து
வாழ்த்திவிடைகொடுத்து மாதாவுமனுப்பினாள்

கடோற்கஜனும் அபிமன்னனும் கமலகன்னியண்டை
விடைபெற்றுக்கொண்டு வருகிறது.

கடோற்கஜனும்பாலனுமே கடுகநடக்கலுற்றார்
காடுகடந்து கரியமலைதான்கடந்து
ஆறுகடந்து அரியசுனைதான்கடந்து
நாடுகடந்து நல்லமனைதான்கடந்து

இஞ்சிவனங்கடந்து எலுமிச்சையுட்புகுந்தார்
வாரவரும்போறவரும் மட்டிடப்போகாது
கலியாணத்துக்குப்போவாரை கணக்கிடப்போகாது
கருவிநடந்தார்கள் கனமான ராசாக்கள்
அங்கேயிரண்டுமலைகளா மாயமாளாவிதிற்கும
வல்லரக்கன்போலமத வீமன்தண்டதுபோல்
வானத்தைமூடி வளர்ந்திருப்பான்நல்லரவான்
ஒருமலைமேல்சார்ந்துகொண்டு ஒருமலைமேல்கால்நீட்டி
இப்படியேதானிருந்தா னிடும்பனரவானும்
வந்தாரிருவருமே மலைமறைவில் நின்றார்கள்
தேசத்திலுள்ளவர்கள் துரியோதனன்கூட்டமெல்லாம்
கிருபர்கிருபாச்சாரி கீர்த்தியுள்ளவீஷ்டுமரும்
தோரு அசுவத்தாமன் துரைமன்னரெல்லவரும்
பதினொன்படைத்தலைவர் படைமன்னரெல்லவரும்
எத்திசையுந்தானுளும் இயலான ராசாக்கள்
சட்டைகழட்டாத தார்வேந்தரெல்லோரும்
போட்டசட்டைவாங்காத அடுக்கொருகோடி
நாமமுடிமன்னரெல்லாம் நடந்தார்கள்தன்கீழே
கர்னன்விகர்னன் காம்போதேசத்தாசன்
மன்னர்குருக்களும் மகாசேனையுள்ளதெல்லாம்
நல்லரவான்காலகீழே நடந்தார்களனைவரும்
மலைபடியண்டையிலே மன்னரிருவோருமே
நின்றுமேதான்பார்த்தார் நீட்டினகால்வாங்காததை
நல்லரவானண்டையிலே ஞாயமாய்நின்றுகொண்டு

## அரவானோடு கடோற்கஜனும் அபிமன்னனும் யுத்தஞ் செய்தல்.

ஆடாராட்சதனே யப்பாலேகால்வாங்கும்
பாரடாவெங்களுக்கு பயந்துரிதமென்றார்
பார்த்தானே நல்லரவான் பசங்களிடவார்த்தைக்கோ
இப்பெரியசேனையிலு மிவர்கள்பெத்தசேவகரோ
ஆனைகுதிரையில்லை அரசமன்னர்தானுமில்லை
காலாளாய்வந்திருவர் கால்வாங்குமென்றார்கள்
இவர்கள்சவுரியத்தை இப்போதறிவோமென்று
போங்களடா காலகீழே போகவழியில்லையடா
நோக்கமுடன்வந்தீரோ நுழையவழியில்லையடா
போக்கற்றுவந்தீர்களோ போகத்தெரியாதோ

கால்வாங்கச்சொன்னதென்ன கனமானமன்னவரே
அப்பாலேபோங்களடா அடிபடப்போறீர்கள்
துரைமன்னராசாக்கள் சுகமாய்நுழைந்தார்கள்
மானிடத்தோலோடே மனிதர்நுழைந்தார்கள்
நீங்கள்வீணுக்குவந்தீர்கள் வெட்கங்கெட்டுப்போவீர்க
சும்மாநுழையுங்கள் சுருக்காகமன்னவரே [ள்
என்றுசொல்லிநல்லரவா னெடுத்துரைத்தானப்போது
அவ்விசேஷங்கேட்டு அபிமன்னராசாவும்
கோபித்துக்கண்சிவந்து கோவைப்பழம்போலே
தெண்டைச்சுழற்றி திருப்பிவிட்டான்கால்மேலே
ஏதடாயிங்கே எறும்புக்கடித்ததென்றான்
குதிந்துக்கதம்பியவன் கோடையிடிபோல்நகைத்து
கண்கள்சிவந்து கடுங்கோபமாகவே
வில்வளைத்தம்புதொடுத்து விட்டானரவானும்
கடோற்கஜன்தண்டால் கையிலேதடுத்துவிட்டான்
ஐந்துஅபாண மலைப்பாணம்விட்டானே
பாலனதுகண்டு வாளாலேதடுத்துவிட்டான்
ஒருவர்க்கொருவர்சண்டை உக்கிரமானகோபமொடு
அட்டதிக்குபாலகர்கள திர்ந்துநடுங்கிடவே
சந்திரனுஞ்சூரியரும் தானோடிப்போனார்கள்
தேவேந்திரனுந் திகைத்துமிகப்பார்க்க
இப்படியாக இணைபிரியாச்சண்டைபண்ணி
கண்கள்சிவக்கிறதும் கடுங்கோபமாகிறதும்
மீசைதுடிக்கிறதும் வெகுகோபமாகிறதும்
பிடியம்புதான்தொடுத்து விட்டானரவானும்
கடோற்கஜனுந்தண்டாலே கடுகிதடுத்துவிட்டான்
சரமாரிதான்பொழிந்தான் சமர்த்தன்அபிமராசன்
பாணமும்பாணமு மேலிப்போர்செய்யுதங்கே
ஒருவர்க்குத்தாங்காம லோடியேபோகுதுகாண்
பாணப்புகையிலே மடியுதேபட்சிகளும்
பார்த்தானேநல்லரவான் பசங்களிடசத்துவத்தை
ஆரோதெரியாது அறிந்திடுவோமென்றுசொல்லி
கேட்டானேநல்லரவான் கிளிபவளவாயாலே
தம்பிசிறுவரே சவுரியத்திலவல்லவரே
உங்களிடவங்கிஷத்தை யுரையுமெனச்சொன்னான்
படுகளத்திலொப்பாரி கேட்பாரோபார்வேந்தர்
உன்னுலேயானது உத்தமனேசெய்யுமென்றான்

ஆனால்கேள் தம்பியரே ஆனவகைச்சொல்லுகிறேன்
கேளுங்கள் தம்பியரே வெளிப்பாகச்சொல்லுகிறேன்
என்தகப்பனருச்சுனனாம் என்பேர் நல்லரவான்
என்தாயார்பேர் நாககன்னி குருமரிடவங்கிஷந்தான்
இப்படியாய்ச்சொல்லி எடுத்துரைத்தான் நல்லரவான்
அந்தவிசேஷமடைவாகக்கேட்டிடவும்
எங்களிடவங்கிஷத்தை கேளுங்களண்ணரே
என்தகப்பன்வீமசேனன் யென்பேர்கடோற்கஜன்
தாயாரகமலகன்னி தர்மருடவங்கிஷந்தான்
தம்பியபிமன்னன் தனஞ்சயனார்பிள்ளையடா
அருச்சுனனார்பெற்றெடுத்த அபிமன்னனிவன்தானடா
சுபத்திரையாள்பெற்றெடுத்த அய்யநற்பாலனவன்
இப்படியாகச்சொல்லி இருவருமுரைக்கலுற்றார்

நல்லரவானும் கடோற்கஜனும்
அபிமன்னனும் சமாதானம்.

உண்மைகளைச்சொல்லி உறவுகொண்டாடினபின்
வில்லைத்தவில்போட்டுமவன் வாகாகவோடிவந்து
கட்டியணைத்து கனிவாயைமுத்தமிட்டு
அண்ணனுந்தம்பியையு மாவாலெடுத்தணைத்து
தாழவுட்கார்ந்து தம்பியைமடிமீதில்வைத்து
கேட்டானே நல்லரவான் இனியவனவாயாலே
அப்பா அபிமன்னே அர்ச்சுனனார்புத்திரனே
எங்குவந்தாய்தம்பியரே எனக்கறியச்சொல்லுமென்றான்
அண்ணனுகடோற்கஜரே யறியவேசொல்லுமென்றான்
அவ்விசேஷங்கேட்டு அபிமன்னராசாவும்
சுந்தரியையெத்தனுக்கு சொல்லியிருந்தாரே
பெண்சாதியென்றுசொல்லி பெரியோர்முன்னாளில்
அத்தைதான்முதலா யமர்ந்திருந்தகாரியத்தை
தன்னாத்திரியோதிரன் தன்மகன்லக்குணாக்கு
செல்வக்கலியாணம் செய்யவேபோறானும்
அந்தவிசேஷமது கேட்டாளேசுந்தரியும்
எந்தனுக்குஓலை யெழுதிவரவிட்டாள்
பின்னையுமுண்டான பேச்சுவகையுள்ளதெல்லாம்
நன்றுமெழுதி யனுப்பினாள் நாயகியும்
அதுகண்டேனண்ணுவே அடியேன்புறப்பட்டேன்
மனம்பொறுக்கமாட்டாமல் வந்தேன்காணண்ணனுவே

வல்லரக்கன் தன்வனத்தில் வழிதப்பிவந்துவிட்டேன்
கொல்லத்துணிந்தானே கொடும்பாவிவல்லரக்கன்
வல்லரக்கனையுமுடனே வருத்தமாய்சண்டைபண்ணி
கொன்றேனவனை கொடுமையுள்ளராட்சதனை
அவ்விசேஷங்கேட்டுதான் அண்ணன்கடோற்கஜனும்
என்னைமறியாம லென்மேலேசண்டைசெய்தார்
அண்ணனுநானுமாய் ஐந்தாறுநாழிகைமட்டாய்
சண்டைகள்பண்ணினோம் மெத்ததோர்வையில்லாமல்
வங்கிஷம்பேசி யறிந்தேன்காணண்ணாவே
பின்னையுமெத்த போனவகையுள்ளதெல்லாம்
ஒன்றுங்குறைவில்லாம லுரைத்தானேபாலகனும்
அம்மாள்கமலகன்னி அனுப்பிவைத்தபூஷணமும்
அண்ணனையுங்கூட்டி அனுப்பிவைத்த ஆண்மைகளும்
உன்னுடன்பேசி உங்களம்மாள்கமலகன்னி
உன்னுடையவித்தைஎல்லாம் தப்பாமல்தானுரைத்து
உன்னுடனேமூவருமாய் உறுதியுடன்சண்டைபண்ணி
சுந்தரியைத்தாலிகட்டி சுகமாகவாங்களென்று
அனுப்பினாள்கமலகன்னி அண்ணாவேயிங்குவந்தோம்
என்றுசொல்லிபாலனுமேஎடுத்துரைத்தானுள்ளதெல்
நல்லதென்றுதான்கேட்டு நல்லரவானப்போது [லாம்
சந்தோஷப்பட்டு தலையசைத்துக்கொண்டானும்
நல்லதென்றுமூவருமாய் நடந்தார்களப்போது
தாயிருக்கும்பாதாள லோகத்திடமறிந்து
நாககன்னிபக்கலுக்கு நடந்தார்கள்மூவருமாய்
அம்மாளிருக்குமந்த ஆசாரச்சாவடியில்
கண்டார்கள்தாயாரைக் கைகுவித்துதெண்டனிட்டார்
பிள்ளைகளைப்பார்த்து பெருமையுடன்தான்வாழ்த்தி
ஏதடாநல்லரவான் இவர்களியாவரிடவங்கிஷங்காண்
சொல்லடாவென்று செவிகொடுத்துதான்கேட்டான்

நல்லரவான் அபிமன்னன் சேதியைதாயார்க்குக் கூறல்.

வெற்றிமதயானை வீமன்குமாரனம்மா
தாயார்கமலகன்னி தன்மகன்கடோற்கஜன்தான்
ஆனலழகுமன்ன னருக்சுனனார்பெற்றபிள்ளை
உந்தன்புருஷனுடைய ஏற்றகுமாரனும்
சுபத்திரைக்குபிள்ளையம்மா சுந்தரிக்குமாப்பிள்ளைகாண்
சுந்தரியைத்தாலிகட்ட வந்தானபிமனுமே

என்றுசொல்லி நல்லரவா னெடுத்துரைத்தானப்பொழு
காரியமாய்வந்த கலியாணபேச்சையெல்லாம் [து
பூரணமாய்சொல்லியல்லோ போதித்தான் நல்லரவான்

நாககன்னி கூறுவது.

அவ்வசனங்கேட்டு அம்மாள்எ றிபறந்து
கோபித்துக்கண்சிவந்து கூறியவளெழுந்து
திரியோதிரன்சேனை தேசத்திலுள்ளதெல்லாம்
அதிரவேவெட்டி ஆகாயம்போக்கிடுவேன்
என்றுசொல்லிசபதமிட்டு எழுந்தாளே நாககன்னி
கண்டானே நல்லரவான் காலிலேபோய்விழுந்து

நல்லரவான் கூறுவது.

நானிருக்க நீபோக ஞாயமோ தாயாரே
சிமிட்டிவிழிப்பளவில் துரியோதனன்சேனையெல்லாம்
அதட்டி அரைக்ஷணத்தி லாயுபலிகொண்டிடுவேன்
எட்டியடித்து எமலோகம்போக்கிடுவேன்
தூக்கியடித்தவரைச் சுந்தரிக்குமாலையிட்டு
தம்பிகையில்பங்கிலியம் தரிப்பித்து நான்வாரேன்
எனக்குவிடைகொடம்மா என்தம்பிதன்னுடனே
என்றுசொல்லி நல்லரவா னெடுத்துரைத்தான் தாயார்க்கு
தாயார்மனங்குளிர்ந்து சம்மதித்தாளப்போது
கோபந்தணிந்தபின்பு கொம்பனையாளே துரைப்பாள்
அரவான் கடோற்கஜன் இருவர்முகத்தைதான்பார்த்து
என்பிள்ளைபாலனைத்தான் இங்கேயிருக்கவைத்து
அங்கேஇருவரும்போய் ஆயனூர்புரம்புகுந்து
பங்கபடவடித்து பகருக்கிதூத்திவிட்டு
துவாரகாபுரியை மிகச்சுட்டுகரியாக்கி
சுந்தரியைபல்லக்கில் சுகமாகஎடுத்துவந்து
என்முன்னேதான்விடுங்கள் எதிரில்லாமக்களே நீர் [னி
என்றுசொல்லியப்பொழுது எடுத்துரைத்தாள் நாககன்
தம்பியருஞ் சாஷ்டாங்கதெண்டனிட்டு
உத்தமியேயென்தாயே ஒருவார்த்தைசொல்லுகிறோம்
தம்பியையிங்கேவைத்து தவறுதேகொண்டுவாரோம்
சுந்தரியைக்கொண்டுவந்தால் சூதாயிருக்குமம்மா [கள
களவிலேகொண்டுவந்தால் கள்ளனென்றுசொல்லுவார்
பத்தலிலேதானிருந்து பார்த்திருக்கத்தாலிகட்டி
விந்தையுடன்மன்னவர்கள் வெட்கிதலைசாய்த்திருக்க

மங்கிலியந்தரித்து வரவேணுந்தாயாரே
என்றுசொல்லி நல்லரவான் இதமாயெடுத்துரைத்தான்
அவ்விசேஷமதை அதுகேட்டு நாககன்னி
நல்லதப்பாவென் மகனே நாயகமே நீகேளும்
தம்பி அபிமன்னனை சண்டையிலே காட்டாமல்
இராசமுடிமன்னவனை ரணமுகத்தில் காட்டாமல்
மறைவாகத்தான்வைத்து மகாசண்டை நீங்கள்பண்ணி
தண்டுமுறித்து தளங்களழிந்தபின்பு
சுந்தரிக்குமங்கிலியந் சுகமாய்த்தரியுங்கள் [து
என்றுபெட்டியைத்தான் திறந்து புலிவாளைப்பட்டெடுத்
திட்டமுடன் மங்கிலியம் திரள்பூஷணமுள்ளதெல்லாம்
பட்டிரவிக்கைகளும் பருமுத்துத்தாழ்வடமும்
ஈட்டி தலைக்குப்பி சுந்தரிக்கு ஆனதெல்லாம்
திட்டமுடன் பெட்டிகட்டி சீராகத்தான்கொடுத்தாள்
சொன்னபடிசெய்யுமென்றுசொல்லிவிடைகொடுத்தாள்
அப்படியே நல்லதென்றுமதையெடுத்துக்கொண்டார்கள்
அம்மானைச்சுற்றிவந்து அடிவணங்கித்தெண்டனிட்டார்
தெண்டனிட்ட மக்கள்தனை சீராகத்தானெடுத்து
வாழ்த்திமனமகிழ்ந்து மாதாவுமப்போது
போய்வாருமென்றுசொல்லி புறப்பட்டார்மூவருமாய்
வாசல்கடந்து மண்டபங்கள்தான்கடந்து
சாத்திரக்கொடிவேந்தன் சகாதேவன்மகனார்
தொந்திசெட்டிவீற்றிருக்கும் தூயமலைவந்தார்கள்
அந்தவனத்தி லழகானதொந்திசெட்டி
உயர்ந்தமலைமீதிருந்து ஒருகையில் திராசுகொண்டு
மற்றொருகையிலே மலைபிடுங்கிகுண்டாக்கி
வருவாரைப்போவாரை மறித்துத்தராசில்வைத்து
நிறுத்திநிறைக்கொரு நிண்ணயம்பொன்வாங்கி
வாங்கியபொன்னையெல்லாம் மலைபோலத்தான்குவித்து
இன்னம்வருவோர்க்கும் எதிர்பார்த்து அங்கிருந்தான்
அரவான்கடோற்கஜனும் அபிமருமங்கேவந்து
சகாதேவன்மகனார் சாத்திரவான்தொந்திசெட்டி
வருகிறபேர்களைத்தான் வங்கிஷமென்றறியாமல்

தொந்திசெட்டி யுத்தம்.

கண்டந்தமூவரையும் கானகத்துத்தொந்திசெட்டி
மகவீசுங்காசு கடுகெனவேதாருமென்றான்

காளையரவான் கடோற்கஜனுமே துரைப்பான்
ஆரடாபயலே ஆகடியம்பேசுகிறாய்
வழியில்தாராசுகளை வாங்கடா நாங்கள்போக
பாரடாபயலே பயணந்துரிதமடா
தாராசுதனைவாங்கடா சனுதியில்போகவேணும்
கேட்டந்ததொந்திசெட்டி கிளிபவளவாயாலே
ஆரடாமாணிடரே அடிபடப்போறீர்கள்
துரியோதனனுடைய சேனைபரிகலமும்
பதினெண்படைதலைவர் பாங்காய்நிறுத்தேனே
அவர்களிலும்பெரியவரோ ஆண்மையுள்ளவீரியரோ
அரவான்கடோற்கஜரும் அபிமன்னராசாவும்
சீறிஎரிபரந்தார் சிங்கக்குட்டிபாய்ந்ததுபோல்
அதுகண்டுதொந்திசெட்டி அவனுமெழுந்திருந்து
மூவருடன்போர்பொருத முடிகிறான்தொந்திசெட்டி
அபிமன்னராசாவை அபர்த்தியிருவருந்தான்
தெண்டுடனேவில்லுகளும் தீவிரமாய்த்தானெடுத்து
தொந்திசெட்டிமேலே தொடுத்தார்கள்பாணசரம் [து
அவனுடனெதிர்த்து அப்போ ஆயுதத்தைத்தானெடுத்
மூவருடனே அவன் மூண்டியப்போசண்டைபண்ணி
பாணங்களப்போது மழைமாரிபோல்பொழிய
பூமிகிடுகிடென்று பூலோகந்தானதிர
மலைகள்பருவதங்கள் யிருதுண்டாயற்றுவிழ
எதிரானதன்மலைகள் யிருதுண்டாயற்றுவிழ
இப்படியாக யிருசாமஞ்சண்டைபண்ணி
ஒருவர்க்குங்காயம் யுறுதியுடன்பட்டதில்லை
இந்தப்புதுமை ஏதென்றுதொந்திசெட்டி
தம்பிடவங்கிஷத்து ராசமன்னர்தானிவரோ
அறிந்திடுவோமென்றுசொல்லி ஆணழகன்தொந்திசெ
மன்னவரோராசரே நீர் வழிபட்டுமூவருந்தான் (ட்டி
ஆருடையவங்கிஷங்காண் அரியபுரையுமென்றான்
படுகளத்திலொப்பாரி கேட்பாரோதார்வேந்தர்
சண்டைமுனையிலே தாவுறவுகேட்பாரோ
கத்திமுனையிலே கனவுறவுகேட்பாரோ
என்று அரவான் இடும்பானவார்த்தைசொன்னான்
சொன்னவிசேடமது தொந்திசெட்டிதான்கேட்டு
மூவரையுந்தான்பார்த்து முடிமன்னன்தானுரைப்பான்
நீங்களுரையாமல் நின்னையமாய்த்தானிருந்தீர்

என்பிறப்பைச்சொல்லி எடுத்துரைப்பேன் நீர்கேளும்
பாண்டுமகராஜர்குலம் பாண்டவரைவர்களில்
தருமருக்குஇளையான் சகாதேவனென் தகப்பன்
நகுலரும்அருச்சுனரும் நல்பெரியவீமருந்தான்
தளராதனஞ்செயனார் தருமர்பெருமாளும்
நால்வருமெந்தனுக்கு நல்லபெரியப்பனமார்
ஐவரிடவங்கிஷங்காண் என்தாயும்வீரகெங்காள்
என்றுசொல்லதொந்திசெட்டி எதிராளமூவருந்தான்
கையாயுதத்தை கடுகெனவேவரவழைத்து [ம்
மோசம்வரப்போச்சுதென்று மூத்தோனகடோற்கஜனு
அரவான்கடோற்கஜனும் அண்டையிலேதான்வந்து
கட்டியணைத்தவனை கண்மணியேநாங்களுந்தான்
பஞ்சவர்கள் தங்களிட பாலகரென்றுதானகூறி
கடோற்கஜன்தானுங் களிவாயெடுத்துரைப்பான்
தருமர்பெரியப்பன் தமக்கிளையானென்தகப்பன்
தெண்டாயுதப்படைத்த திரள்வீமனென்தகப்பன்
என்தாயார்கமலகன்னி என்பேர்கடோற்கஜன்தான்
அருச்சுனருஞ்சிறறப்பன் அவர்குமாரர்தானிருவர்
நாககன்னிதன்மகனும் நல்லரவான்தானுமவன்
சுபத்திரையாள்தனுடைய துய்யவபிமன்னனவன்
என்றுகடோற்கஜனும் எடுத்துரைத்தானப்பொழுது
அதுகேட்டுதொந்திசெட்டி அண்ணன்தம்பியென்றறி
மூவரும்நீங்களிங்கே மூடிக்கிவந்திரிப்போது [ந்து
சொல்லுமண்ணேயென்றுசொல்ல தொந்திசெட்டிதான்
[கேட்டான்
அப்போதுகடோற்கஜனு மறவானுமேதுரைப்பான்
தம்பிஅபிமருக்கே தாமென்றேசுந்தரியும்
மாயன்பெருமாள் மகளாயிருந்தாளே
அவளை-திரியோதிரனுந் தன்மகன்லக்குணர்க்கு
கொள்ளவேவந்து குலப்பெருமாள்தனுடன்
நாள்மூகூர்த்தமிட்டு நலமாக்யிருக்கையிலே
அந்தவிசேஷம் அதுகேட்டுதம்பியும்
அவன்வந்தான்பாவம் வல்லரக்கன்தன்வனத்தே
அவன்-சண்டைதொடுத்து சங்கரித்தானப்பாலே
அந்தச்சமயத்திலே அடவியிலேநான்போனேன்
கண்டேனபிமனையுங் கலந்துறவாடியங்கே
என்தாயார்கமலகன்னி தன்மனைக்குயிட்டுவந்தேன்

அவளுமாதுகேட்டு அதிநயமாய்க்கொண்டாடி
தாலியுங்கூறையும் தங்கப்பொன்பூஷணமும்
எடுத்துக்கொடுத்தவளும் என்னையுப்போவென்றுசொ
இருவருங்கூடி இப்பால்வருகையிலே [ன்னான்
அரவானுங்கண்டு அறியவுறவாடி
மூவருங்கூடியப்போ மூர்க்கமுள்ள நாககன்னி
அம்மாளைக்கண்டு அடிவணங்கித்தெண்டனிட்டு
கலியாணகாரியத்தை காதலுடன் நாங்கள்சொன்னோம்
அப்போதறிந்து ஆணிப்பொன்பூஷணமும்
செம்பணிபட்டுத் திரளாயவள்கொடுத்தாள்
அண்ணனவர்களையும் அனுப்பிவிடைகொடுத்தாள்
மூவருமாய்க்கூடி பூலைந்துவந்தோமிப்பொழுது
என்றுசொல்லக்கேட்டு எழுந்திருந்துதொந்திசெட்டி
வாங்களென்றுசொல்லி மாதாவரண்மனைக்கு
அழைத்துவந்துவிட்டு அம்மாளைத்தெண்டனிட்டு
மூவர்வந்தசேதியெல்லாம் முடிய அவனுரைத்தான்
கைகட்டிவீற்றிருந்தான் காவலர்கள்தங்களுடன்
மக்களைபார்த்துமப்போ மனமகிழ்ந்துவீரகெங்காள்
வாழ்த்தியெடுத்து மடிமேலேதானிருத்தி
உச்சியைமுகந்து வுண்மைசொல்லிமுத்தமிட்டு
தாதிகளைதானழைத்து சமையலதுபண்ணிவைத்து
மயிர்கோதியெண்ணையிட்டு வரிசையாய்மக்களுக்கு
தலைமுழுக்குப்பண்ணிவைத்து சாப்பாடுதானூட்டு
ஆடைக்காய்சுருள்கொடுத்து ஆபரணந்தானெடுத்து
பிள்ளைகள்தங்களுக்குப் பெரும்பணிகள்தான்பூட்டி
மக்களுக்கேற்றதொரு வரிசைபணிதான்பூட்டி
ஆபரணம்பூட்டி அழகாய்ப்பணிபூட்டி
அபிமன்னராசனுக்கு அதிகபணிபூட்டி
பட்டுபலபணியும் பாலனுக்குத்தானகொடுத்து
அரவான்கடோற்கஜனை யவள்மகனைத்தானழைத்து
சுந்தரிக்குமாலையிட சுகமாகநீங்களுமப்போய்
அறியாதபாலகனை அபிமன்னராசாவை
இரியோதிரனுடைய திரள்சேனையைகாட்டாதீர்
ஆனைபடைசேனைகள் அவன்கண்ணில்காட்டாதீர்
பாலனபிமன்னனும் படைமுகம்பார்த்தறியான்
தாகங்குடித்தறியான் சண்டைசெய்துதானறியான்
அபிமன்னராசாவை அப்பால்நிறுத்திவைத்து

துரியோதினன்சேனையெல்லாம் சென்றடித்தான்கெ
மாற்றன்பகையாளி மாபாவிசத்துருவின் [லித்து
ஆவல் - ஆனைகுதிரைகளை அவனியிலேமடியவைத்து
மாயன்மகள்சுந்தரியை மணஞ்செய்துவாருமென்று
பூரியைக்கிள்ளி பொருத்தவேகாப்புமிட்டு
வானபியன்தன்னையே மகன்கையிலொப்பிவைத்து
போய்வாருமென்று பிள்ளைகட்குவிடைகொடுத்தாள்
அங்கேவிடைபெற்று அலைகெங்கைதன்னோடே

நால்வரும் துவாரகாபுரிக்கு வருவது.

அப்போது நால்வருமாய் ஆயன்பதிநோக்கி
இரவுபகலாக இராசாக்கள்தானடந்து
காடுகடந்து கரியவனந்தான்கடந்து
காறுந்தோப்பும் நடந்துவழிகடந்து
இஞ்சிவனங்கடந்து எலுமிச்சையுட்புகுந்து
கொஞ்சிவனங்கடந்து கிழிவனம்புகுந்து

நால்வரும் ஔவையார் வீட்டில்வந்து இறங்கினது.

ஔவையார்தன்னிடத்தி லரசமக்கள்போய்புகுந்து
தாரூர்தனஞ்சயனார் தருமசத்திரமாம்
ஏராளமாக எத்தனைபேர்வந்தாலும்
நாழியரிசி சமைத்திடுவாள் நாயகியும்
அப்படிக்கொத்த ஔவையார்தன் மாளிகையில்
போனார்கள் நால்வருந்தான் புதுமையுள்ளராசாக்கள்
கண்டாளே ஔவையாரும் காரணமாய்வந்தவரை
வந்தவரைக்கண்டவளும் வாருங்களிருங்களென்றாள்
எந்தவூரெந்ததேசம் எனக்கறியக்கூறுமென்றாள்
அப்போது நால்வரும் அறியவுரைப்பார்கள்
காசிவளநாடு கலியாணம்பார்க்கவந்தோம்
பாட்டிகிழவியரே பழஞ்சோறுமுண்டோதான்
நல்லகிழவியரே நாணயக்காரியரே
பசிக்குதுஔவையாரே பாலமுதம்வேண்டுமென்றார்
பழஞ்சோறேன்பிள்ளைகளே பரமர்கிருபையினால்
நாலாயிரம்பொன்னீந்தால் நற்போஜனமிடுவேன்
இன்றொருவருமில்லாமல் எதிர்பார்த்து நிற்கும்போது
நீங்களும்வந்தீர்கள் நீலவர்ணன்புண்ணியத்தால்
சமைக்கவொருநாழிசெல்லும் தம்பியரேயென்றுரைத்தாள்
சுந்தரர்க்குப்பூமாலை தொடுத்துவைத்தபிற்பாடு

அப்போசமைத்திடுவே னென்றாளே ஔவையாரும்
அந்தவிசேஷமது கேட்டுப்பாலனுமே
சுந்தரிக்குப்பூமாலை தொடுத்துவருகிறேன்யான்
எங்களுக்குநீசமைத்து இடுங்காணும்பாட்டியாரே

ஔவையார் அபிமன்னனுக்கு புட்பம்கொடுப்பது.

அப்படியேநல்லதென்று ஔவையாருஞ்சம்மதித்து
மல்லிகைமுல்லை மருக்கொழுந்துசெண்பகமும்
நார்பெரியகுங்குமப்பூ சூரியகாந்திபூவும்
பாதிரிப்பூசெவ்வலரி பாரிஜாதபுட்பங்களும் [தாள்
எந்தெந்தப்புட்பமெல்லாம் எடுத்துவந்துதான்கொடுத்

அபிமன்னன் சுந்தரிக்கு மாலைதொடுப்பது.

பார்த்தானபிமன்னன் பாட்டிதந்தபூவையெல்லாம்
வகையாலொருசெண்டுகளும் மாலைகளுங்கட்டலுற்றான்
பொன்னிழைத்தநாராலே பூச்செண்டுகட்டலுற்றான்
ஐந்துநாலுவகை ஆனசெண்டுமாலைகளும்
நிகரிகென்றுதான்மின்ன நிதானமிட்டுகட்டினான்
மல்லிகைபூச்செண்டதிலே தான்வந்தவயணமெல்லாம்
சொல்லியொருசீட்டிலே சுருக்கமாய்தானெழுதி
கணையாழிமோதிரத்தைக் கழட்டியதற்குள்ளேவைத்து
பூமாலைதான்கட்டி பூப்பெட்டியுள்ளேவைத்து
ஔவையாரைத்தானழைத்து ஆச்சுதுமாலையென்றான்
பசிக்குதுபாட்டியரே பசியாறவேணுமென்றான்
அப்படியாகுதென்று ஔவையாரும்சம்மதித்தாள்
முழுகிக்குளித்து முகங்கழுவிப்பூசைபண்ணி [ளே
எழுந்திருங்களென்றுசொல்லி மனங்குளிரச்சொன்னா
ஆசனம்பொருந்துமென்று ஔவையாரழைக்கலுற்றாள்
சாணுக்குமூன்றடிதான் தள்ளாடித்தானடந்தாள்
அசட்டுக்கிழவியவள் அசனமெங்கேபோடுவாள்
மாற்றான்றுரியோதனன் வந்தாரோநாமறிவோம்
மாற்றான்பகையாளி மாபாவிமைந்தனவன்
தேசத்தழகன் துரியோதனன்பாவி
அண்ணா அவன்செய்தவினை அறியீரோ அண்ணாவே
நச்சுமுள்ளை தான்பரப்பி நடக்கும்வழிதனிலே
கொல்லத்துணிந்த குருடன்மகனும்
ஆயனருளாலே அன்றுபிழைத்துவந்தார்
பஞ்சவரைவரையும் பட்சமாய்த்தானழைத்து

அரக்குமாளிகையில் அவனடைத்துதீக்கொளுத்தி
மடிக்கத்திரிந்தானே மாபாவிசத்துரு அவன்
அன்றுபிழைத்தாரே ஆயன்திருவருளதால்
காளையபிமருடன் கடோற்கஜனே வளைப்பான்
நல்லநுதம்பியரே நாமுமேஔவையாரை
ஆக்கினைசாதம் அடைவானகாய்கறிகள்
கொண்டுவந்துவையுங்கள் கிழவியெனவுரைப்போர்
பாட்டிஒருஉண்டை தின்னென்றுகைகொடுப்போம்
மருந்தானால்தின்றால் மயங்குவாள்கூன்கிழவி
மற்றசோறுக்கால வாறிவிழுங்கிடுவாள்
தின்றதைபோனால் தெண்டால்நுறுங்கடிப்போம்
என்று-எண்ணியிருந்தார் நால்வருமாய்ஏகாந்தம்பேசி
ஔவையார்வாசலிலே அரசமக்களவந்துநின்று
பாட்டியவளைத்தானபார்த்து பரிந்துதனையுரைத்தார்

ஔவையார் நால்வரை இலைபறிக்கச்சொன்னது.

அப்போதுஔவையார் அரசமக்களைதான்பார்த்து
வாழையிலைபோட்டு மறிக்கெடுத்தாருமில்லை
இருநாற்றுக்காதவழி எல்லையுள்ளதுவெல்லாம்
சுரைமூற்றியெங்கும் ஓங்கிவளர்ந்ததுதான்
அரவானைப்பார்த்தந்த ஔவையார்சொல்லுவாள்
நாலுயிலைகிள்ளி நால்வரும்வாங்கவென்றாள்
சுருக்காகவேபோயே சுரைகிள்ளிவாருமென்றாள்

அரவான் சுரையிலையை வேரோடு பிடுங்குவது.

என்னகிழவியரு மெழுந்திருந்துநல்லரவான்
இருநாற்றுக்காதவழி படர்ந்தசுரையுள்ளதெல்லாம்
அப்போது அரவானும் மலைபோலேதான்பிடுங்கி
வேரோடேதான்பிடுங்கி வேந்தன்மலைபோல்சுருட்டி
வைத்துதலைமேலெடுத்து வாரானே நல்லரவான்
சுருட்டிவருந்தம்பிதனை துரைமன்னர்தான்பார்த்து
சீதைசிறையிருக்க ஸ்ரீராமர்படைகூட்டி
இலங்கைபுகுந்து இராவணன்படைவெல்லும்போது
மாற்றான்கையம்பாலே வானவர்கள்மடிந்தார்கள்
அப்போதனுமார் அவிழ்தத்தைக்கொண்டுவர
இமயமலையிலே இருக்குதென்றுசஞ்சீவி
சஞ்சீவிகொண்டுவர தாண்டியேபோம்பொழுது
மருந்துடையபேர்மறந்து மலையோடேபிடுங்கிவந்தார்

### கிழவி விசனப்படுவது.

அதைப்போலேசுரையை ஔவையார்முன்போட்டான்
கண்டாளேஔவையரும் கைநெரித்துகாலசைந்து
அண்டாதராட்சதனே அடியோடேஇச்சுரையை
மிண்டாய்பிடுங்கிவந்து போடியாய்ப்போடுவையோ
ஆகாயம்பூமியுள்ள அன்றுமுதலின்றளவும்
எப்போதுமிச்சுரைதா னொன்றுமிருந்ததுகாண்
தருமர்கையால்வைத்தசுரை சத்தியத்திற்கேற்றதுகாண்
என்று-கையைநெரித்தவ்வையார் கற்சுவரின்மேல்சார்
நின்றுபுலம்பி யிருந்தாளேஔவையாரும் [ந்து

### அபிமன்னன் சுரயிலை நடுவது.

ஔவையார்தானழுகிறது யபிமனுந்தான்கண்டு
நல்லரவான்பிடுங்கினதை நாட்டுவோமென்றுசொல்லி
பாதாளம்வரைபரிந்து பரும்வேரையுள்ளேவிட்டு
தருமனை தானினைத்துத் தள்ளிமண்ணை நிறைத்தான்
எப்போதும்போலே இளங்கொடியாகி
எங்கும்படர்ந்து யிருந்ததுகாணச்சுரையும்
கண்டாளேஔவையாரும் கைகொட்டிதான்சிரித்து
நகைத்தந்தஔவையாரும் நால்வர்க்குப்பந்தலைவைத்து

### ஔவையார் நால்வருக்கும் அன்னமிடுதல்.

சுரையிலைபூமியிலே துலக்கமுடன்போட்டு
இலையிலே நீர்தெளித்து எதுசெய்தாளவ்வையரும்
ஆயிரம்பொரிக்கறிகள் அறுசுவகையுள்ளதெல்லாம்
கொண்டுவந்துபோட்டாள் கூட்டிஇரட்டினர்கள்
பதருதேகடோற்கஜனே பாம்புவிஷமிதுகாண்
ஔவையார்க்குண்டை அள்ளியிட்டுப்பார்ப்போமென்
என்னவிதமானாலும் எனக்குசெறித்துவிடும் [றா
எங்களையர்மதவீமர் இளையாமல்நஞ்சையுண்டார்
எழுசாடிநஞ்சையுண்டார் எங்களையர்மதவீமர்
அன்றுவிஷஞ்செறிக்கலையோ ஆயனருளாலே
மேகத்துமின்னலது விந்தையதுபாரீரோ
அயமிருழன்போ லாடுவதுபாருமென்று
கையாலேநீட்டி கனவீமனென்தகப்பன்
என்றுசுரையிலையுஞ்சோறுஞ் சிருட்டிமிழுக்கலுற்றான்
பார்த்திருந்தமூவருந்தான் பசித்திருந்தாரந்நேரம்
மூவர்களும்பேசி முகம்பார்த்திருக்கலுற்றார்

பார்த்தானே நல்லரவான் பற்கடித்துகண்சிவந்து
கோடையிடி போலே கொக்கரித்துகண்சிவந்து
ஔவையாரே எங்களுக்கு ஆழமெங்கேஎன்றுரைத்தார்
ஔவையாருமங்கே அவர்நோக்கந்தான்கண்டு
குறுணிபிடிக்குமந்த கூடையிலேகொண்டுவந்து
வயிறு நிறையவுங்களுக்குவைத்திடுவேனுண்ணுமென்ன
அப்படியேபோடுமென்று னபிமன்னராசாவும்
போட்டாளே ஔவையாரும் பொரிக்கறியும்போசனமும்
உண்ணுங்களென்றுசொல்லி வுபசரித்தாள்பாட்டியரும்
அத்தனையுமுண்டு ஔவையாரைத்தான்பார்த்து
பாட்டிகிழவியரே பழஞ்சோறுமீந்திருந்தால்
கொண்டுவாபாட்டியரே குறையவரகளுள்ளதெல்லாம்
என்னகிழவியும் எங்கிக்கதிகடுத்து
ஆயிரம்பொரிக்கறிகள் அமுதுகளைதான்விழுங்கி
இன்னம்பழஞ்சோறு வுவர்கேட்டாலென்னசெய்வேன்
இருநூறுகாதவழி படர்ந்தசுரகொடி
ஒக்கவிழுங்கி ஒருவர்க்கும்போதாமல்
இன்னம்பசியா யிருக்குதென்றாலென்னசெய்வேன்
ஆரோஎவரோ அறியாமல்சோறுசொன்னேன்
வில்விழுடுக்குடைய் உனக்கெத்தனைசோர்வேணுமடா
எங்களண்ணனிடசோற்றிலேயும் அதற்கிரட்டிவேணுமடி
தொந்திபெரியதம்பி உனக்கெத்தனைசோர்வேணுமடா
எங்களண்ணனிடசோற்றிலேயும் அதற்கிரட்டிவேணு
கருக்காய்கரைபிங்கி எத்தனைசோறுவேணுமடா [மடி
எங்களண்ணனிடசோற்றிலேயுமதிகமாய்வேணுமென்றான்
பார்த்தாள்கிழவியும் பசங்கள்நம்மைக்கொல்வாரென்று
இவர்களுக்குசோறிட்டு நான்பிழைக்கமாட்டேனென்று
நம்மையுங்கொன்று விழுங்குவாரென்றுசொல்லி
நெருப்பெடுக்கப்போறவள்போல் நீண்டாள்பதினெக்கி
குத்திவழிநடந்து கொப்பெனவேஓடலுற்றாள்
போகாதேபாட்டியென்று பின்பிடித்தான்நல்லரவான்
எடுத்துவிழுங்கவந்தான் என்றேமிகப்பயந்து
ஆற்றருகேயோடிவந்து ஔவையுமேதுசொல்வாள்
பரமர்திருவடியி லிருக்குமந்தபார்வதியே
எங்கும்நிறைந்ததாயே என்பக்கலமாதாவே
மயேஸ்வரியே நீ மாயன் திருதங்கையே
மகாதேவர்திருச்சடையில் மங்கையே கங்கையே

அதிகாரம்பண்ணுற்போ லெல்லவரும்வாருராம்
முப்பதடிவாசலிலே முதிர்ந்தவெள்ளாட்டுபயிர்
அமர்த்தநிறுத்தி ஆவதுவது அக்ரோணி
அப்படிபதினெறு அச்ரோணிசேனையுடன்
ஆனைகுதிரையது அறுநூறு அக்ரோணி
இத்தனைசேனையுடன் எம்பெருமாள்தன்பதிக்கு
வாருன்திரியோதனும் மகுடமுடிவர்த்தனர்கூட
என்றுசொல்லகேட்டான்காண் என்னுடையபிள்ளைக
ஆனால்கேளென்றச்சி அடியேன்கள்சேவகத்தை [ளே
யானைத்திரளெல்லாம் அண்ணர்கடோற்கஜருக்கு
குதிரைத்திரளெல்லாங் குமாரனரவானுக்கு
சேனைத்திரளெல்லாஞ் செல்வன்தொந்திசெட்டியர்க்கு
மாப்பிள்ளை ராசனுமே வாளபிமன்வசங்காண்
அதுவோசிலபாரம் என்றீரேஎன்பாட்டி
மாயன்மகள்சுந்தரியாள் வார்த்தைதெரியவில்லை
வாளபிமன்தனக்கு வாழாளோயில்லையோ
ஆமல்லவென்றுசொல்லி அரிந்துவா ஆச்சியரே
தருமரைப்பற்றியொரு தனித்தாதுபோய்வருவீர்
என்னக்கிழவியரும் ஏங்கிமிகச்சிறித்து
ஏவல்காரியைப்போல் என்னையேபோகவிட்டால்
எப்படியாகிலு மிப்போதுஒருதாது
போய்வாருமென்றுபோற்றி யதெண்டனிட்டார்
அப்படியேயாகுதென்று ஆச்சியந்தஒளவையரும்
கந்தையுடுத்தி கையிலேகோலூன்றி
க்கத்தில்பூபொட்டி கழலாமல்தான்தூக்கி
போய்வாறேன்மக்களென்று புறப்பட்டாளவ்வையரும்
அப்போகடோற்கஜனும் ஒளவைமுகம்பார்த்து
நலமானசுந்தரிக்கு நாலுபேர்மாமியர்கள் [த்தார்
பொன்னுலேபூஷணங்கள் பொற்கொடிக்குதான்கொடு
நாங்களும்கொண்டுவந்தோம் நாயகிக்குப்பூஷணங்கள்
கொண்டுபோய்பூட்டுமென்றுகொற்றவர்தான்கொடுத்தார்
அப்போதுஒளவையரும் அரவானைபார்த்துரைப்பாள்
மாற்றுனுடமையென வாங்காளேசுந்தரியும்
என்றுசொல்லக்கேட்டு இயலபிமன்கூறுவான்
பள்ளியிலிருக்குமப்போ பாடங்கொடுப்பாள்காண்
அப்போகழட்டியிட்ட அப்பொன்திருவாழி
பூச்செண்டுதன்னிலே போகவேகட்டிவைத்தேன்

அந்த அடையாளம் ஆரணங்கே காட்டுமென்றான்
பூச்செண்டுக்குள்ளிருக்கும் பொன் திருவாழிதனை
ஔவையார்க்குகாட்டினான் ஆனந்தமாம்மார்பன்
நல்லதென்றுசொல்லி நகைத்தாளே ஔவையரும்
அப்பாலே நீங்களிந்த அடவிவிட்டுப்போகாதீர்
நாராயணர்பதிக்கு நான்போய்வருமளவும்
இங்கேயிருமென்று எழுந்திருந்தாளவ்வை நூய
சாணுக்குமூன்றடியாய் தள்ளாடிப்போய்நடந்தாள்
ஔவையார்நடக்கவே ஆறுபாதஞ்செல்லுமென்று
நாயகருஞ்சொல்லி நடந்துமிருக்கையிலே

ஔவையார் சுந்தரிக்கு ஓலைகொண்டுபோனது.

வாயிலடித்தாற்போல மாயர்பதிநோக்கி
ஓடினளவ்வையார் ஒருநொடியில்மாயர்பதி
அப்போதுமாயவனார் அலங்கரிப்பார்தன்பதியை
பவளத்தால்கால்நிறுத்தி பந்தலதுபோட்டுவிட்டார்
சப்பரங்கண்ணாடிவைப்பார் தலைவாழைகட்டிவைப்பார்
எட்டுதிசையிலேயும் இயல்பெண்கள் நின்றாட
கண்ணாடிகட்டி சவரியலங்கரித்து
மண்டபங்கள்தோறும் மகாதோரணங்கட்டி
எலுமிச்சைவெட்டிவேர் எத்திசையும்வீசிவிட
முத்தால்மணல்பரப்பி முழுவயிரக்கால்நாட்டி
தண்ணீர்தெளித்து சாம்பிராணிதூபமுடன்
ஐந்துதலைநாகத்தின்மே லமர்ந்திருந்தார்மாயவரும்
அப்போதுமாயவரு மங்கேவருவாரே
குத்திரும்பலாயிரும்பிக் கூன்கிழவி வந்தாளே
தடியைத்தரையில்வைத்து சற்றேயுட்கார்ந்தாளே
மூன்றுகாலைப்போட்டு முடக்கிப்படுத்தெழுந்து
மெல்லவருகிறதை மேகவர்ணர்தான்பார்த்து
அபிமரிடதாதர் ஔவையாரும்வாராளே
குலுங்கநகைநகைத்து கோவிந்தரோதுசொல்வார்
வாசலதுகாப்பாரை மாயவருந்தானெழுந்து
காசாவனத்திலே கடுமையானகானகத்தில்
கருமாரிடசத்திரத்தில் தாம்வாழுமவ்வையரும்
கோலமொழிசுந்தரிக்கு கொண்டைமுடிக்குதைக்கு
இப்போவருவாளின்னம் சற்றுநேரத்தில
அவளைதடுத்தவரை ஆக்கினைகள்பண்ணுமென்

அப்படியேயாகுதென்று ஆருந்தார்தெண்டனிட்டார்
அப்போதுஒளவையரும் அசந்துதடியூன்றி
சாணுக்குமூன்றடியாய் தள்ளாடித்தானடந்தாள்
அங்கிருக்குந்தாதுவர்கள் ஒளவையாரைதான்பார்த்து
எங்குநீவந்தாய் இனியகிழவியரே
காசான்வனத்திருந்து கரியமால்புத்திரிக்கு
கொண்டைமுடிக்கவே கொப்பெனவேதானுமிங்கே
ஆகையால்வந்தேன்காணுரியரேமென்றுரைத்தாள்
இடுப்பில்தடியேன் என்னயிதுமூட்டை
அவலோபலாவிரையோ அள்ளியிடுமெங்களுக்கு
வடைதோசைசர்க்கரையோ மற்றுமதிரசமோ
என்னவிதுதானே எங்களுக்குக்கொடுத்துவிடு
பின்னேநடவுமென்றார் பேற்றியவெல்லோரும்
என்னக்கிழவி இவர்களைத்தான்பார்த்து
அல்லகாணுரியரே ஆயாமகள்சுந்தரிக்கு [லவேணுன்
பின்னேயென்னகொண்டுவந்தேன் பெருமாளுடன்சொ
வாணுங்காண்மாதாவே வழிவிட்டோம்போமென்றார்
அப்போதுஒளவையாரு மாண்மனையில்போய்புகுந்து
ஓராம்படித்தளமாம் ஓலைப்பூமண்டபமாம்
இரண்டாம்படித்தளமாம் இரத்தினக்கால்மண்டபமாம்
மூன்றாம்படித்தளமாம் முத்துக்கால்மண்டபமாம்
நான்காம்படித்தளமாம் நவரத்னச்சாவடியாம்
ஐந்தாம்படித்தளமாம் பஞ்சரத்தினமண்டபமாம்
ஆறாம்படித்தளமாம் யானைகட்டுஞ்சாவடியாம்
ஏழாம்படித்தளமாம் எண்ணேக்கால்மண்டபமாம்
எட்டாம்படித்தளமாம் குதிரைகட்டுஞ்சாவடியாம்
ஒன்பதாம்படித்தளமாம் ஒட்டைகட்டுஞ்சாவடியாம்
பத்தாம்படித்தளமாம் வந்தாளேஒளவையரும்
வாங்களடி தாதியரே மாயர்மகளெங்கேயென்றாள்
ஏழாந்தளத்திலே இயலானபெண்களுடன்
அம்மானார்பந்துகளின் அபிமரிடபோலே
அத்தைமகன்போலே ஆடுகிறாள்பாருமென்றாள்
தாதிகள்சொல்லலுமே தரியாளேஒளவையரும்
மாயர்மகளாரும் அம்மானார்தானிருத்தி
பலகணிதானை திறந்து பார்த்தாள் திசைதோறும்
மைத்துனர்வாளபிமர் வாராரோவென்றுசொல்லி
பார்த்தாள் திசைதோறும் பங்கயசீர்கண்ணாளும்

பார்த்தவழிகளெல்லாம் வேற்றிவழியாச்சுதல்லோ
பார்த்தன்மகனையின்னம் பார்க்கவிதியில்லையோ
மூத்துமுலைதனங்கள் சொருகுதடாமைத்துனரே
மோகனசிங்காரம் அழியுதுவாளபிமா
சொல்லுமழிந்தேன் செலவழிந்தேன்மைத்துனரே
வில்விசையர்தன்மகனே வேந்தர்பெருமானே
சிங்கவெள்ளையானையுள்ள தேவேந்திரபேரு
உன்-மாதுபடுந்துயரம் மாற்றாயாமைத்துனரே
யானைக்கிடுக்கரும்பா யங்கங்குலைந்தேனே
வேழமுண்டவிளாவின் கனியானேன்மைத்துனரே
மத்துக்குள்ளகப்பட்ட தயிரானேன்மைத்துனரே
மாயர்மகளாரு மழுதுநெடுநேரம்
தன்னைவளர்த்தெடுத்த தாதிமடிமேலே
பொய்யுறக்கமாயிருந்து பொற்கொடியும்பள்ளிகொண்டு
சொற்பனங்கண்டுமே சுந்தரியுமப்பொழுது
தோகைநல்லசுந்தரியும் திடுக்கிட்டெழுந்திருந்து
கனவுகண்டெழுந்திருந்து தாதியர்க்குசொல்லவேதான்
என்னகனவுகண்டா யென்தாயேயென்றுசொல்ல
என்கொழுநர்மூவருமா வகால மருடன்
மாற்றானதுதண்டிமேல மகாராசர்போய்புகுந்து
மகுடமுடிவேந்தர்களை மண்மேலெறிந்தாப்போல்
உயர்ந்தபனைமேற்காகம் வுட்கார்ந்துகொண்டு
கழுத்துவளையாமல் காகமுதிரமுண்ண
காகமுதிரமுண்ண கண்டேன்காண்சொற்பனங்கள்
தேர்புரவிகாலாளுந் தெப்பமாய்தான்மிதக்க
மாண்டுமேயப்போது மன்னவர்கள்மிதக்க
கொல்லவந்தலக்குமணனை குடுமிவைத்துதலைசிரைத்து
அரசாணிக்காலுடனே அவனையேகட்டிவைத்து
சாணிதிரட்டிவந்து தலைமேலேவிளக்கேற்றி
இரட்டைமணைமேலே யியலானவபிமருடன்
ஒக்கவிருந்துகொண்டு ஓமங்கள்தான்வளர்த்தி
மங்கிலியங்கட்டி மகிழ்ந்திருக்கக்கண்டேனே
அபிமரைக்கைபிடித்து அரசாணிசுற்றிவந்தேன்
ஐயனார்தீர்வார்க்க அபிமனார்கைபிடிக்க
இப்படிகண்டேன்காண் என்தாயேயென்றுரைத்தான்
இப்படியாக யிருக்குமந்தவேளையிலே
அப்போதுஔவையாரு மாயன்மகளமுன்னேவந்து

ஆயிரம்பெண்களிலே எங்களபிமருடதேவியரோ [ம்
என்று ஔவையார்கேட்கலுமே எழுந்துவந்துசுந்தரியு
பூவாழைஎண்ணெய்தனை பொற்கொடியுங்கொண்டுவந்து
அபிமருக்கேயாக்குமென றரியற்கெண்ணெயிட்டாள்
எலுமிச்சங்காய்பிழிந்து இணையாள்பாதந்துலக்கி
சீக்காயுநெல்லி சிறுபருப்புகஸ்தூரி
பச்சிலைமஞ்சள் பனிநீரால்தானிமிறி
சாந்துகஸ்தூரி தடவிச்சிணுக்கறுத்து
மல்லிகைமுல்லை இருவாட்சிதான்சூட்டி
சப்பிரத்தின்மீதிலே தடமொக்கத்தான்பரப்பி
மெத்தைமடித்திட்டு மேலேயணைகோலி
பட்டைமடித்திட்டு பலபுட்பம்தான்பரப்பி
வெள்ளைகற்பூரம் வேணபெண்கள்நின்றெடுக்க
ஆழியபிமரென்று அணைத்துபள்ளிகொண்டானே
வேறேஅடையாளம் உண்டோதான்கிழவியரே
மற்றுமடையாளம் வாங்கிவைத்ததுண்டோதான்
மாயன்மருகனுடைய மனதறியவேணுமென்று
அடையாளம்நானறியேன் யாதையும்நான்காணேன்
பெருமாளபிமனாறே பூஷணங்கள்பூட்டுமென்றாள்
சுந்தரியுங்கோபமதாய்த் தோழியரைத்தான்பார்த்து
இந்தக்கிழவியரை இழுத்துத்துரத்துமென்றாள்
தாதியர்களோடிவந்து தாறுமாறாயிழுப்பாரும்
அனியாயக்கொள்ளையிது யாருமில்லையோவெனக்கு
வாறாய்நீசுந்தரியே மனதறியச்சொன்னேன்
பாலனபிமருடன் பள்ளியிலிருக்குமப்போ
பார்த்தன்மகன்கைதனிலே பாடங்கொடுப்பீராம்
அப்போதுனக்கந்த யாழியடையாளம்
இப்போதந்தமாலையிலே யிருக்குதடிசுந்தரியே [ல்லி
ஆழியென்றபோதேநீ எங்களத்தையம்மாவென்றுசொ
சுந்தரியுமோடித் தொழுதிறங்கிதெண்டனிட்டாள்
தெண்டனிட்டசுந்தரியைத் தீவிரமாயெடுத்தணைத்து

ஔவையார் சொல்வது.

மாலையில்தானிருக்கும் மணிவயிர ஆழிதனை
ஆழியைத்தானவிழ்த்து ஆயர்மகள்கைகொடுத்தாள்
இருகையிலும்மேந்தி யெடுத்தணைத்துகண்ணிலொத்தி

சுந்தரி சொல்வது.

வாடிநீதோழியரே மைத்துனருவந்தார்காண்

ஆழிவந்தபோதேயிப்போ யபிமருமேவந்தார்காண்
ஆழியைக்கையில்விட்டு யானைமனையி லுட்புகுந்து
மஞ்சநீர்சாலையிலே மாயர்மகள்போய்நுழைந்து
நான்தான்காணவல்லையம்மா நல்லபிமாதேவியென்றான்
தான்தான்காணென்றலுமே நகைசெய்தாளவ்வையாரும்

சுந்தரிக்கு ஒளவையார் பூமாலைக்கொடுப்பது.

மாலையென்சென்றேன்காண் மைத்துனரில்லாதே
என்கணவர்வாளபிமன் என்மனையில்வந்தாலே
கண்வடமுத்துவடம் கனபதக்கம்வந்ததம்மா
முல்லைமுகதாரி மோகனமாலைகளும்
கந்லதவிரித்தவ்வையார் கரியமால்புத்திரிக்கு
இந்தாருமென்று எடுத்துமுன்னேவைத்தாளே
அந்த-பூஷணத்தைத்தீண்டாமல் பொற்கொடியுமேது
கட்டிப்பிடித்து கனமார்புடன்சேர்த்து [ரைப்பாள்
தூங்கியெழுந்திருந்து சுந்தரியுமே துரைப்பாள்
தெண்டனிட்டசுந்தரியைசென்றவ்வையார்தானெடுத்து
வாராய்மருமகளே வாளபிமர்தேவியரே
தூதுவந்தவென்னை தோத்திரபண்ணுதே
அத்தையிடமைந்தனபிமாரிங்கேவந்தாரோ
அபியரிடவாழிதனி லாறினேனென்குறையை
அந்தையின்மைந்தரிப்போ அனைகுந்திக்குள்ளிருந்து
உந்தன்மடத்திலிருந்து உம்மைவரவிட்டாரோ
எங்கிருந்து தூதுவிட்டார் யெனக்கதைச்சொல்லுமென்
என்மண்டபத்திலிருந்து என்னைவரவிட்டாரென [ருள்
ஆறுலுமத்தையரே அபிமருக்குபடைத்துணையாய்
ஆர்துணையாகவந்தார் அத்தையேயெனக்குரைப்பாய்
உங்களத்தைகயலகன்னி அவள்மகன்கடோற்கஜனும்
நாககன்னிபெற்றெடுத்த நல்லரவான்வந்தான்காண்
வீரர்கெங்காள்பெற்றெடுத்த வேந்தனுந்தொந்திசெட்டி
மூத்தார்கள்மூவருடன் உன்புருடனபிமருடன்
வந்திருந்துவீட்டில் வரவிட்டாரென்னையிப்போ
என்மூத்தாமாரவந்தாலே முகூர்த்தமுடியுமென்றாள்
ஆயாமகளுடனே அவ்வையுமேதுரைப்பாள்
உன்மூத்தாருடனுரைக்க வார்த்தைவிசேடமென்ன
கொழுநர்மார்வந்தாலே கூடிமுகூர்த்தமென்றாள்

மூத்தார்கள்மூவருக்கு மூக்கால்வலம்வந்தேன் [லாமோ
கொண்டபெண்ணைவிட்டாலும் குறித்தபெண்ணைவிட
மாற்றானே கொள்ளவந்தால் பானங்கள் கொடுப்பாரோ
எந்தன்-கொழுநர்மார்தன்னுடனே என்விசனஞ்சொல்
[வாயோ
எந்தன்கொழுநர்மார்களை இப்போவரச்சொல்லியே
இலக்குணைற்குமாலையிட என்றதொருநாள்முதலாய்
பச்சிலைமஞ்சள் பழுக்கக்குளித்தரியேன்
பாரக்குழல்கோதி பந்தாய்முடித்தரியேன்
வெள்ளிலைகற்பூர மென்றறியேனத்தையரே
வண்ணானுக்கிட்ட துகில் வாங்கியுடுத்தரியேன்
எங்களத்தைமகனினைவா யனந்தலிலுங்கண்வளரேன்
எழுபனையோலையெல்லா மெழுதிவாவிட்டாலும்
என்விரகன்தீராது என்னுடையஅத்தையரே
நாளைவரச்சொல்லும் ராமர்மருமகனை
அகலவழைத்துபோய் அபிமற்குரையுமென்றாள்
அக்கினியில்வேகமாய் அனுப்புமம்மாமைத்துனரை
அன்னுகழட்டிவிட்ட அபிமருட ஆழியிதோ
ஆழியடையாளம் அபிமனிடகைகொடுப்பாய்
ஆயர்மகளாரும் அத்தைநீபோய்வாருமென்றாள்

சுந்தரி ஔவையாரை பயணப்படுத்தி யனுப்பினது.

ஔவைபயணமிட்டு அசைந்துவழிநடந்தாள்
கிழவிமடந்தேடி குந்திநடையாய்நடந்து
வாடியனந்தளர்ந்து வருவாளைப்போல்வருவாள்
ஔவையார்வருகுவதை அரசமக்கள்தெண்டனிட்டு
அரசர்கள் நால்வருமாய் நடந்துயெதிர்வருவார்
ஔவைக்கெதிராக அரசமக்கள்தெண்டனிட்டு
மாயர்மகள்சேதிகளை மாதாவேசெப்புமென்றார்
என்னவென்றுசொல்வேனு னென்னுடையபிள்ளைகளே
மாற்றானிலக்குணனும் மாயர்மகள்சுந்தரியை
மாயர்மகள்சுந்தரியை மணஞ்செய்துபோனானும்
என்சொல்லக்கேட்டு வங்கினானேவாளபிமன்
அண்ணன்கடோற்கஜனும் அபிமனைதான்பார்த்து
வாருய்தம்பியென்று மாயர்மகள்சுந்தரியை
பெண்ணுக்குயேங்கினால் பெருமாளுமேசுவர்காண்
கலங்காதேதம்பியென்று கடோற்ஜனுந்தானெழுந்து

மூன்றுமுழக்கச்சை மூன்றுசுத்தாய்தானிருக்கி
தெண்டெடுத்துதோளில்வைத்துமன்னைகடோற்கஜனு
பாவிதிரயோதிரனர் பட்டணமேபோய்புகுந்து [ம்
யானைகுதிரைகளை யத்தனையுஞ்சாகவடித்து
சுந்தரியாள்பாடிசென்று தூக்கிமுதுகிலகட்டி
கொண்டுவந்துகூட்டிக் குலமேகனென்றுசொல்லி
மற்றுமுள்ளராசாக்கள் மனைகளிலேபெண்தேடி
வாளபிமர்தம்பியரே மணஞ்செய்துவைக்கிரண்டா
என்றுசொல்லக்கேட்டு எழுந்திருந்துவாளபிமர்
அப்படியேசெய்யலாம் யண்ணேகடோற்கஜனே
ஔவைகிழவிமனம் அறிந்தவுடனுருதென்று
மாதாவே ஆச்சியரே மாயர்மகள்சுந்தரிதான்
மாற்றுனிலக்குணர்க்கு மாலையிட்டாளென்றீரே
மெய்யாவுரைத்தாளோ மேன்மையுள்ளமாதாவே
மாயர்மகளாரும் மணஞ்செய்ததுண்டானுல்
நாங்கள்கொடுத்தவொரு நற்பூஷணங்களெங்கே
தாவம்மாவென்றுசொல்லி அர்ச்சுனர்மகன்கேட்டலு
ஆச்சிகிழவியவள் ஔவையுமேதுரைப்பாள் [மே
மாலைக்குழலாளை மணஞ்செய்துபோகிறவர்
வழியிலேமறித்துயென்னை மகாபூஷணம்பறித்தார்
என்றுசொல்லக்கேட்டு எழுந்திருந்துநல்லரவான்
வாடாநீவாளபிமா மசக்கிருளவ்வையாரும்
தெத்தியவள்நம்முடனே திரிவாமுரைத்தாள
அவள்கந்தையுரிந்தாக்கால் கலகந்தெளியுமென்று
கத்தையையகழட்டி உரியவந்தான்நல்லரவான்
ஔவையுமப்பொழுது அரவான்முகம்பார்த்து
ஆழியெடுத்தவ்வையார் அபிமனுர்கைகொடுத்தாள்
வாங்கினனேவாளபிமன் வயிரமணியாழிதனை
அண்ணாரந்தமூவரையு மடிபணிந்தான்வாளபின்
திருவாழிதந்தாளே சுபத்திரைதன்மகனுக்கு
ஆழிவந்தபோதுனக்கு ஆச்சுதுமூகூர்த்தமென்றுன்
வாருங்களமக்களே மாற்றுன்திரியோதிரன்
மாயர்மகன்சுந்தரியை மணஞ்செய்தானென்று
உங்கள்நினைவறிய உரைத்தேன்காண்பிள்ளைகளே
மைத்துனர்வந்தாரென்று மாயர்மகளுக்குறைத்தேன்
கொழுநர்மார்வந்தாரென்று கொம்பனையுந்தான்மகிழ்ந்
எனகுமனமுருகி என்னென்னைஞ்சித்தியாச்சு [தாள்

ஔவையார் நால்வருக்குச் சொல்லுவது.

எந்தனிட கொழுநருக்கு இரட்டைசரணமென்றாள்
கொண்டபெண்ணைவிட்டாலுங் குறித்தபெண்ணைவிட
எனவேழுவரையும் என்கொழுநரபிமரையும் [லாமே
கடுகவரச்சொல்லுமென்றாள் கரியமால்புத்திரியும்
என்றந்த அபிமனிசையவே தானழைத்து
என்தேவிசுந்தரியாள் எனக்கென்ன சொன்னாள்காண்
மாற்றான்மணஞ்செய்ய வந்ததொருநாள்முதலாய்
பச்சிலைமஞ்சள் பழுக்கக்குளித்தறியேன்
பாரக்குழல்கோதி பந்தாய்முடித்தறியேன்
வண்ணானுக்கிட்ட துயில் வாங்கியுடுத்தறியேன்
வெள்ளிலைகற்பூரம் மெல்லவில்லைமெல்லியரும்
அபிமாஉன் நினைவாலே அசனம்பொசிக்கவில்லை
எழுபனையோலை யெழுதினலென துயரம்
ஆகாதுகாணுமிப்போ அவ்வையரேயென்றுரைத்தாள்
நம்பினேனுன்மகனை நாளையநுப்புமென்றாள்
என்மைத்துனனார்சொன்னதொரு வாசங்களென்றுசொ
நாளைமணம்போகவேணு மென்றாளே ஔவையரும்[ல்லி
அகமெழுகிக்கோலம் யாவின்பால்கொண்டுவந்து
சென்னலரிசிகொண்டு தென்கதிரோன்பொங்கலிட்டு
வாளபிமர்தனையழைத்து மணைமேலுட்காரவைத்து
மன்னவர்கள்மூவரையும் வரிசையுடனிருத்தி
வாளபிமர்தனக்கு மகாசீக்கைதான்கழித்தாள
வெள்ளிலைகற்பூரம் வேணதெல்லாந்தான் தந்தாள்
மக்களிந்தநாலவருக்கும் வரிசையா ஆசனமிட்டு
மணம்போய்வாருமென்று வாழ்த்தினாள்ளவையாரும்
ஆயுதங்கள்கைபிடித்து அரசர்மக்கள்வந்தார்கள்
திரியோதிரனுடைய சேனைகளெத்திசையும்
எச்சரிக்கையாயிருப்ப ரெல்லோருமென்றுசொல்லி
ஆயுதங்கள்தன்னையே ஔவையாரும்பாருமென்றாள்
எடுப்பாயோபாட்டியரே யெங்களுடைய ஆயுதத்தை
இந்தாருமென்று யெடுத்துவைத்தாராயுதத்தை
கந்தையில்தான்சுருட்டி க்கத்திலேயிடுக்கி
கடோற்கஜன்தண்டை அவ்வையார்கையில்தடியூன்றி
வீசிநடந்தாளே வேந்தர்கள்பார்த்திருக்க [ய்
வழியிலிதுவென்னவென்றால் மாதாவேயேதுசொல்வா

கடோற்கஜன்தென்னை அவ்வையார்கையிலேதடியென்
[பேன்
அவ்வையாருடவில்லெனக்குஔவைக்கோல்காணென்பேன்
கர்ணபிமர்கைவான் கண்ணுக்குப்புல்லருக்கு
புல்லருக்குப்வாளென்று பெருமையுடனுரைப்பேன்
வாருங்கள் தம்பியென்று மாதாவுமுன்னடந்தாள்
கூன்கிழவிதம்மை கொஞ்சமும்எண்ணாமல்
கூன்கிழவியாருமென்று குதுங்கவேதானகைத்தார்
ஔவையாருமுன்னடக்க அரசமக்கள்பின்னடக்க

ஔவையார் நால்வருக்குந் துவாரகை
யிருப்பைக் காட்டுவது.

மாயனிடபூங்காவிலே மன்னவரைக்கொண்டுசென்று
மாயன்பதிவீட்டை மன்னவற்குக்காட்டலுற்றாள்
செம்புமதில்களுஞ் சிங்காரதோப்புகளும்
சன்னற்கதவுகளும் கரும்புவிளாம்பிஞ்சுகளும்
உப்பரிகைமெத்தைகளும் மாமரந்தோப்புகளும்
தென்னமரச்சாலைகளும் தேக்குமரசோலைகளும்
புன்னைமரச்சாலைகளும் புளியமரச்சோலைகளும்
பாளைமணம்வீசும் பச்சைமயில்கூவும்
பச்சைத்துளசி பரிமளிக்குமெத்திசையும்
பாருங்கள்மக்களே பாரளந்தார் தன்பதியை
திரியோதிரனுடைய தண்டிறங்குமிவ்வனத்தில்
ஊருக்குத்தெற்கே ஒருமாமரக்குளமும்
உயர்ந்ததொருமாமரமும் ஒருநாழிவழிநிழலும்
அந்தவனத்தருகே ஔவையரும்வந்துநின்றாள் [டு
அரசமக்கள்நால்வருந்தா னரிவையாற்குத்தெண்டனிட்
ஔவையாரெடுத்தணைத்து அள்ளியேமுத்தமிட்டாள்
வாழ்த்தியந்த ஆயுதத்தை மக்கள்கையிலதான்கொடுத்தா
மக்களே நீங்கள மணம்புரித்துவாங்களென்றாள் [ள்
வாழ்த்தியேஔவையாரும்மனைநோக்கிப்போகலுற்றாள்
மாமரத்தின்கீழே மன்னவர்கள்வீற்றிருந்தார்
இப்படியாகவே யவரிருக்கும்வேளையிலே
கலியாணத்திற்குபோகிறவர் கணக்கிடவேபோகாது
அண்டத்துநட்சத்திரம் அளவிட்டுக்கூறலாம்
தேசத்தழகுமன்னன் திரியோதிரன்சேனை
பதினொன்படைத்தலைவர் படைமன்னரெலலோரும்

கர்ணன்விதுரன் காங்கேயதேசத்தாசன்
மன்னர்குருக்கள்மார் மகாசேனைவாராரே
அந்தவழியிடையர் அடிக்கிவந்தபாற்குடங்கள்
ஆயிரக்காவடியி லடங்கிவந்தபாற்குடத்தை

அரவான் இடையர்களை மிரட்டுவது.

அரவானெழுந்திருந்து அதட்டியிடையர்களை
இறக்கடாபாற்குடத்தை யென்றுகொடிபிடுங்கி
மாறியடித்தரவான் வழிமறித்து நிற்கலுற்றான்
அடிக்குபொறுக்காமல் அதிர்ந்துகுழம்பிநின்றார்
பாற்குடத்திலுள்ளே பயந்திருந்தநால்வருமாய்
வாய்சோறுகையேந்தி மன்னர்குடித்தபின்பு
பால்குடித்ததுபோதாமல் பறித்தார்களுள்ளதெல்லாம்
குட்டிதெப்பைகோடாலி கோலேப்பணகயிறு
உப்புசட்டிவாய்க்கரிசி உடுத்தகம்பிளியுடனே
பிச்சைநெருப்பும் பிதிர்ந்ததொருநற்சிலையும்
கட்டும்அரணும் கையில்முழக்கயிறும்
மாயயிடையர்கையில் வகையாகத்தான்பிடிங்கி [றார்
அடித்துத்துறத்தியுடன் ஆண்டவற்குச்சொல்லுமென்
ஓடியுரையுமென்றார் ஓட்டித்துரத்திவிட்டார்
பாலேப்பறிகொடுத்து பறிந்துயிடையரெல்லாம்
தலைமேலேகையைவைத்து தாணியளந்தோன்பதிக்கு
ஆபயமபயமென்று அலறியேஓடலுற்றார்
கெருடனும்வந்துநின்று கிருஷ்ணனைத்தெண்டனிட்டு
பஞ்சவர்கள்பிள்ளைகள் பசங்களிங்கேவந்தார்கள்
எங்கேயிருக்கிறார்கள் இப்போதுஅறியவென்று
கெருடனுமப்பொழுது கானகத்தில்தானெழும்பி
கோயில்குளங்கள் குனறுகள்தான்தேடி
பூங்காவனம்தேடி புதியதோர்மாப்பிள்ளையை
ஒருமாமரத்தருகே ஓடிவந்தார்கெருடருமே
மன்னவர்கள்நால்வருமே மாமரத்தைப்பார்க்கலுற்றார்
கெருடனுமப்பொழுது கிளைமேலேஉட்கார்ந்தார்
தர்மரிடபிள்ளைகளே தப்பாதுஎன்றுசொன்னேன்
மாயவற்குப்போயுரைத்து வருகுமோமென்றுசொல்லி
ஆயனெழுந்திருந்து அரண்மனையினுட்புகுந்து
பசங்களிந்தநால்வருக்கும் பாங்காயமுதளுப்ப
வாழைப்பழமும் வகையாய்பலாச்சுளையும்

மாம்பழமும்பாலும் மலியதயிர்சர்க்கரையும்
கொம்பிலசிறுதேனும் கோதுபடாசர்க்கரையும்
வெற்றிலைபாக்கும் மிகுந்தபூசந்தனமும்
ஆயிரங்காவடியி லடுக்கியனுப்பலுற்றார்
வந்தவொருகாவடியை மாமரத்தின்கீழிறக்கி

நால்வருக்கும் அன்னமிடுவது.

மாயன்மருகனுக்கும் மற்றபேர்மூவருக்கும்
மாம்பழந்தேனும் வாரியிற்சர்க்கரையும்
தேனுடனேபாலுந் தெவிட்டாதமுப்பழமும்
வாரியமுது படைத்தார்கள் மன்னவருக்கு
அமுதுண்டுநால்வருமாய் ஆயாசந்தீர்ந்தபின்பு
பூமுடித்துசந்தனங்கள் பூசினார்மார் நிறம்ப
வெற்றிலைகற்பூரம் வேண்டும்படி யிமிர்ந்து
மன்னன்மனதறிந்து மரத்தின்கீழ்வீற்றிருந்தார்

அஸ்தினபுரி வேடிக்கைகள்.

இனி- அஸ்தினபுரத்து அடைவுதனை நீர்கேளும்
அப்போது திரியோதிரன் அஸ்தினபுரிதனிலே
கலியாணபந்தலின் காட்சிப்பெருமைகளும்
பவழத்தால்கால் நிறுத்தி பச்சைவடிப்புசெய்து
இட்டதொருபந்தல் எலுமிச்சம்வேர்பரப்பி
வாழைக்கமுகுநாட்டி கவரியலங்கரித்து
எட்டுத்திசையு மியலானசப்பிரத்தேர்
சப்பிரத்தேர்களெங்குந் தனியாகதானிருத்தி
தானுக்குதானொருபெண் சோபனங்கள்பாடி நிற்க
வீதியிருபக்கலிலும் வேதியர்கள் நின்றுபாட
பூவாலேதோரணங்கள் போடுவித்துஎத்திசையும்
பந்தலுக்குப்பந்தல் பரிவட்டம்கட்டிவைத்து
பந்தல்திசைகோறும் பட்டாலலங்கரித்து

பந்தல்வேடிக்கைகளை பாரமுடிவேந்தர் பார்க்கிறது.

பந்தல்பெருக்கத்தை பார்த்தான் திரியோதிரன்
பவுஞ்சித்திரள்காலாளும் பார்க்கவேதானெழுந்தார்
அர்ச்சுனபுரியேரி ஆற்றில்வடக்காக
கூடாரம்போடுமென்று கொற்றவனும்வந்து நின்று
கருணனைத்தானழைத்து கணக்கிடும்யானைகளை
நம்மானைக்கூட்டத்தில் ரணம்செய்யுமானைகளின்
எத்தனையானைக் கடகமிருக்குதென்றான்

கணக்கரைத்தானழைத்து கணக்கிடுவான்யானைகளை
ஆனைக்கணக்கெழுது மையாயிரங்கணக்கர்
ஓடிவந்த அக்கணக்கர் ஒட்டமிட்டாரானைகளை
பதிறையிரங்கோடி பந்திக்கடகத்தேர்காண்
பரிசாரிந்தி பவுஞ்சிகட்டவேந்தன்காண்
யானைபணியுள்ளதெல்லா மழைத்துவுபசரித்து [ள்
குதிரைபணியுள்ளதெல்லாங் கொண்டுவந்துவிட்டார்க
ஆசாரியர்கள் தம்மை யழைத்துவரச்சொல்லுமென்றான்
தேரை நடத்துமென்றான் தென்னன் திரியோதிரனும்
சிங்கம்புலியானை தேரிலலங்கரித்து
அழகுசுருணிவைத்து அதற்குமேலேதானேறி
தேருக்கலங்காரி தேசத்தரசனையனுப்பி

துரியோதிரன் ராஜாக்களெல்லோரையும்
அழைக்கச் சொல்லுகிறது.

பரிசைபணிகாரருக்கு பார்த்துவிடைகொடுத்து
வில்லாளிக்காரரைபெல்லாம் விதம்விதமாய்தானழைத்
வில்லணிக்குகர்த்தனும் விதுரனைத்தானழைத்து [து
ஈட்டிமன்னாகாலாளும் இருநூறுகோடிலட்சம்
பாணவகைக்காலாளும் பந்திபந்தியாயனுப்பி
சேரனுஞ்சோழனுந் தேசமன்னர்பாண்டியரும்
சோழியர்சோனகருஞ் சொல்லரியமன்னவரும்
இறமன்னர்காலாளர் சேர்ந்தபரிசனங்கள்
லாடர்கவுண்டர் ராவுத்தர்கிங்கிலியர்
கொங்கணாகன்னடியர் குச்சிலியர்மராட்டியர்கள்
குறவர்மலைநாடர் குருநாடர்வேடர்களும்
அன்பத்தாறுதேசம் அரசமன்னர்சேனையெல்லாம்
சேனையுள்ளதெல்லாம் தேர்மன்னன்தானனுப்பி
கணக்கரைத்தானழைத்து கடுக்கச்சீட்டெழுதுமென்றான்
தேசத்தழகன் துரியோதினப்பெருமான்

திரியோதிரன் சொற்படி கணக்கர்கள்
ஓலை யெழுதுகிறது.

தன்மைத்தனிலக்குணன் மணம்போறானென்றுசொல்லி
மலைநாட்டிலெல்லோரும் வரிசையனுப்பினதும்
வாழைப்பழந்தேங்காய் மாங்காய்பலாக்கனியும்
கத்தரிக்காயுங் கரியவெள்ள க்காயும்
பாலுந்தயிர்குடமும் பந்திபலாப்பழமும்

பதினாயிரக்கலம் பாளைசம்பா அரிசியுந்தான்
மூவாயிரக்கலம் மூளைப்பயிறுந்தேங்காயும்
பந்தலுக்கெண்ணை பதினாயிரக்கலமும்
நெய்சித்தை ஆயிரம் திண்ணையமாய்க்கான்பிடித்து
இந்தபடியாக இராச்சியத்திலுள்ளவர்கள்
பட்டணங்களிலுள்ளவர்கள் பலவரிசைகொண்டுவர
திரியோதிரன் மல்லர்கையில் ஓலைகொடுப்பது
தேசங்களுள்ளதெல்லாஞ் சீட்டெழுதிப்போகவிட்டு
கலியாணமுநாளையென்று கிட்ட அழைப்புவதும்
அழைப்பாமலேயிருந்தால் அந்தத்தராச்சியத்தில்
வைத்தஅதிகார மாற்றிவைப்போமென்றுசொல்லி
என்றுசொல்லக்கேட்டு இனியதொருராசாவும்
துரோணர்முகம்நோக்கி திரியோதிரனுரைப்பான்
வைக்கொருலட்சம்பொன் வாங்கிவேன்தப்பாது
என்றுசொல்லிசீட்டெழுதி பழயிரந்தூதர்களை
அப்போதனுடவிட்டு அவ திரியோதிரனும்
மாளிகையில்போய்புகுந்து மைந்தன்லக்குணற்கு
அப்போதுலக்குணற்கு ஆனமணப்பொங்கலிட்டு
திருஷ்டிசுத்திபண்ணுமென்று சிரித்துமகிழ்ந்தாரா
அப்போதுதாதியர்கள் அசனஞ்சமைத்தோமென்றார்
சொன்னதுகேட்டு திரியோதிரன்சொல்வானே
பாரமுடிமன்னர்களை பந்திக்கெழுந்திரென்றான்
படைமன்னர்க்கெல்லாம் பந்தியமர்த்தினார்கள்
ஆனகறிசோறும் அன்பானபாயாசமும்
பொரித்தபொற்கறியும் பொன்போலசிறுபருப்பும்
புத்துருக்குநெய்வார்த்து போகசெய்வுண்ணுமென்றான்
உண்டெழுந்தபிற்பாடு வடைப்பைகள்கொண்டுவந்து
கருணர்முகம்நோக்கி அடைப்பைகள்வையுமென்றான்
பாரமுடிவேந்தன் பந்தலிலேவந்திருந்து
தேசத்துமன்னரைச் சேரவரவழைத்து
முடிமன்னரெல்லோரும் மொய்யெழுதுமென்றுரைத்தார்

### இராசாக்கள் மொய்யெழுதுவது.

பாரமுடிமன்னவர்கள் பதக்கங்கள்மொய்யிடுவார்
கோலமன்னரெல்லோரும் கொலுசுகள்மொய்யிடுவார்
மாலைகள்மொய்யிடுவார் ராசமுடிமன்னவர்கள்
குதிரைகள்மொய்யிடுவார் கோடிபோர்முடிமன்னர்

பட்டுப்பட்டாவளியும் பங்கானசேலைகளும்
ஏழாயிரம்பொன்பெற்ற இந்திரவர்ண சேலைகள்
முத்துபதக்கங்களும் மோகனமாலைகளும்
வச்சிரபதக்கங்களும் வைடூரியமாலைகளும்
பட்டுசுருட்டியுந்தான் பருமுத்துநல்ல தாவடமும்
கோடிமுடிமன்னர் கொண்டுவந்துமொய்யிடுவார்
மூவாயிரக்கலம் மொய்யிட்டபொன்னளந்தார் [கள்
மொய்யிட்டுபொன்னையெல்லாம் முன்னிட்டுப்பார்த்தார்
பூஷணங்கள்மொய்யாவும் பொன்னாயிரக்கலமாம்
சேனைகள்மொய்யாவுஞ் சேனை நூறாயிரமாம்
ஆனைகள்மொய்யாவும் ஆயிரங்கோடிலட்சம்
குதிரைகள்மொய்யாவும் கோடிலட்சம்பேரணியும்
உக்கிராணகணக்கர் கையில்கொடுமென்றுரைத்தார்
எழுநூறொட்டகப்பொன் யெடுமென்றான்ராமர்பதி
ஆயிரம்பெட்டிகளி லழுத்தினார்பூஷணங்கள்
ஐயாயிரம்பெட்டிகளி லானபட்டாடையுந்தான்
மாவுங்கழுநூறும் மஞ்சளுடன்நெல்விரையும்
குலைபாக்குவெற்றிலையுங் கெந்தப்பழத்துடனே
ஆயிரங்கோணியிலே அமர்ந்ததுவர்பாக்குப்
மாலையுஞ்சந்தனமும் மங்கிலியநெய்க்குடமும்
வெற்றிலைதட்டுகளும் விருதானதண்டையுடன்
மங்கிலியமாலைகளும் மங்கையர்கொண்டுவந்து
மேளவகையாவும் விதவிதமாய்த்தான்முழங்க
வெற்றியிலக்குணரும் வேந்தரும்தேரேறி
மாயன்பதிநோக்கி போகவேதானெழுந்தார்

### கர்ணனை திரியோதிரன் அஸ்தினாபுரத்திலே நிறுத்துவது.

கர்ண மகாராசன் கடுகியேயோடிவந்து
திரியோதிரனுடைய செவிதனிலேஎதுவைப்பான்
மணக்கோலம்போனால் மாயன்கபடுசெய்வான்
இந்தபெண்போனால் இனியபெண்கிடைக்காதோ
ஆளப்பிறந்த அபிமர்பெருமானுக்கு
அர்ச்சுனாபுரியை அமர்ந்துபட்டங்கட்டுமென்றான்
மெய்தான்கருணா விளம்பினாயிப்பொழுது
யானை நிறுத்திவைப்போம் அஸ்தினாபுரிதனிலே
கர்ணரே நீரிருந்தால் காரியமாகுமென்றான்

இதுவே நமக்கமையும் என்றுசந்தோஷத்துடன்
பட்டணத்தில்வந்திருந்தான் பாரமுடிகர்னனப்போ

துரியோதிரன் துவாரகைக்கு வருவது.

கர்னனோத்தான துப்பிக் காவலனும்போய்நடந்தான்
மன்னன்திரியோதிரனும் துரோணர்முகம்பார்த்து
வழிநிமித்தம்பாருமையா வள்ளல்மணம்போக
சொல்லசபையினிலே துரோணர்முகம்பார்த்து
வழிநிமித்தம்பார்த்து மன்னன்துரோணசாரியுஞ்
சாரைகுறுக்கிடுமாஞ் சிரசின்மேல்பல்லிசொல்லும்
கூளிகுறுக்கிடும் கூகைநரிவூளையிடும்
குந்திபிடித்தாப்போல் கோட்டானுமோலமிடும்
பச்சைமரத்தேறி பசித்திருந்தகாகமது
பட்டமரத்தோடு பலபலென்றுகூவிடுமாம்
வடக்கேயிருந்தவொரு வடகாகமோடிவந்து
கிழக்கேநின்றுகொண்டு கூவிடுமப்பொழுது
இந்தநிமித்தமெல்லாம் இனியகுருக்களறிந்து
சொல்லாதிருந்தாக்கால் தோஷங்கள்வந்துவிடும்
திரியோதிரன்செவியில் துரோணருங்கூறுவார்
கண்டநிமித்தமெல்லாம் காவலர்களுக்காகாது
பார்த்தநிமித்தமெல்லாம் பார்மன்னர்க்காகாது
என்றுசொல்லக்கேட்டு இனியதொருராசாவும்
துரோணர்முகம்நோக்கி திரியோதிரனுரைப்பான்
எள்ளுபோட்டயெள்ளுவிழா என்சேனைபோகையிலே
நிமித்தங்கள்குற்றமென்று நீர்உரைத்தீரையாவே
ஆகாசகுணமதை யறிந்துவருவேனென்று
தம்பிமார்தன்னுடனே தார்வேந்தர்போய்நடந்தார்
மைத்துனமார்தன்னுடனே மாயன்பதிபோக
செந்தாள்பறந்திடவே திரியோதிரனுமப்போ
பாரமுடிமன்னவர்களைப் பவுஞ்சுடனே நடவுமென்றான்

ஆறடைத்துக் கொள்வது.

திரியோதிரனவரவை திருமால்மிகவறிந்து
சித்தம்நாம்வாருமென்று சொன்னொருவார்த்தை
சேனைபெருக்குடன் திரளோடேவாறான்காண்
மன்னவர்க்கெதிராக வழிமறிக்கவேணுமென்று
வற்றிக்கிடந்த வறுபுனல்ஆறுதன்னை
மெத்தப்பெருகவென்றார் வேதநாராயணரும்

கரையைவிட்டுநாற்காதங் கடுகிப்பெருகிவரும்
நிறைந்துவருமாறுதன்னை திரியோதிரன்பார்த்து
துரோணரிட நிமித்த மதிக்காரே ஆறுதன்னில்
கூடாரம்போட்டு குதிரையை நிறுத்துமென்றான்
ஆறுவடியவே ஐந்தாறுநாட்செல்லும்
மாயவரும்கோபிப்பார் மணமுகூர்த்தம்போச்சுதென்று

திரியோதிரன் ஆற்றில் நடந்து கரையேறுவது.

இங்கிருக்கவொண்ணாது என்றேயெழுந்திருந்து
ஆர்கடக்கவேணுமென்றான் அரவக்கொடியோனும்
யானைபணியுள்ளதெல்லாம் ஆற்றில் நிரையுமென்றான்
தோணியுள்ளதெல்லாந் திரவாற்றில் நிறுத்துமென்றான
குதிரைப்பணியெல்லாங் குறையாற்றில் நிறுத்துமென
ஆற்றிலேதானிருத்தி அக்கரையேறுமென்றான் [றான்
யானைகுடித்ததுவு மக்கரைபட்டதும்
தேற்காலில்பட்டு சுவறினநீரதுவுங்
குதிரைகுடித்ததுவுங் குலமன்னர் நீந்தினதும்
காலாள்குடித்ததுவுங் காலொருமேதேறினதும்
மற்றுநீரெல்லாம் மண்ணில்சுவறினதால்
தூளாய்ப்பறந்துமணல் சூரியனைப்போய்மறைக்க

திரியோதிரன் துவாரகைக்கு வந்துவிட்டது.

ஆறுவடிந்தது அரசர்கரையேறி
சேனைத்திரள்ராசாக்கள் தெருவீதிதான்சேர்ந்து
கடையுங்கடைத்தெருவுங் கன்னருகேகூடமும்
அரிசிக்கடைபலபய றுளகச்சாயமுடன்
கஞ்சாவுமெள்பொரியுங் கலந்தபொரியவலும்
தேங்காய்ப்பலாக்கனியுஞ் சீனிவிளாங்கனியும்
வெற்றிலைப்பாக்குகளும் விற்பாற்கடையோடே
தென்னன்திரியோதிரனுந் தேர்ந்தயிலக்குனனும்
தம்பிமார்நூற்றுவருந் தக்கதுரைகளுடன்
ஆற்றுமணல்கூடவே அரையர்கள்தேரேற
மாயர்பதிநோக்கி மன்னர்முகம்நோக்கிச்
செந்தூள்பறக்கந் தீவிரமாய்த்தானடந்தார்
செந்தூளுங்கருந்தூளுஞ் சூரியனைப்போய்மறைக்க

சுந்தரி தோழிகளுக்கு சொல்லுவது.

அப்போதுவாரகையில் ஆயனரண்மனையில்
மாயன்மகளார் மருதவல்லிசுந்தரியாள்

வழாத்தனமேறி இயலாளசுந்தரியாள்
பலகணித்தான் திறந்து பார்த்தாள் திசைதோறும்
திரியோதிரனுடைய சேனைவாவுகளை
பார்த்திருகண்ணாலும் பாங்கியுடனுரைப்பாள்
வாருய் நீசெங்கமலம் மாற்றான்பெருக்கமிதோ
எத்தனைசேனையுடனென்னுயிரைக்கொல்லவந்தான்
குறையில்லாச்சேனைகளை என்கொழுநர்படைவெல்லு
காலம்முடிந்ததடி தகப்பனிடதீங்கல்லவோ [போ
பெண்ணாய்ப்பிறந்தகொள்ளை போதுமடிதாதியரே
இருக்கமுடியாதோடி இராமனிட்ட தீயெனக்கு
என்றுசொல்லிதோழியரை இளங்கொடியுந்தானழைத்
ஆறுமறியாமல் அக்கினியைவளர்த்துமென்றாள் [து
சட்டையரசசட்டை தையுமென்றாள் தார்குழலும்
புற்றும்புதுமூரும் பொற்கொடியுந்தாருமென்றாள்
சற்றேகடிக்கவிழு சாற்றுமென்றாள் தார்குழலும்
சேஷையரிசி திருமுடியின்மீதில்வைத்து
மாயன்மகளாரும் மாலையுமணிந்திருந்தாள்

## அரவான்முதல் நால்வருந் திரியோதிரன் படையை அசட்டைசெய்வது.

அப்போதரவானும் பீமன்கடோற்கஜனும்
கொந்திசெட்டிதன்னுடனே துரைமன்னர் நால்வருந்
மாமமாதிலின்மீதேறி மாற்றான்படைபார்த்தார் [தான்
திரியோதிரனுடைய சேனைபெருக்கமெல்லாம்
பார்த்தான்திசைதோறும் படைமன்னர்தன்னடையெல்
மாமாத்திலேறினதை மாயரும்பார்த்தாக்கால் [லாம்
பஞ்சவர்கள்புத்திரர்கள் பயந்துமாமேறினார்கள்
என்றுசொல்லியேசுவார் இழிவாமென்றுசொல்லி
அப்போது பீமன்னனும் அண்ணர்முகம்பார்த்து
தருமராப்பாதன்றனக்குத் தாயாதிநாற்றுவர்க்கும்
பாதிநகரம் பகுந்தரசாளாமல்
வனவாசம்போனதென்ன மாற்றானரசாள்வதென்ன
என்றுசொல்லக்கேட்டு எழுந்தான்கடோற்கஜனும்
அப்படிவந்ததுவும் ஐவர்செய்த தீங்கல்லவோ
திரியோதிரனுஞ் சீமைகளத்தனையும்
நம்மதேயாகுவோம் ராசாக்களைச்செயித்து [ப்பார்
என்று அரவான்கடோற்கஜனும் பீமன்னனும்தானுரை

அண்ணன்முகம்நோக்கி அரிமனும்தானுரைத்தார்
திரியோதிரன்கூடாரம் திரளானசேனைகளை
வாவென்றுசொல்லுவார்கள் மகுடமுடிமன்னவர்கள்
என்றிவர்பேசி யிருந்தார்கள் நால்வருமாய்
அங்கேதிரியோதிரனு மரசரைத்தானழைத்து

திரியோதிரன் கூடாரம் போடச்சொன்னது.

கூடாரம்போடுமென்றான் குலமன்னராசர்களை
துவாரகாபுரிக்கருகில் தூரவெளிதனிலே
கூடாரம்போடலுற்றார் கொற்றவர்களமன்னவர்கள்
வேந்தருக்கும்வேதியர்க்கும் வேறேயொருபுறமும்
கடையுங்கடைத்தெருவும் காவலர்கள்வீதிகளும்
நட்டுவனார்கட்டுவனார் நாடோரொருபுறமும்
வீதிக்குவீதி பிலந்தந்தவேந்தருடன்
மன்னவர்கள்தன்னுடனே மகுடமுடியோரும்
வேடிக்கைபார்த்திருந்தார் இனிபவளமாயனும்

அரவான் ஆலமரம்விட்டுக் கீழிறங்கியது.

அப்போதரவானும் ஆலமரமிறங்கி
அரவானுமப்போ ஆற்றிலேபோய்முழுகி
பாற்குடங்களத்தனையும் பாரித்துநீர்பரப்பி
குடமேற்குடம்நிறுத்தி கோபுரம்போலடக்கி
ஆற்றிலேமுழுகிவந்து ஆதித்தனைகோத்தரித்து
கொங்காணிமேல்போட்டு கோணச்சிலைகட்டி
கழிகோலணைகயிறும் கையில்குடுவையுடன்
பட்டைபட்டையாக பன்னிரண்டுநாமமுடன்
இட்டதிருநாம மெத்திசையுஞ்சோதிவிட
ஏற்றியந்தபாற்குடத்தை ஏற்றிதலையில்வைத்து

அரவான் அண்ணாண்டை வருவது.

அண்ணனிருக்குமந்த ஆலமரத்தருகே
வீசிநடந்தரவான் முடுக்காகவோடிவந்து
அண்ணருக்குதெண்டனிட் டகலவேபோயிருந்தான்
ஏண்டாயிடையா எனக்குவந்துதெண்டனிட்டாய்
என்றுகடோற்கஜன் இடையனைக்கேட்கலுமே
அல்லகாணண்ணாவே அரவானனென்றுரைத்தான்
என்கானுந்தம்பியரே இவ்வேடங்கொண்டதென்ன

உன்னையடையாளம் ஒருவரும்பிடித்ததியார்
எதுக்காய்தம்பியரே இவ்வேடங்கொண்டதென்ன
அண்ணன்முகம்நோக்கி அரவானுமேதுரைப்பான்
மட்டுபடாசேனையெல்லாம் வந்துகரையேறி

அண்ணனிடம் விடைபெற்றுக்கொண்டு
துவாரகைக்கு வருதல்.

திரியோதிரனுடைய சேனைத்திரளுள்ளதெல்லாம்
குத்தும்படையிதுவோ கூலிப்படைதானோ
பார்த்துவருகிறேன் பவுஞ்சிட்டமன்னவரை
கண்டு அரவானும் கண்ணுறுகழட்டிவிட்டு
குங்குமத்திண்டோளன் குலுங்கமிகநகைத்து
போய்வாருந்தம்பியென்று போற்றிவிடைகொடுத்தான்
அப்போதரவானும் ஆயன்வடிவுகண்டு
தண்டுநிலேபோய் தார்வேந்தனைப்பார்த்து
மன்னனை திரியோதிரனும் தேசத்துராசன்மைத்துனனும்
தம்பிமார்நூற்றுவரும் தனயன் இலக்குணனும்
கூத்துகள்பார்த்திருந்தார் குலமன்னரெல்லோரும்

அரவான் கூடாரத்தருகில்வந்து அரசர்களை
மிரட்டுவது.

அந்தபெருக்கத்தி லரவானும்வந்துநின்று
பார்த்தானேபாலகனும் பங்கயஞ்சீர்கண்ணாலே
உற்றுப்பார்த்தான் ஒளிபறந்தகண்ணாலே
யானைக்குதிரைகளும் அரசமக்கள்வீற்றிருக்க
ஆடுமாடாக அரவான்மனதிலெண்ணி
கண்டானரவான் கனக்கவேகோபமெய்தி
கூலிபடையிதுவோ குத்தும்படைதானோ
பார்ப்போமென்றுசொல்லி பார்த்தன்மகனும்
கையில்தடியிடுப்பில் கட்டழகன்தானூன்றி
ஒருகால்முடக்கி உயர்ந்தமுழங்காலில்வைத்து
கோட்டையிடிந்து குமுறிவதுபோலாக
டேயோடேயோவென்று தீரமாய்க்கூச்சலிட்டான்

அரசர்களெல்லோரும் அரவானிட்ட
கூச்சலைக்கண்டு ஓடுகிறது.

அரவானிட்டசத்தங்கேட்டு அரியபரிவாரமெல்லாம்
யானைகள்திம்பருந்து அரசர்பேலோடுவதும்

குதிரைகள் தும்பருந்து குலமன்னர்மேலோடுவதும்
வில்பிடித்தமன்னரெல்லாம் வீதிவிட்டோடலுற்றார்
ஈட்டிபிடித்தமன்னர் எறிந்துவிட்டோடலுற்றார்
கத்திபிடித்தமன்னர் கைசோர்ந்துவிட்டெறிந்தார்
ஓடியொளிப்பாரும் உடனேவிழுவாரும்
வந்தானேவாளபிமன் வாளுழிக்குகைக்கு
என்றேவரசர் இடிந்துவிழுவாரும்
அதோவந்தான்வாளபிமன் என்றேபயந்தோடி
இதோவந்தானென்று அலறிவிழுவாரும்
கண்டான்திரியோதனும் காதிரண்டும்செவிடுபட்டு
கோடையிடிபோலே குமுறலேதுஎன்றுரைத்தான்
கோடையிடியல்லயது கோனுரிடகூச்சல்தான்

## திரியோதிரன் அரவானை யழைத்துவரச் சொல்வது.

அழைத்திங்குவாருமென்று னரசன்திரியோதிரன்
யானைத்திரளிலுள்ளவர்கள் அரவானருகில்வந்து
வாடாயிடையா வெறிகொண்டுவந்தாயா
மன்னன்திரியோதிரனுர் வரவழைத்தார்வாருமென்றுன்
தலைமேலேபாற்குடங்கள் தரிக்கமுடியாது
இறக்குவாரில்லையோ உங்களிழவுக்குகொண்டுவந்தேன்
தலையெரியுதையா தாழயிறக்குமென்றுன்

## துரோணர் அதர்களை யழைப்பது.

சொல்லச்சபையினில் துரோணாதுவறிந்து
துதரைத்தானழைத்து சொல்லுவார்தானுமப்போ
உலுப்பைகள்வந்திருக்கும் உக்கிராணந்தன்னருகே
பாற்குடந்தானிறக்கிப் பதியவேதானிருத்தி
இடையனைத்தானழைத்து இங்கேவாவென்றுரைத்தார்
பாற்குடத்தைத்தாங்கி யிறக்கவந்தார்பார்மன்னர்

## அரவான் பாற்குடங்களை உடைத்துவிட்டது.

அரவானும்பாற்குடத்தை அசட்டையாய்விட்டுவிட்டான்
பாலாறுபோலே பரவுதேகுடமுடைந்து
உக்கிராணத்திலுள்ளே வுலப்பைகளத்தனையும்
மாங்கனியும்தேங்கனியும் வாழக்காயும்பழமும்
பாற்குடந்தானுடைந்து பாலாறுபோலோட

அதிலிருந்ததுகாய்கறிகள் அலைந்தோடிப்போய்விடும்
ஆயிரம்மல்லர்களை ஆற்றிலடித்தோட
கெடுத்தானிடையனென்று கோடிமன்னரோடவுற்றார்
கையில்தடிபிடித்து காவலர்கள்மேல்விழுந்தான்
மாறியடித்து வழிபார்த்துத்தானடந்தான்
திரியோதிரனிருக்குஞ் சேனைநடுவாக
குத்துநடுவே குலமன்னர்போய்புகுந்து
துரோணர்முகம்நோக்கி துரையன்னன்தெண்டனிட்டு
அரவானிவனென்றறிந்து ஆசீர்வாதம்புகன்றார்
இடுப்பில்தடிபிடித்து ஏகாந்தமாயிருந்து
அரவான்திரியோதிரனை யாரென்றுகேட்கலுற்றான்
அரவான்வினவுமுடனே அரசன்திரியோதிரனும்
ஏண்டாயிடையாஉனக் கித்தனைகோபமடா
ஆயனிடையனென்ற தாலேயினால்பொறுத்தேன்
மற்றவருமானாலே மாறியடித்திடுவேன்
என்னத்துரோணர் இராசர்முகம்நோக்கி

இடையனுக்கு வெகுமானங் கொடுத்தனுப்புதல்

என்றுசொல்லக்கேட்டு இராசன்திரியோதிரன்
தாதியரைத்தானழைத்து தார்வேந்தன்கூறுவான்
மாயனிடையனுக்கு மரியாதைபண்ணிவைப்பான்
கொண்டுவாபச்சைவடம் கொடுபாக்குவெற்றிலையும்

அரவானுக்கு திரியோதிரன் வெகுமதிசெய்தது.

இழையாயிரம்பொன்பெற்றஇந்திரவர்னப்பட்டெடுத்து
கொண்டுவந்தாப்போது கொற்றவர்தன்னருகே
திரியோதிரனெடுத்துத் திருமாலிடையனுக்கு
இந்தாடாவென்று எடுத்துக்கொடுக்கவந்தான்
பார்த்தன்மகனாரும் பச்சைவடம்வாங்காமல்
குடுவையைக்கைபிடித்து கோலையேநீட்டினான்
துரோணர்முகம்நோக்கி திரியோதிரனுரைப்பான்
இந்தயிடையன்நம்மை எண்ணாமல்செய்ததுபார்
என்னத்துரோணர்இட்ட அடுத்ததுகோல்குடுவை
என்னவென்னலாமோ அரசர்திரியோதிரனே
என்னத்திரியோதிரனும் இசைந்துமனமகிழ்ந்து
குடுவைப்பலபாக்கிலையைக் குலவேடன்தானடைத்து
தடியேபச்சைவடம் தார்வேந்தன்போடலுற்றான்

வாங்கியராவனும் வட்டமணல்மேல்விரித்து
ஆட்டுக்குசீலையிட அடுக்காய்கிழிக்கலுற்றான் [ன்
மூகத்துமேல்சீலையென்று மூடிமன்னனுங்கிழிக்கலுற்று
பாக்கிலையைவாங்கிப் பாயின்மேல்வைத்தவனும்
வாய்த்தபலமென்று மன்னனுரைக்கலுற்றான்
குலமன்னர் நூற்றுவர்க்கும் குடிப்பிறந்தபிள்ளைநான்
குடமுடைக்கவேணுமென்று குடுவையைப்போட்டுடை
[த்தான்

திரியோதனன் சொல்வது.

திரியோதனனுக்குத் திக்கென்றுகோபம்வந்து
குருக்கள்மூகம்பார்த்து கொற்றவனுங்கூறலுற்றான்
இந்தயிடையன் நம்மை எண்ணாமல்செய்ததுபார்
என்ன அரவானும் இராசர்மூகம்நோக்கி
சித்திரைவெய்யலில் சினைபசுக்களத்தனையும்
தண்ணீர்கிடையாமல் தவித்துவிழும்பொழுது
துள்ளியெந்தன்றம்பலத்தை ஆவினுடவாயிலிட்டால்
தண்ணீர்சுரக்குங்காண் தார்வேந்தர் அவைகளுக்கு
பட்டைகிழித்து பரியாசம்செய்ததெல்லாம்
வெள்ளாடுகன்று மிகுந்துமேபால்சுரந்தால்
ஆட்டுக்குசீலையிட ஆகுமென்றுதான்கிழித்தேன்

அரவான் சேனைகளை யடிப்பது.

என்று—அரவானும்தன்னுடனே ஆடுமாடுதேடுதல்போ
கோடையிடியைப்போல் குலவேந்தர்மேல்விழுந்து [ல்
கால்வாரிகைபிடித்து கனக்கவேதானறைந்தான்
மண்டைசிதறவே மண்ணில்விழவடித்தான்
தலையுடைந்துமன்னவர்கள் தரணிமேல்தான்விழவே
கைதப்பிப்போனவரை கைக்கோலால்வீசலுற்றான்
மாறியடித்தானே மன்னவர்களுள்ளவரை
மாட்டைமடக்குதல்போல்மன்னவரைமாட்டிவிட்டான்
ஆட்டைமடக்குதல்போல் அரசர்கள்மேலடித்தான்
அண்டம்பிளந்ததுபோ லரவானுங்கூச்சலிட்டான்
டேயோடேயோவென்று திரளாகக்கூச்சலிட்டான்
அப்போதுசேனைகள் அதிர்ந்துநடுங்கிடவே

திரியோதனன் சேனைகள் ஓடுகிறது.

ஊரைவிட்டோடுவாரும் உறவைவிட்டோடுவாரும்
தேரைவிட்டோடுவாரும் தெருவைவிட்டோடுவாரும்

கூலியாளர் நாங்களென்று கும்பிட்டு நிற்பாரும்
கத்திமடியில்வைத்து கைகட்டி நிற்பாரும்
ஈட்டி செடியில்வைத்து யிடைந்துவந்து நிற்பாரும்
நாமத்தைக்காண்பிப்பாரும் தான்தாதனென்பாரும்
பூணூலைக்காட்டுவாரும் பிராமணனென்பாரும் [ர்
வடுகரெல்லாம் நீரென்பார் வன்றமிழர் தண்ணீரென்பா
துலுக்கரெல்லாம்பாணியென்று சொல்லிற்றேபாளையங்
இத்தாருடனேவே இரணமுண்டாங்கொக்கரிக்க [கள்
அமிஞ்சிக்கியெங்களை அழைத்துவந்தாரென்பாரும்
பிச்சையெடுக்கப் புறப்பட்டோமென்பாரும்
ஆனைக்குஇரை அலைந்தோடிப்போகிறது
கண்டானரவானும் கலீரென்றுதான் நகைத்தான்
கூட்டுப்பழியடித்து கொடிசேர நின்றானே
என்று-கைகொட்டி நல்லரவான் காவலரைத்தான்பார்த்
மூத்துவிரல்சுழட்டி மூக்குமேல்கையைவைத்து [அ
அதிகநகைத்தானே அரசர்கள்தானடுங்க
காவலர்களெல்லோரும் களைத்துச் செவிடுபடும்
மூர்ச்சைதெளிந்து முடிமன்னர் தானெழுந்து
மாயன்கிலாரியென்று பரியாசைசெய்தாக்கால்
கொற்றவர்கள் முன்பாக கூவலாமோ இடையா நீ

அரவான் சொல்லுவது.

அரசர்முகம்நோக்கி அரவானுங்கூறுவான்
அறுபதினாயிரங்கோடி ஆனைதொருபாற்பசுக்கள்
எழுபதினாயிரங்கோடி இளங்குட்டிவெள்ளாடாம்
எனமனிதர்நாலாயிரம் இடையரங்கேமேய்க்கிறார்கள்
திருமால்மகளாற்கு சீதனந்தான்கொடுக்க
ஓட்டிவாவென்றுசொன்னார் ஓட்டிவந்தேனிப்பொழுது
கறுத்துவெளுத்திருக்கும் காவலரைநான்பார்த்து
மாலைக்கண்ணனையினல் மாடென்றுநானிருந்தேன்
தேடிவந்துகூவி கிரியோகிராவென்றான்
மாயன்கிலாரிநான் மந்தையில்பால்சுமப்பேன்
மாயன்மனையில் வளர்ந்தேன்காண்மன்னவனே
ஆயன்மனையில் அனேகநாள்வளர்ந்தேன்
இடையரிலேநான்பெரியோன் என்பெருக்கம்நீர்கேளீர்
சீவணலட்சம்மாடு மேய்ப்பேன்மலைதனிலே

கொல்லிமலைநடுவே கோவுக்குநீர்காட்டி
காட்டில்கிடைகட்டி காத்திருப்பேநானிடையன்
நடுகாட்டியிலானிஎன்றுநான் போர்படைத்தேன்காண்
வந்தாற்கு அன்னமிட்டு வருவாற்குஇலைமாத்தி
அன்புமிகவுண்டாக்கும் ஆயன்கிலாரிகண்டாய்
பெருமாள்தான்சோறிடுவார் நீங்கள்பிரண்டுவிழுந்திர்க
தோகையினமயிலாள் சொகுசானசுந்தரியை [ன்
மாலையிட்டுக்கொள்ளவந்த மாப்பிள்ளையைநான்பார்க்க

அரசர்கள் சொல்வது.

மகாராசன்மைத்துனனுங்கள் மாப்பிள்ளைலக்குணனை
காணவந்தபேருக்கு கண்ணாயிரம்வேணும்
என்னஆரவானும் இகழ்ச்சியேபண்ணிவைத்து
ஆயிரங்கண்ணோ அதுவோசிலபாரமென்று
நான்மேய்க்கும்பசுவிலே நாலாயிரம்கண்ணிருக்கும்
பார்க்கவந்தால்நாளை பகலுக்குவாருமென்றார்
சாணைத்திம்மாவென்று சந்தோஷத்துடனெழுந்து
மாப்பிள்ளைலக்குணனை மாட்டிடையாபாருமென்றார்
பார்த்துசிரித்து பார்த்தன்மகன்கூறுவான்
பொட்டிட்டுபட்டுடுத்தி பொன்சிலதுபூண்டாலும்
சட்டழகிசுந்தரியாள் கால்தூக்கஒவ்வானோ
என்றுநகைத்து இடையனும்போகலுற்றான்
யானைதேர்குதிரையும் அண்ணரிடதண்டுக்காம்
காலாளெல்லாநமது கையில்லக்கிறையாகும் [தான்
தோற்றோடிப்போனதெல்லாம்தொந்திசெட்டிகைவசந்
விளையாடப்போறவன்போல் பேடுபள்ளமாருய்ந்து

அரவான் அண்ணரண்டை வருவது.

ஆருய்ந்துநல்லரவான் அண்ணரைத்தேடி
அண்ணன்கடோற்கஜனுக்குஅரவானுந்தெண்டனிட்டு
வாழ்த்தியந்ததம்பியரை மாற்றான்படைநடுவே
போனீரேதம்பியரோபுதுமையென்னசொல்லுமென்றான்
என்னபுதுமையண்ணே நான்போனதண்டிலே
கூவினேனொருசத்தம் கூவினபோதவர்கள்
யானைமுறிந்தோட அரசமக்கள்பார்த்தார்க
மாதுக்குஒப்பான மாப்பிள்ளையைக்கட்டில போம்
குதிரைமிரண்டோட குலமன்னர்பார்த்தார்

ஈட்டிபிடித்தமன்னர் எறிந்தாவிட்டோடலுற்றார்
யானைகுதிரையெல்லாம் அண்ணனையுக்கனுக்கு
காலாள்பரிஜனங்கள் என்னகையில் லுக்கொப்பமிட்டேன்
தோற்றோடிப்போனதெல்லாந் தொந்திசெட்டிகைவசந்
[தான்

அபிமன்னன் அரவானுக்குச் சொல்வது.

என்ன அபிமன்னன் எழுந்தரவானைப்பார்த்து
அண்ணனென்மந்திரவானுக் காருமிறையில்லையே
வாணுமப்பாதம்பியரே மாப்பிள்ளையாகையினால்
ரணமுகம்பாராதே யுத்தந்தெரியாதே
இங்கேயிருந்துகொண்டு ஆரிங்கேவந்தாலும்
கட்டிப்பிடித்து காவலில்வையுமென்றான்
அப்போதிரியோதிரன் ஆயன்மகள்சுந்தரிக்கு
மல்லரைத்தானழைத்து மகாபூஷணந்தானெடுத்தான்
மாயன்மகள்சுந்தரிக்கு மகாராசன்போகவிட்டான்
ஆயனரண்மனைக்கு அத்தூதர்கொண்டுவந்தார்
திருமால்மகளாருஞ் சேதியதுதானகேட்டு
மாற்றான்பணிகளை வரவிட்டான்தோழியரே
என்னங்கத்தையரிய அடைவல்லோதோழியரே
மாற்றானிலக்குணற்கு வாழ்க்கைப்படுவதில்லை

சுந்தரி அக்கினியில் விழப்போகிறது.

அக்கினிமூட்டி அனலுக்கிரையாவோமென்று
மஞ்சனச்சாலையிலே மகாதீர்த்தமாடிவந்து
மஞ்சள்வைத்தபட்டாடை மாயன்மகளுடுத்தி
பூச்செண்டுடனுமிச்சை பெருமாள்மகள்கைபிடித்து
கண்ணாடிகைபிடித்து கட்டழகிசுந்தரியும்
அக்கினிமுன்பாக ஆனைமுகச்சாலையின்மேல்
சேலையைபரிசி திருமுடியின்மீதில்வைத்து
சாந்தணிந்து தார்குழலும்வீற்றிருந்தாள்
தாதியர்செங்கமலம் சற்றுமனங்கொள்ளாமல்
பதறுதேசுந்தரியே பார்த்தன்மகன்வருவான்
என்றுசொல்லி அப்போது எங்கிமனந்தளர்ந்து
அப்போதுதாதியர்கள் அரிவையருந்தானெழுந்து
இங்கேயிருமென்று எந்திழைக்குகாவல்வைத்து

பெருமாளண்டை தாதி வருகிறது.

மாயனருகாக மங்கையரூமோடிவந்து
மங்கைநல்லாள்சுந்தரியு மாளவேதிவளர்த்தி
சாகத்துணிந்தாள் தாணியளந்தவரே
என்னப்பெருமாளும் ஏங்கிமிகநகைத்து
இனியொருநாழிகைதான் என்மகளார்சுந்தரியை
பத்திரமாய்வைத்திருங்கள் பாங்கியரேஎன்றுரைத்தார்
மூகூர்த்தங்கள்தப்பாமல மூடிமன்னரேபாருமென்றார்
மாப்பிள்ளைதன்னை வரவழைத்துவாருமென்றார் [த்து
பூஷணப்பெட்டியெல்லாம்புகழக்கடையில்போட்டுவை
மாயரவர்வாச்சொன்னார் வாருமென்றுபோயழைத்தார்
திரியோதிரன்மகிழ்ந்து சேனைகளைவாருமென்று
அப்போதிரியோதிரனுந் தன்மகன்லக்குணற்கு
யானையலங்கரித்து ஆனைசிம்மாதனத்தில்
யானைமேல்சிம்மாதனம் தனியேயலங்கரித்து
வெற்றியிலக்குணரை வெள்ளானைமேலேற்றி
சேனைபரிவாரமெல்லாஞ் சேரவேகொண்டுவந்து
குதிரையின்மேல்ராசாக்கள் குலுங்கியேதான்வர
யானைமேல்ராசாக்கள் அணியணியாய்த்தான்வர
நட்டுவர்கைகொட்டிவர நாடகங்களாடிவர
வெண்கலக்கொம்பூத வெற்றிமுரசறைய
வேசியர்கள்கோடி தெருவீதியாடிவர
நாகசுரமூதிவர நாட்டியர்களாடிவர
பேரிகைகொட்டிவர பெரியதம்புருமுழங்கிவர
பூரிகைகொட்டிவர பெரியடமாடோலடிக்க
தப்புமுழங்கிவர தவில்முரசுகொட்டிவர
செப்புமுரசுகள் சேரமுழங்கிவர
மேளமுழங்கிவர விண்டமண்டலமசைய
தாளம்முழங்கிவர தரணிமன்னர்தானடக்க
சல்லரிகொட்டிவர சாவரிசைகொட்டிவர
மல்லரிகொட்டிவர மத்தளங்கள்கொட்டிவர
வீணைமுழங்கிவர வேந்தர்நடந்துவர
தண்டுமுழங்கிவர தார்வேந்தர்கொட்டிவர
மாப்பிள்ளையிலக்குணனும் மணக்கோலம்வாருனே
அப்போநடக்கிற அதிசயத்தைத்தான்கேளும்

பஞ்சவர்கள் புத்திரால் திரியோதிரன்
சேனைகளிடத்தில் வருவது.

பஞ்சவர்கள்புத்திரர்கள் பராக்கிரமத்தைகேளும்
அப்போகடோற்கஜனும் அரவானுந்தொந்திசெட்டி
மாயன்பெருமாளை மனதிலேதானினைத்து
ஆயன்பெருமாளே அடியார்கள்பங்கிலிரும்
வில்லெடுத்துவாளெடுத்து வேந்தர்கள்கைபிடித்து
வாரார்களப்போது மாயனை மனதிலெண்ணி
வடக்கேகடோற்கஜனும் மேற்கேயரவானும்
கிழக்கேயபியன்னனும் தெற்கேதொந்திசெட்டியுந்தான்
இப்படியாக யிருந்தார்களப்பொழுது

கடோற்கஜன் சண்டை.

வடக்கேகடோற்கஜனும் கனதண்டுகைபிடித்து
யானையணியிலே அதிவீரன்போய்புகுந்து
ஒட்டகசேனையிலும் உற்றகுதிரையிலும்
கட்டழகன்போய்புகுந்து கதித்துக்கொதித்தெழுந்து
அண்டங்கிடுகிடுடென்ன ஆகாசந்தத்தளிக்க
பூமிகிடுகிடுடென்ன பூலோகந்தானதிர
வாரானேயப்பொழுது மாகெதையைத்தானேந்தி
தண்டைசுழட்டித் தீவிரமாய்விட்டானே
சத்தசமுத்திரமும் சலம்வற்றியுள்ளடங்க
தேவாதிதேவரெல்லாம் திகைத்துபயந்தோட
கெற்பங்கலங்கவே கிரிகள்மிகக்குலுங்க
மந்திரதூபமிட்டு வாங்கிசுழட்டிவிட்டான்
வருகிறதேதண்டது மதயானைகூட்டத்தில்
யானைத்தலையை அடைவாய்ப்பிளக்கிறதே
குதிரைத்தலையை குவிப்பாய்பிளக்கிறதே
யானையதுவீரிட அரசர்பயந்தோட
திரியோதிரனுடைய சேனைபரிகலமும்
கர்னன்விதுரனுங் கனத்தசபைமன்னவர்களும்
மன்னர்குருக்கள் மகாசேனையிலுள்ளவரும்
கண்டுபயந்தார்கள் கடோற்கஜனென்றறிந்தார்
யானைமேலிருந்ததுரைகள் கொக்கரித்துமண்ணில்விழ
காளைகடோற்கஜனும் கனசண்டைசெய்யலுற்றான்
நான்குநாள்மட்டும் நல்லசண்டைசெய்தானே

கடோற்கஜனை தேவர்கள் கொண்டாடல்.

தேவாதிதேவரெல்லாஞ் சொல்லுவாரொருவார்த்தை

இராமனுசண்டை யென்பார் இராவணன்சண்டை
[யென்பார்
இந்திரசித்துசண்டை யென்பார் இலட்சுமணர்சண்டை
[யென்பார்
சூரபத்மன்சண்டை யென்பார் சுப்ரமணியர்சண்டை
[யென்பார்
வீரபத்திரன்சண்டை யென்பார் வேல்விதக்கன்சண்டை
[யென்பார்
கடோற்கசனைப்போல்சண்டை செய்தோர் யாருமில்லை
[யென்பார்
இப்படியாகவே இவர்கள்சொல்லும்வேளையிலே
காளைகடோற்கஜனும் கனத்தபடைமுகத்தில்
முன்னும்பின்னும் பாராமல் முனைவீரன்சாடுகையில்
மாளுஞ்சனங்களென்றால் மட்டிட்டுப்போகாது
செத்தசனங்களென்றால் சொல்லவேமுடியாது
யானைமேலிருந்தவர்க ளழுந்துவிழுவார்கள்
குதிரைமேலிருந்தவர்கள் கொக்கரித்துவிழுவார்கள்
ஒட்டகத்தின்மேலிருந்தவர்க ளோலமிட்டுவிழுவார்கள்
சால்குடல்சரிந்து இந்நிலத்தில்விழுவார்கள்
மணிக்குடல்தான்சரிந்து மண்ணில்புரளுவாரும்
சண்டைசெய்யமாட்டாமல் சலாஞ்செய்தோடுவாரும்

துரியோதனன் சேனைகள் ஓடுகிறது.

ஊரைவிட்டோடுவாரும் உறவைவிட்டோடுவாரும்
தேசைவிட்டோடுவாரும் தெருவைவிட்டோடுவாரும்
கத்திசெடியில்வைத்து கைகட்டி நிற்பாரும்
ஈட்டிசெடியில்வைத்து இடையப்போய்நிற்பாரும்
பாங்குசெடியில்வைத்து பயந்துவந்து நிற்பாரும்
நாமத்தைகாண்பிப்பாரும் நான்தாதனென்பாரும்
பூணூலைக்காண்பிப்பாரும் பிராமணனென்பாரும் [ர
வங்கெல்லாம் நீரென்பார் வன்றமிழர்தண்ணீரென்பா
துலுக்கரெல்லாம்பாணியென்று சொல்லுதுபாளையம்
இரத்தாறுவோடவே ரணமுண்டங்கொக்கரிக்க
அமிஞ்சியாகயெங்களை அழைத்துவந்தாரென்பாரும்
பிச்சையெடுக்க புறப்பட்டோமென்பாரும்
இப்படியாக இவன்சண்டை செய்கையிலே

அரவான் சண்டை.

அர்ச்சுனன்பெற்றெடுத்த அரவானுந்தானெழுந்து

தெற்குமுகமாகத் தேர்விசயன் தன்மகனும்
வில்லைவளைத்து விசையன்மகனாரேற்றி
அம்புதொடுத்தானே அரசர்தன்மேலே
அண்டங்கிடுகிடுகிடென்ன ஆகாயந்தானதிர
அக்கினிபாணங்கள் அனேகந்தொடுத்தானே
வாயுநல்லபாணங்கள் வருணனதுபாணங்கள்
இராமருடபாணங்கள் இலட்சுமணர்பாணங்கள்
சாங்கோபசாங்கமாய் சரமாரியாய்த்தான்பொழிந்தான்
ஆகாயமுள்ளதெல்லாம் அம்பாலேபந்தலிட்டு
பாணசரத்தாலே பந்தலிட்டானப்பொழுது
பாணம்வரும்விதங்கள் பார்க்கமுடியாது
அம்புவரும்விதங்கள் ஆற்றமுடியாது
ஐப்பசிமாதத்திலே அடர்ந்தமழைவந்ததுபோல்
புரட்டாசிமாதத்திலே பெருமழைவந்ததுபோல்
கார்த்திகைமாதத்திலே கனத்தமழைவந்ததைபோல்
சோனைமாரிபோலே சொரிகிறான்பாணங்கள்
இப்படியாக இவன்செய்யும்வேளையிலே
மாண்டஜெனங்களென்றால் மட்டுமிதங்களில்லை
செத்தஜெனங்களென்றால் சொல்லமுடியாது
தேர்மேலிருந்தவர்கள் சிதறிவிழுவாரும்
பரிமேலிருந்தவர்கள் பதறிவிழுவாரும்
நாய்க்குணிபோலே நசிந்துவிழுவாரும்
நிலாப்பூச்சிபோலே நிலத்தில்நசுங்குவாரும்
கால்போனமன்னர்சிலர் கைபோனமன்னர்சிலர்
தான்போனமன்னர்சிலர் தலைபோனமன்னர்சிலர்
தோள்போனமன்னர்சிலர் துடைபோனமன்னர்சிலர்
மூக்கறுந்துபோனவரும் மூலைமுகந்திற்சாவாரும்
ஓடியொளிப்பாரும் உதைபட்டுநிற்பாரும்
ஆனைமேலிருந்தவர்கள் அபயமிட்டுமண்ணைக்கவ்வ
ஒட்டைமேலிருந்தவர்கள் ஓலமிட்டுமண்ணைக்கவ்வ
இரத்தாறுஓடினதே ரணமுண்டங்கொக்கரித்து
கல்யாணம்பார்க்கவந்தோர் கைலாசஞ்சேர்ந்தார்கள்
பணிசெய்யவந்தவர்கள் வைகுந்தஞ்சேர்ந்தார்கள்
வெற்றிவெற்றியென்றுசொல்லி வீரமுரசடிபடுது
சண்டைசண்டையென்றுசொல்லி சண்டைநகாரடிபடுது
ரணங்கள்ரணங்களென்று ரணபேரியடிபடுது

தேசத்தழகுமன்னன் திரியோதிரனுடைய
பதினெட்டு அக்ரோணி படைமன்னரெல்லோரும்
யாண்டானங்கள்போக மற்றவர்களெல்லோரும்
சண்டைபண்ணமாட்டாமல் சலாம்பண்ணியோடலுற்
பண்டாரமென்பாரும் பரதேசியென்பாரும் [றூர்
பூநூலேக்காண்பிப்பாரும் பிராமணனென்பாரும்
திருநீற்றைக்காண்பிப்பாரும் சிவனடியாரென்பாரும்

தொந்திசெட்டி சண்டை.

மேற்குமுகம்நோக்கி வேந்தர்களோடிவந்து
ஓடியுந்தேடி ஒருவரையுங்காணமல்
தொந்திசெட்டிவீற்றிருக்குந் தெருவீதியோடிவந்தார்
வாடியமனிதருக்கு மாபயந்தீர்ப்பவன்போல்
ஓடிவொளிப்போகைக கோணிக்குள்பூருமென்றான்
அப்போதுமன்னவர்கள் அடைவாகவந்தார்கள்
கோணிக்குள்பூருமென்று கொற்றவனுஞ்சொன்னனே
கோணிநிறையக் குலமன்னர்சேர்ந்தார்கள்
அப்போதுமன்னவனும் அடைவாகத்தான்பார்த்து
வாரிபிடித்துமன்னன் மண்ணோடேசாடலுற்றான்
மாண்டுமடிந்தார்கள் மகாசேனையத்தனையும்
நெஞ்சறுத்துவிழுவாரும் நிலத்தோடேசாய்வாரும்
மண்டைபிளந்து மண்மேலேசாய்வாரும்
வயிறுகிழிவாரும் மணிக்குடல்சரிவாரும்
காலோய்ந்துகைமடக்கி கண்பிதுங்கிசாவாரும்
ஐயோவிதியேயென்று அலறிவிழுவாரும்
குய்யோமுறையோவென்று கூச்சலிட்டுசாவாரும் [ட்டு
வைக்கோல்போர்சேர்ந்தாற்போல் மனிதரைப்போகவி
கூடிவந்தமன்னவரைக் கொன்றுபோர்செய்யலுற்றான்
தலையற்றமன்னர்க்கு தங்கவிடமில்லாமல்
திரியோதிரனுடைய திசைமன்னர்நூற்றுவரும்
வீமர்துரோணரும் விதுரன்சகுனியும்
மாப்பிள்ளேலக்குணனும் மன்னர்துரைகளெல்லாம்
நட்டுமுட்டுக்காரரும் நாடகக்காரர்களும்
தப்பட்டைகொட்டாமல் தப்புமுழங்காமல்

துவாரகாபுரிக்கு அரசர் ஓடிவருகிறது.

மாயன்பதிநோக்கி மன்னவர்களோடலுற்றார்
ஆயனைதுவறித்து ஆனமனிதருடன்
பசங்கள்மெத்தபொல்லாதார் பழிப்பார்கள்நம்மவரை

உங்களை-மாயவனாரிங்கே வரவேண்டாமென்று சொல்லி
என்று-சாத்திக்கதவடைத்து தாள்போட்டுத் தாவரும்
திரியோதிரனுக்கெதிரே தூதுவருமோடிவந்து
மாயன்பதிநோக்கி வந்திரேயாமாகில்
பஞ்சவர்கள்புத்திரர்கள் பதைபதைக்கக்கொல்லுவார்கள்
வரவேண்டாமென்று சொல்லிவழிமறித்துப்போங்களே
தேசத்தரசன் திரியோதிரப்பெருமான் [ன
இனியென்னசெய்வேனென்று ஏங்கியனந்தளர்ந்து
மாமரத்தைநோக்கி வருவார்திரளுடனே

அபிமன்னன் அரசமக்களைப் பிடித்துக்கட்டுவது.

அங்கேயபிமன்னன் அதட்டியேவந்து நின்று
வாளுருவிக்கைபிடித்து வாளபிமனேதுசொல்வாள்
பெரியப்பாசிற்றப்பா பேர்பெரியபாட்டனுமே
செல்வனிலக்குணனும் தெருவீதிகோலம்வந்து
மாயன்மகளாரை மணஞ்செய்யவந்திரோ
தாமணியாய்ச்சேர்த்து தார்வேந்தர் நூற்றுவரை
வாருமிங்கேயென்றுசொல்லி மாறிக்கொடிபிடுங்கி
இருபத்திமூவ்ம்பார்த்து இராசாக்களை நிறுத்தி
குருக்கள் துரோணரும் கொற்றபிராமணரை
வேதங்களோதுமென்று வேந்தனுங்கூறுவான்
மாறுபாடாக மரத்தோடேதான்சேர்த்து
அவரவர்கச்சைகளை அவிழ்த்தயபிமனுமே
தூக்கிவிட்டுவாளபிமன் தூண்டிபோல்போட்டுவைத்தா
மாப்பிள்ளைலக்குணனை மடல்விரியக்கட்டினான் [ன்
பூண்டபணியெல்லாம் பூரிப்பாய்தான்கழட்டி
வாளபிமன்பூண்டுகொண்டு மாற்றானிலக்குணனை
சிற்றெறும்புகட்டெறும்பு சேர்ந்தவிடந்தனிலே
குண்டுகட்டாய்க்கட்டி கொற்றவனைப்போட்டுவைத்து
அரசர்கள்முன்பாக அர்ச்சுனனார்புத்திரன்
அரசர்நடுவே அபிமன்னராசாவும்
கொலுவாகவீற்றிருந்தான் குலமன்னன்தன்னுடனே
நட்டுவர்பாடவே நல்லகிடாபோருட
சிட்டிகள்மல்யுத்தஞ் செய்துமேகாட்டிவர
வேந்தர்சமூகத்தில் வேசியர்களாடிநிற்க
இப்படியாகயிருக்குமந்தவேளையிலே
இங்கோணக்களத்தில் அரசர்கள்மூவரும்
வெட்டிப்பொருந்தினதும் வேந்தர்மடிந்ததுவும்

யானைகுதிரை அரசமக்கள்பட்டதுவும்
இரத்தாறுமோடிவர ரணமுண்டங்கொக்கரிக்க
கூளிகுடல்பிடுங்க குடல்மாலைதான்மிதக்க
குத்துவுயிரோடே குலமன்னரோலமிட
பருந்துகழுகுகள் பசிதீர்ந்தேயேப்பமிட
பூதபிசாசங்கள் புகழ்ச்சியாடிமோம்
தேர்புரவியானைகளும் தெப்பல்போல்தான்மிதக்க
உயர்ந்தபனைமேற்காகம் உதிரமதுதானுண்ண
ஓடுமுதிரத்தில் உத்தமர்கள்முழுக
அரவானும்தொந்திசெட்டி அண்ணன்கடோற்கஜனும்
தாமரைப்பொய்கையிலே தார்வேந்தர்போய்முழுகி
ஆயுதங்கள்தான்கழுவி அரசர்திரும்பிவந்து
மாமரத்தின்கீழாக வாளபிமனைத்தேடி
வார்த்தைகள்பேசியே வாறூர்கள்ராசாக்கள்
அபிமனுர்வீற்றிருக்கும் அம்மரத்தருகில்வந்து
கண்டானபிமன்னன் காவலர்கள்வருகிறதை
அபிமனெழுந்திருந்து அண்ணற்கெதிராக
அண்ணமார்மூவருக்கும் அடிவணங்கிதெண்டனிட்டு
இவர்களெங்கேசிக்கிறார்கள் எழில்விசையன்புத்திரனே
மன்னவரைத்தேடிப் பிடித்தாயோவாளபிமா
எங்கேயகப்பட்டார்கள் இராசமுடிமன்னவர்கள்
அண்ணர்முகம்நோக்கி அபிமனுங்கூறுவான்
எங்கெங்குந்திரிந்து இருக்கவிடமில்லாமல்
மன்னன்துரியோதனும் மாப்பிள்ளைலக்குமணரும்
தாயாதிநூற்றுவரும் சகுனியுடன்தேசத்தரசன்
வீஷ்மர்துரோணர் விளங்குந்துரைமன்னவருடன்
வாடிமனந்தளர்ந்து வந்தார்மரத்தருகே
வழிதப்பியங்கே வந்தார்களரசருமே
என்றென்றுசொல்லக்கேட்டு ராஜகுலவேந்தன்
இடும்பரைக்கட்டி எடுத்தமைத்தானப்பொழுது
நாங்கள்படைபொருதி ராமர்மருகோனே
மூட்டைசுமப்பாரும் முடிபொருக்குங்கொல்லர்களும்
அமிஞ்சிக்கிவந்தவரை அவர்கள்திபந்தர்களை
கூலிபரிதேசிகளை கொன்றேங்காண்வாளபிமா

நால்வரும் ஆலோசனை செய்வது.

முடிமன்னர்நூற்றுவரை முதலான அரசரை
உயிரோடேகட்டிப் பிடித்தீரோமன்னவனே

என்றுமகிழ்ந்து இராசாக்களே துரைப்பார்
நாமிங்கேவந்து நெடுநேரமாச்சுதல்லோ
மாயரெம்மை மதியாமலேயிருந்தார்
அமராபதிபுகுந்து ஆயனைக்கட்டிவைத்து
அழகியசீர்சுந்தரியை அபிமன்னனுக்குமாலையிட்டு
மாயவனைக்கட்டி வருவோம்வா தம்பியரே
என்றிவர்பேசி எண்ணமிட்டிருக்கையிலே

சுந்தரிக்கு தோழிகள் சொல்வது.

கண்டார்கள்தாதியர்கள் கடுகெனவேவோடிவந்து
சுந்தரியாள்தன்னுடனே சொல்லுகிறார்தாதியர்கள்
ஓடிப்போகுங்குருக்கள்தன்னை உன்புருஷன்வாளபிமன்
இரியோதிரனுடைய திரளானநூற்றுவரையும்
மாயவரைத்தான்பிடிக்க மன்னவர்கள்வாருர்கள்
என்றுசொல்லத்தாதியர்கள் எடுத்துரைத்தார்சுந்தரிக்கு
அந்தவிசேடம அதுகேட்டுசுந்தரியும்
சந்தோஷப்பட்டு தலையசைத்துசுந்தரியும்
குஞ்சிரிப்புகொண்டு குலுங்கநகைநகைத்து
ஊழியப்பேரையெல்லாம் ஓடியழையுமென்ருள்

தோழியர்கள் பந்தலலங்கரிப்பது.

அப்படியேதாதியர்கள் அழைத்துவந்துவிட்டார்கள்
வந்துநின்றஊழியப்பெண் வஞ்சியர்க்குதெண்டனிட்டு
என்தகப்பன்வாசல் என்வாசலுள்ளதெல்லாம்
பந்தல்கள்போட்டு பட்டாலலங்கரித்து
அந்தமுள்ளசுந்தரியா ளலங்கரிக்கச்சொன்னளே
நல்லதம்மாவென்று நடந்தார்களோடிப்போய்
பார்க்கமுடியாது பந்தலிட்டசிங்காரம்

சுந்தரி ஓலையெழுதுகிறது.

இப்படியாயிங்கே யிருக்குமந்தவேளையிலே
சுந்தரியாள்நால்வருக்கும் தூதோலைதானெழுதி
நால்வருக்குந்தெண்டனிட்டேன் நாயகியாள்சுந்தரியும்
நான் நினைத்தகாரியத்தை நன்ருய்முடித்தீரே
என்சபதந்தப்பாமல் இப்போமுடித்தீரே
மன்னவரேயுங்களிட வல்லமைகள்கண்டேனே
அபிமன்னராசாவே அவ்வோலைவாசியென்ருள்
அப்படியேதல்லதென்று அபிமன்னன்தானெடுத்து
ஒப்பமுடனேலைதன்னை வுள்ளபடிவாசித்தான்
நல்லதென்று அவரை நலமுடனேயனுப்பிவிட்டு

தூதுவருமோடிவந்து சுந்தரிக்குத்தெண்டனிட்டு
ஓலைகொடுத்து உரைத்ததொருவாசகத்தை
சொல்லியேசுந்தரிக்கு தூதுவருந்தானுரைத்தார்
சந்தோஷமாகவேதா னிருந்தாளேசுந்தரியும்
இப்படியாக யிருக்குமந்தவேளையிலே

பெருமாள் வருவது.

மாயன்மகிழ்ந்து மண்டபத்தைவிட்டிறங்கி
பசங்கள்மெத்தபொல்லார் பரிகாசமபண்ணுவார்கள்
பரிகாசஞ்செய்வாரோ பார்வேந்தரப்பொழுது
நாமுமெதிரே நடந்துபோய்காண்போமென்று
ஆனந்தவாழ்மார்பர் ஆனையின்மேலேறிவர
மாயாரதமேறி மன்னவர்கள்தம்முடனே
வேசியர்களாடிவர வேந்தர்கள்புடைசூழ
தப்புமுழங்கிவர தாசிகளாடிவர
மல்லரிகொட்ட மணித்தாளம்முழங்க
மேளவகையானதெல்லாம் விதவிதமாய்த்தான்முழங்க
மாமரத்தின்கீழாக மாயவருய்வந்தமர்ந்தார்
நால்வரும்வந்து நின்று நமஸ்காரம்பண்ணினாரே

பெருமாள் நால்வரையும் வினவுதல்.

வந்துபணிந்தவரை வகையாகச்சென்றெடுத்து
என்காணுந்தம்பியரே இப்பொழுதுவந்தீரோ
திரியோதிரனுடைய சேனைபெருக்கமெல்லாம்
மாளப்பொருதீரோ மாபாவமும்செய்தீரோ
என்னஅரவான் எம்பெருமாள்முகம்நோக்கி

அரவான் சொல்லுவது.

எங்களுக்குதோஷமில்லை எதுவகையாண்டவரே
மாண்டோர்பாவமெல்லாம் மாயவரேவும்மதுகாண்
செத்தவர்பாவமெல்லாம் திருமாலேவும்மதுகாண்
என்னவேமாயவரும் இருதோளும்பூரித்து
ஒன்றுக்குநூறு வுரைப்பார்கள்மக்களென்று
ஆயன்பெருமாளும் ஆலோசனையாகி
பாவங்கழிக்குதற்கு பசுக்கள்கொண்டுவாருமென்றார்
பாதையில்பசுக்கள் மடக்கிவந்தார்மெய்யிடையர்
ஆயிரம்பாற்பசுவை அந்தணற்குதானமிட்டார்

பெருமாள் திரியோதிரனை வினவுதல்.

கட்டுண்டதிரியன்பக்கம் கபடமான மாயவரும்

மூன்றாகவந்து நின்று முகம்பார்த்துயே துரைப்பார்
வாருங்கள் ராசாக்கள் மாப்பிள்ளையார்சொல்லுமென்றார்
இரியோதிரனுரே சீக்கிரமாய்சொல்லுமென்றார்
பரிகாசம்பண்ணவந்தீர் பைங்கொடியைக்கொள்ளவந்தீர்
எழுத்தாளிபண்ணவந்தீர் என்மகளைக்கொள்ளவென்று
வணங்கா முடியோனே மாப்பிள்ளையார்சொல்லுமென்று
இப்போதுசொல்லுமென்றார் இராசர்கள் முன்பாக [ர்

## இரியோதிரன் நாணிச்சொல்லுதல்.

என்ன இரியோதிரனும் எங்கிமனந்தளர்ந்து
மற்றொருவார்த்தைசொன்றால் மதியார்களென்றுசொல்
மாயன்பெருமானே மருமகனைக்காணீரோ [லி
என்தம்பிமகனார்க்கு தாலிமுகூர்த்தம்என்றான்
என்தம்பிமகளுக்கு மணஞ்செய்யுமென்றானே
ஆயன்பெருமானே அபிமருக்குச்செய்யுமென்றான்
மாயனதுகேட்டு வன்னியரைசாட்சிவைத்து

## பெருமாள் அபிமன்னருக்குகூறல்.

தங்கிற்றுவுடையமென்று சபதமுடிந்ததென்று
மன்றாநீவாளபிமா மணமுடித்துபோவதற்கு
சீக்கிரமாய்வாளபிமா சுந்தரியைமாலையிட்டு
முந்தியேவாளபிமா மணமுடிந்துபோகுதுகாண்
வாளபிமாவாருமென்று வாகனமேறுமென்றார்

## அபிமன்னன் ஊர்கோலம் வருவது.

இலக்குணனேறிவந்த யானைகொண்டுவந்தார்கள்
யானையின்மீதேறி யபிமனும்வீற்றிருந்தார்
மாயன்ரதமேறி வாளபிமன்யானையின்மேல்
எக்காளமூத இராஜாக்கள் தன்னுடனே
யானையிலேதேர்ப்புரவி யதன்பின்நடந்துவர
மல்லரிகொட்ட மணிக்காளமும்முழங்க
விருதுமுழங்கிவர வெண்சாமரம்வீசிவர
கடோற்கஜன்நெருந்திசெட்டி கருத்துள்ள நல்லரவான்
இரியோதிரனுடைய இளமன்னர் நூற்றுவரை
தேசத்தரசன்மைத்துனனே இளானவன்னியரை
வீஷ்மர்துரோணர் யிருந்ததோராசாக்கள்
துரோணரசுவத்தாமா செப்பரியமன்னருடன்
வெற்றியிலக்குணனை வேந்தர்நடுவாக
தாமணியைக்கட்டி தறிமாடுபோல்மடக்கி
பின்கட்டுடனே பிணைமாடுபோல்மடக்கி

அபிமன்னன் மாமியாரை வணங்குவது.

சேர்ந்தது துவாரகையில் திருமாலரண்மனையில
வந்திரங்கிவாளபிமன் மாயனதுமாளிகையில்
அந்தப்புறப்புகுந்தார் அபிமருடன் நால்வருமே
மாமியார்லட்சுமிக்கு வாளபிமன்தெண்டனிட்டான்
வந்துபணிந்து மருமகனைச்சென்றெடுத்து
வாயாரவாழ்த்தி மதிமுகத்தைமுகந்துகொண்டு
முறையில்லாதந்தை முதல்வாகுநாதர்
என்முந்தாணிக்குள்ளே முடிஇவளர்ந்தமன்று
அணைத்துமருமகனை அரண்மனையில்கொண்டுசென்று
வயிரமணிமண்டபத்தில் வாளபிமன்னன்வந்து
அரவான்கடோற்கஜனும் அபிமன்னன்பக்கல்நின்றார்
ஆயன்மகளாரும் அபிமன்னன்வரக்கண்டு
வற்றிக்கிடந்த வருள்பெரியகாவேரி
மெத்தப்பெருகி கரைபுரண்டுவந்தாற்போல்

சுந்தரிக்கு தாதி அலங்கரிப்பது.

இரோகங்குளிர்ந்து இருதோளும்பூரித்து
பூரித்திருதோளும் பொன்னுதிரபூஷணங்கள்
ஆலித்துசுந்தரியும் அபிமரைப்பார்க்கவென்று
மஞ்சனச்சாலையிலே மங்கையருமபோய்புகுந்து
இட்டதிருநாமம் ஏழுலகம்தான்பெறவே
கஸ்துரிபொட்டிட்டு கார்குழலுங்கொங்கைகட்டி
கொண்டைக்குப்பூமுடித்து கொம்பனையாள்பொன்பூட்டி.
முத்தாபரணமும் மோகனமாலைகளும்
கொலுசுபதக்கங்களும் கோர்வைமுத்துமாலைகளும்
அஸ்தகடகமும் அரிபுரிவளையல்களும்
முக்குத்திசிந்தாக்கு முன்கையில்பொன்வளையல்
பட்டுடுத்திநல்மருங்குந் பாடகத்தாற்சிலம்பும்
பொன்பூஷணமுடித்து பொற்கொடியாள்சுந்தரியும்

சுந்தரியை தாதிகள் கலியாணவாசலில் அழைத்துவருவது.

தாதிமாரழைத்துவர தகப்பனதுபந்தலிலே
கொழுநர்மார்மூவருக்கும் கொம்பனையாள்தெண்டனிட
அபிமரைப்பார்த்தே அழகுநல்லசுந்தரியும்
அத்தைமகனுற்கு அடிவணங்கிதெண்டனிட்டாள்
இருந்தாளிடப்புறத்தே யீருடலும்வோருடலாய்
ஆயிரங்கன்னியர்கள் ஆலாத்தியேந்திநிற்க

பேரிகைகொட்ட பெருஞ்சங்குநின் றூத
தோழியைத்தானழைத்து சுந்தரியுங்கூறுவாள்
செங்கமலம்தன்னுடனே தோகைசிலதுரைப்பாள்
அப்போதுசெங்கமலம் அடைவுடனே தான்கேட்டு
செங்கமலம்தாதி அரவானண்டைவருவது.
அரவானருகாக அரிவையருமோடிவந்து [ம்
வணங்கியெழுந்திருந்து வார்த்தைசொல்வாள் செங்கமல
மங்கைநல்லாள்சுந்தரி வார்த்தைசொன்னாள்கேளுமே
என்னென்னகாரியங்கள் எனக்கரியசொல்லுமென்றான்
மாப்பிள்ளையிலக்குணனை படல்விரியகொண்டுவந்து
அரசாணிக்காலுடனே அவனையேகட்டிவைத்து
அஞ்சுகுடுமிவிட்டு அழகாய்த்தலைசிறைத்து
நல்லாவின்சாணி நடுத்தலையிலப்பிவைத்து
ஆயிரம்பெருவிளக்கை அவன்தலையிலேத்திவைத்து
காடைவிளக்கெரிய கன்னிநான்பார்த்திருக்க
சபதநிறைவேற்றுமென்ன தார்குழலுந்தெண்டனிட்டா
என்ன அரவான் எழுந்துமிகநகைத்து [ள்
அரவான் இலக்குணனைப் பிடித்துக்கட்டுவது.
என்னவே அரவான் இலக்குணனைகொண்டுவந்து
செஞ்சொல்மொழிநாவிதனை தேடியழைத்துவந்து
அஞ்சுகுடுமிவைத்து அழகாய்த்தலைசிறைத்து
அரசாணிக்காலுடனே அசையாமல்கட்டினான்
ஆவினுடசாணம் அவன்முடிமீதில்வைத்தான்
ஐங்கலநெய்பிடிக்கு மகலமுள்ளபெருவிளக்கை
லக்குணன்முடிமீதி லிறுத்தியரவானும்
ஆயிரந்திரிபோட்டு அழகாகவேற்றிவிட்டான்
நட்டுவர்பட்டுவர்கள் நாடகங்கள்செய்துவர
தாளங்கள்மேளங்கள் தப்பட்டைநாகசரம்
புள்ளாங்குழலூத பெரியடமாதான்முழங்க
துரோணர்கிருபர் சொற்பெரியவீஷ்டுமர்
மூவரைத்தானழைத்து முதலோமம்செய்யுமென்றார்
ஆயிரம்வேதியர்கள் அடைவாகவேள்விசெய்ய
மற்றப்பிராமணர்கள் வரிசைசடங்குசெய்ய
பெருமாள் ஓடிவந்துவிடுவது.
அந்தச்சமயம் அதுபார்த்துமாயவரும்
காவலர்துற்றுவரை கட்டவிழ்க்கவேண்டுமென்று
திரியோதிரன்மனதை சிக்கறுக்கவேணுமென்று

நல்லாவான்சேவகத்தை நாமறியவேணுமென்று
மாயன்பெருமாளு மறைந்தோடிப்போகலுற்றார்
அப்போதுமாயவரும் ஆலோசனைசெய்வார்
ஐவரையுமிட்டுவர ஆலோசனையாக
பெருமாள் பிராமணவேடந்தரிப்பது-
வேதநாராயணரும் வேதியர்போல்வடிவாய்
பஞ்சாங்கத்தைப்பிடித்து பார்ப்பாரவேடமுடன்
ஈர்க்குடைபிடித்து பிதித்ததுகிலுடுத்தி
வனத்தைமிகநோக்கி மாயவரும்போய்நடந்தார்
காடுகடந்து கரியவனங்கடந்து
பஞ்சவர்கள் தானிருக்கும் பாரவனந்தனிலே
மாயன்பெருமாளும் மறையவரைப்போல்வருவார்
கண்டார்திருமாலுங் காவலர்களைவரையும்
ஆர்காணுந்தம்பியர்கள் அடவியில்வீற்றிருப்பவர் டேன்
என்று-வழியுந்தெரியாமல்உங்கள்வனமருப்சவிர் துவிட்
ஆனந்தவாழ்மார்பர் அழைக்கிறதுகேழ்க்கிலையோ
வழிதப்பிவந்தார்போல் மன்னரண்டைவந்துநின்றார்
தாரார்புகழ்வேந்தர் தர்மரெழுந்திருந்தார்
தர்மர் பிராமணரைக்கேட்பது.
ஆர்காணுந்தம்பியரே அடவியில்வந்துவிட்டீர்
மாயன்பெருமாளே மறையவர்போலவந்தீர்
ஐவருந்துரோபதையும் ஐங்கால்வலம்வந்து
பதிங்கால்வலம்வந்து பன்னிருக்கால்தெண்டனிட்டு
ஆயன்பெருமாளே அறிந்ததுகூறுமென்றார்
மாயன்பெருமாளே மர்மமாயிருப்பானேன்
அல்லகாண்தம்பியரே ஆயன்மகள்சுந்தரியை
மாயன்மகள்சுந்தரியை வாளபிமனுக்கென்றபெண்ணை
தென்னமுடிவேந்தன் திரியோதிரப்பெருமான்
தன்மைந்தனிலக்குணாக்கு மாலையிடப்போறாளும்
துவாரகைக்குப்போனால் துரைமன்னரங்கிருப்பார்
எனக்கு-அமுதுபடிகொடுப்பார் ஆனந்தவாழ்மார்பர்
ஆகையினால்போகவுந்தன் அடவியில்வந்துவிட்டேன்
எனக்குவழியுந்தெரியவில்லைமன்னவனே என்னசெய்வேன்
துவாரகைக்குப்போரவழி சொல்லியனுப்புமென்றார்
ஐவருமப்போது ஆலோசனைசெய்து
மாயவரேதப்பாது மறையவர்போல்வந்தீர்
ஆயன்பெருமானை அடிபணிந்துயேதலைப்பார்

காரியங்கள்சொல்லி கபியமாலிப்போது
அதையெமக்குச்சொல்லி அறிக்கையிடவந்தீரே
வந்தகருமம் எங்களுக்குச்சொல்லுமென்றார்
ஐவருந்தெண்டனிட்டு அடிபணிந்துகேழ்க்கலுற்றார்
மாயன்பெருமாளும் மர்மமாயேதுரைப்பார்
தேசத்தழகன் திரியோதிரப்பெருமான்
தன்மைந்தனிலக்குணற்கு மணஞ்செய்யவேணுமென்று
பெண்தேடவேணுமென்று பிரியத்துடனப்பொழுது
மாமன்சகுனியாரும் வரவிட்டாரென்னருகே
மாமன்சகுனியாரை வந்துவணங்கிநின்று
திரியோதிரன்மகனார் செல்வனிலக்குணர்க்கு
பெண்தரவேணும் பெருமாளேயெனமொழிந்து
தாக்கறுப்பேன்மூக்கறுப்பேன் நாணங்குலைத்திடுவேன
வார்த்தைகள்சொல்வதற்கு வாயைகிழித்திடுவேன்
என்னசகுனியரு மெழுந்துமிகவணங்கி
நான்வந்தவொருகாரியத்தை மாயவரேகேளுமென்றான்
பணத்தின்பெருமையினால் பாவிதிரியோதிரன்
பெண்கேட்டுவாருமென்றான் பெருமாளேயிங்குவந்தே
மன்னன்திரியோதிரனார் மதத்தையடக்குகைக்கு [ன்
பாவிதிரியோதிரனார் பணமெல்லாம்வாங்குகைக்கு [ர்
பெண்கொடுக்கச்சம்மதிதான் பெருமாளெனமொழிந்தா
நல்லதுபெண்தருவோம் அவர்மனதில்சந்தோஷந்தா
திரியோதிரனரைச் சீக்கிரமாய்வாருமென்றான் [ன்
மாமன்சகுனியரு மறுத்துப்போயேதுரைப்பார்
பெண்கொடுக்கச்சம்மதித்தார்பெருமாளெனமொழிந்தா
பரியம்பொருந்துகைக்கு பாரளந்தான்தன்பதிக்கு [ர்
திரியோதிரனுக்குச் சீக்கிரமாயேதுரைப்பான்
தேசத்தழகன் திரியோதிரனாரும்
யானைத்திரளுடனே அப்பொழுதேவந்துவிட்டான்
பரியம்பிடியுமென்று பாவியவனுரைத்தான்
அரையன்திரியோதிரன் அப்போமனமகிழ்ந்து
ஏழாநாள்வாருமென்றார் இன்பமுடனுரைத்தான்
ஆளப்பிறந்த அபிமர்பெருமாளுக்கு
கோதைநல்லாள்சுந்தரியும் தூதோலைதானுப்பி
ஆளப்பிறந்தவா கறிக்கையிடுவித்து
ஆனைகுந்திதன்னைவிட்டு அபிமர்பெருமாளும்
தாயுடனேசொல்லாமல் தனிவழியேவந்துவிட்டு

ஆற்றில்விழுந்து முழுகிக்கரையேறி
வல்லரக்கன்தன்வனத்தில் வாளபிமன் தூங்கையிலே
வல்லரக்கன்விழுங்கவந்தான்வாளால்தறித்துவிட்டான்
கடோற்கஜன்தன்னுடனே காலையுறவாடி
கமலகன்னியர்வீட்டில் கலந்தேயமுதுகொண்டு
அங்கேவிடைபெற்று அபிமர்கடோற்கஜனும்
அரவான்வனத்திலே அங்கேயுறவாடி
நாககன்னிதன்வீட்டில் நல்லவிருந்தமுதுகொண்டு
அங்கேவிடைபெற்று அபிமற்கடோற்கஜனும்
வீசிநடந்தார் வீரகங்கைதன்னூடு
தொந்திசெட்டிதன்னுடனே அறைகளுறவாடி
வீரகங்காள்தன்வனத்தில் விருந்தமுதுதானுண்டு
அங்கேவிடைபெற்று அவ்வனத்திலேதானும்வந்து
ஔவைவனத்தில்வந்து அரசர்விருந்துண்டு
அழகியசுந்தரிக்கு ஔவையரைத்தூதனுப்பி
ஒருமாமரத்தருகே உத்தமர்கள்வந்துநின்று
திரியோதிரனுடைய சேனைப்பெருக்கமெல்லாம்
அரவான்போய்சோதித்து அவன்வந்தபிற்பாடு
திரியோதிரனும் சேனைபெருக்கமெல்லாம்
மணக்கோலந்தான்வரவே மன்னன்பயணமிட்டான்
அந்தசமயத்தில் அரவான்கடோற்கஜனும் [து
தொந்திசெட்டிதன்னுடனே துரைமன்னர்போய்புகுந்
மன்னன்திரியோதிரன் மகாசேனையுள்ளதெல்லாம்
மாளப்பொருதி மடிந்தார்கள்சேனையெல்லாம்
ஆயிரங்கோடி அரசமக்கள்பட்டார்கள்
எழாயிரங்கோடி இராசாக்கள்பட்டார்கள்
பதினாயிரங்கோடி படைமன்னர்பட்டார்கள்
அப்போதரசரெல்லாம் அலைந்துவழிதேடி
ஒக்கைமரத்தருகே ஓடிவரும்போது
அங்கேயபிமர் அதட்டிக்கொடிபிடுங்கி
தாமணியைச்சேர்த்து தரியாடுபோலடக்கி
திரியோதிரனுடனே தின்மன்னர்நூற்றுவரை
மற்றுமுள்ளமன்னவரை வாளபிமன்கட்டிவைத்து
என்னையுங்கட்டத் துணிந்தார்களப்பொழுது
சீக்கிரமாயோடிவந்து சேனையுடனாக
வந்துவினவினேன்காண் வாளபிமர்தன்னுடனே
மன்னர்சபையிலே வாளபிமர்தன்னுடனே

பெண்ணெவர்க்கென்று பிரிவித்துக்கூறினேனே
திரியோதிரனாரைச் சீக்கிரமாய்சொல்லுமென்றேன்
வாளபிமற்கென்று வசனமவனுரைத்தான்
அப்படியேயாகுதென்று அரண்மனையில்போய்புகுந்து
ஆளப்பிறந்த அரவானெழுந்திருந்து
காவணக்காலுடனே கட்டினான்மன்னவனை
இலக்குணனைக்கொண்டுவந்து இராசாக்கள்முன்பாக
ஐந்தாகுடுமிவைத்து அமங்கலத்தில்தலைசிறைத்து
சாணியைவைத்து தலையில்விளக்கேற்றி
வாளபிமன்தன்னுடனே மங்கைநல்லாள்சுந்தரியை
மனையிலேவுட்கார்ந்து மணஞ்செய்யும்வேளையிலே
தாமிஷங்கள்பண்ணாதே தருமர்பெருமானே
ஐவருடனாக அலங்காரத்துரோபதையும்
என்தங்கைதுரோபதையும் தார்வேந்தரைவருமாய்
சீக்கிரமாய்வாருமென்று ஸ்ரீராமர்தானழைத்தார்
அப்போதுதருமர் அடைவுடனேதான்கேட்டு
மாயன்பெருமானே வார்த்தையொன்றுகேளுமையா
பாவிதிரியோதிரன் பார்த்தானேயாமாகில்
மறித்துவைப்போமென்று வழக்குரைப்பான்தப்பாது
எப்படிநாம்வருவோம் எங்கள்பெருமானே
தாமமுடியோனே தர்மரே நீர்கேளும்
வேதியரைப்போலாக வேடங்கள்மாற்றுகிறேன்
காசிப்பிராமணர்போல் கனவேடம்போட்டாரே
ஐவர்க்குவேடம் மாற்றினார்மாயவரும்
மாதுதுரோபதையும் வடிவெடுத்தாளப்படியே
அங்கிருந்துமாயவரும் அழைத்துவருகலுற்றார்
காடுகடந்து கரியவனங்கடந்து
நாடுகடந்து நகரும்பலகடந்து
துவாரகாபுரியருகே வந்தாரேமன்னவர்கள்
அங்கொருசாவடியில் ஐவரைத்தானிருத்தி
அரவானையிங்கே அனுப்புகிறேனென்றுசொல்லி
சீக்கிரமாய்வந்து திருமாளிகையிலுட்புகுந்தார்
அரசாணிமுன்பாக வந்தாரே ஆயனுமே
கட்டுண்டமன்னவனைக் காவலரைத்தான்பார்த்து
கண்டாரேலக்குணனை கையால்வாய்மூடினார்
ஐயோமகனே ஆபத்துவந்ததென்ன
காரணமேயோவுங்களுக்கு கட்டுண்டிருப்பானேன்

தலைமேலேசாணிவைத்து சாஞ்சியிருப்பானேன்
பணமும்பறிகொடுத்து பரதேசியானீர்களோ
என்றுசொல்லிஎம்பெருமா ளில்லாவிசாரமிட்டார்
குருக்கள்மார்தங்களண்டை கோபாலர்வந்துநின்றார்
இந்தயவதிகளேனை யாவந்துதென்றார்
தலையிலெழுத்துப்படி தப்புமோமாயவரே
கலியாணமென்றுசொல்லி கண்குளிரபார்க்கவந்தோம்
அனியாயமாக அகப்பட்டுகொண்டோமே
இனியென்னசெய்வது எங்கள்பெருமாளே
ஆனபடிசெய்யுமென்று ஏந்தகுருக்களுமே
என்றுசொல்லிமாயவரும் இருக்கட்டுமென்றுசொன்னார்
மாயன்பெருமாளும் மகாதேவரேதுசெய்வார்
கட்டுண்டமன்னவரை கட்டவிழ்க்கவேணுமென்று
நல்லரவான்சேவகத்தை நாமறியவேண்டுமென்று
அசைந்தார்போலாக ஆயருந்தான்மறைந்தார்
மாயனரண்பனையில் வாளபிமன்சுந்தரியும்
இருவருமொன்றாக யிருந்தார்களப்பொழுது
உத்தமர்கள்வேதியர்கள் வேதங்களோதிநிற்க
ஆளப்பிறந்த அரவான்முகம்நோக்கி
மாயன்பெருமாளை வரவழைத்துவாருமென்றான்
அரவானுமாயவரை அதட்டியேதானழைத்தான்
சுற்றித்திரும்பி திசைதோறும்பார்க்கலுற்றான்
பாரளந்தமாயவரை பந்தலிலேகாணுமல்
எங்கெங்குந்தேடி இராசமுடிவேந்தன்
வேந்தர்பெருமாளும் வெளியேபுறப்பட்டார்
அஞ்சனத்திருஷ்டியிலே அரவானுப்பார்க்கலுற்றான்
மண்டபத்தைவிட்டு வருகிறார்மாயவரும்
கண்டானரவானுங் கடுகிப்பிடிக்கவென்று
மாயன்பெருமாளும் மச்சவடிவுகொண்டு
மச்சவடிவுகொண்டு மடுவிலேபோய்மறைந்தார்
அரவானும்விச்சுளியாய் ஆயனைப்பாயலுற்றான்
மாயன்பெருமாளு மறைவாகவோடிவந்து
அரவானெதிராக ஆண்சிங்கம்போல்வாரார்
சிங்கவடிவாக சீறிவருகிறதை
கண்டனரவான் கடுகெனவேதான்பார்த்து
சிம்புள்ளுருவடிவாக சிவுக்கென்றுமேற்குதித்தான்
அப்போதுமாயவரும் அவனுக்குதப்பிவந்து

அப்போது தப்பிவந்து ஆயருமேதுசெய்வார்
மயனுமப்போது மான்வடிவாயோடலுற்றார்
பார்த்தானே நல்லரவான் பதுங்கியெழுந்திருந்து
சிங்கவடிவாகத் துரத்திப்பிடிக்கலுற்றான்
அப்போது மாயவரும் அரவானைத்தப்பிவந்து
அப்போது தப்பிவந்து ஆயருமேதுசெய்தார்
ஆயன்பெருமாளும் ஆமைவடிவெடுத்து
புதருஞ்செடியருகே போய்புகுந்தார்மாயவரும்
அஞ்சனத்திருஷ்டியிலே அறிந்தானேமாயவரை
ஆனந்தவாழ்மார்பன் அரவான்குறவனைப்போல்
சில்லாக்கோலைப்பிடித்து சிக்கெனவேகுத்தலுற்றான்
அப்போது மாயவரும் அரவானெதிரில்வந்து
காட்டிலொருபன்றியைப்போல் கடுகியேயோடலுற்றார்
பார்த்தானரவான் பன்றியதுபோவதை
வேட்டைநாய்போலரவான் பீஜத்தைப்போய்ப்பிடித்தான்
ஆயன்பெருமாளை அரவானும்பின்னிழுக்க
ஆயன்பெருமாளுக்கு ஆபத்துவாச்சுதல்லோ
தத்தித்தடுமாறி தப்பித்துமாயவரும்
கொக்காய்வடிவுகொண்டு கோபாலரோடலுற்றார்
அஞ்சனத்திருஷ்டியிலே அறிந்தானேமாயவரை
சீக்கிரமாய்நல்லரவான் டேகையைப்போல்வடிவுகொ
கீழேவிழவணைந்து கெட்டியாய்த்தான்பிடித்தான் [ண்டு
வேதநாராயணரும் மெத்தெனவேதப்பிவந்து
எலிபோலேவடிவுகொண்டு எலிவளையில்தானுழைந்தார்
அரவானதுகண்டு எலிவளையில்தானுழைந்தான்
பூனைவடிவாக பதுங்கியிருக்கலுற்றான்
பெருமாளுமங்கிருந்து போனானோவையனென்று
எட்டிப்பார்க்கலுற்றார் எலிபோலேமாயவனார்
ஒளித்திருந்து நல்லரவான்மென்னியைப்போய்ப்பிடித்தா
உறுதியாய்ப்பிடித்திடவே உள்ளந்துடுங்கிடவே [ன்

பெருமாள் சொல்வது.

மண்டைபிதுங்கிடவே மேகவர்ணர்தான்பார்த்து
மெச்சினேனையருமகனே விடுவிடுவெனவுரைத்தார்
விட்டால்வருவீரோ விண்ணளந்தமாயவரே
வருகிறேனென்றுசொல்லி மாயவனார்போய்மறைந்தார்
பார்த்தானே நல்லரவான் பகவானைக்காணாமல்
திகைத்தானே நல்லரவான் திருமாலைக்காணாமல்

அப்போதுமாயவரும் ஆயனிடையனைப்போல்
எம்பெருமாளப்போது இடையனைப்போலவந்தார்
கண்டாளே நல்லரவான் கடுகெனவேவோடிவந்து
பாளையக்காரனைப்போல் படபடவென்றோடிவந்து

அரவான் சொல்லுவது.

இடையனைக்கட்டிய பிடித்தந்தநல்லரவான்
அரண்மனைவாசலுக்கு ஆட்டுக்கிடாவேணுமென்று
பாலுந்தயிரும் பதினெட்டுவேண்டுமென்றார்
கொண்டுவாடாயிடையா நீ கொப்பெனவேயென்றுசொ
ல்லிண்ணுந்தான்போட்டு அடித்தானே நல்லரவான்[ல்லி
பாராங்கல்தானெடுத்து பாரளந்தார்மீதில்வைத்தார்
தலையெடுக்கவொட்டாமல் தார்வேந்தன் அடிக்கலுற்று
அறிந்தாரே மாயவனார் அரவான்சவுரியத்தை [ன்
மெச்சினேன் நல்லரவானே விடுவிடுமென்றுரைத்தார்
இனிவிடும்நல்லரவானே என்றுரேமாயவனார்
என்னலுமேநல்லரவான் இழுக்கலுற்றனப்பொழுது
மாயவரைப்பற்றி யிழுக்கலுற்றனப்பொழுது

பெருமான் சொல்வது.

அப்போதுமாயவரும் அரவானுக்கேதுரைப்பார்
மனிதனைக்கொன்றவர் மணஞ்செய்யக்கூடாது
பாவமிருந்ததுகாண் பந்தலிலேயிப்பொழுது
காசியிலேபோய்முழுகிக் கலியாணஞ்செய்யவேண்டும்
அப்பாதகந்திரு மதுவுமேதண்ணீரிலே
காசிப்பிராமணரை கலியாணப்பந்தலிலே
இட்டுவந்துவிட்டால் என்மகளைதருவேனப்பா
அல்லாதுபெண்கொடுக்கேன் அரசர்கள்தானறிய

அரவான் சொல்வது.

என்னஅரவானும் இராமர்முகம்நோக்கி
காசிபிராமணர்கள் வேண்டுமென்றீர்காவலரே
இப்போதுவேதியர்கள் எங்கிருப்பார்சொல்லுமென்று
மாயன்பெருமாளும் மறைவாகவேதுசெய்வார் [ன்
காசிக்குப்போய்வருவார் வந்திருப்பார்வேண்டியபேர்
வழியிலேஓடத்தில் வந்திருப்பார்வேண்டியபேர்

அரவான் காசிபிராமணரைக்கண்டு பிடிப்பது.

அப்போதுநல்லரவானுக்கரித்துபற்கடித்து
பந்தலைவிட்டு பார்மன்னன்வெளியேவந்து
எங்கெங்குந்தேடி இராசமுடிவேந்தன்

அலைந்தெங்குந்தேடிவாரான் ஆணழகபுத்திரனும்
ஊருக்குமேற்கே ஒருமண்டபந்தானிருக்கும்
மண்டபமொன்றிருக்கும் மாயனருளாலே
பஞ்சவர்களைவரும் பார்ப்பாரைப்போலாக
காசிபிராமணர்போல் காவலர்களங்கிருந்தார்
கண்டானரவானும் கடுகெனவேயோடிவந்து
மண்டபத்தைநோக்கி வரலுற்றான்மன்னவனும்

காசிப்பிராமணரை அரவான் கேட்பது.

காசிப்பிராமணரைக் கண்டானரவானும்
மண்டபத்தைச்சேர்ந்து வணங்கியெழுந்திருந்து
ஐவரையுந்தெண்டனிட்டு அரவானுங்கூறலுற்றான்
யார்காணும்ஐயரே அரியபிராமணரே
எங்கிருந்திங்குவந்தீர் எனக்கறியச்சொல்லுமென்றான்

காசிப்பிராமணர் சொல்வது.

மாயப்பிராமணர்கள் வார்த்தையங்கேதுரைப்பார்
காசிக்குநாங்கள்போய் வந்தோங்காண்காவலரே
எங்கிருந்திங்குவந்தாய் எனக்கரியச்சொல்லுமென்றார்
ஆளப்பிறந்த அரவானுங்கூறுவான்

அரவான் கூறுவது.

ஐவரிடபுத்திரன்காண் அர்ச்சுனனார்என்தகப்பன்
என்பேர்அரவான்காண் என்னாச்சிதுரோபதைகாண்
மாற்றான்பொருட்டால் வனம்போனார்பாண்டவர்கள்
ஆயன்மகள்சுந்தரியை அபிமருடதேவியனை
மாற்றான்தன்மைந்தனுக்கு மணஞ்செய்யவந்தார்கள்
அந்தவிசேடம் அடியேன்கள் தான்தெரிந்தோம்
மாயன்மகள்சுந்தரியை வாளபிமருக்கு
கலியாணம்செய்யவந்தோம் கரியமால்புத்திரியை
காசிபிராமணர்களே கரியமால்வேண்டுமென்றார்
ஆகையினால்வந்தேன் ஐயரேவாருமென்றான்
ஐவரையுங்கண்டாற்போ லாச்சுதுதானிப்பொழுது
உருமையாவென்று வணங்கியெழுந்திருந்தான்
ஆனாற்கேள்தம்பியரே அப்படியேநாம்வருவோம்
பாவங்கள்கண்டாலே பந்தலிலேநாங்களிரோம்
பாவங்களுண்டானால் பரிகரித்தால்நாம்வருவோம்
இப்படிக்குச்சம்மதித்தால் இப்போதேநாம்வருவோம்
ஆளப்பிறந்த அரவானுங்கூறுவான்
அப்படியேயாகுதென்று அரவானழைத்துவந்தான்

காசிப்பிராமணர் வருவது.

மாயனரண்மனையில் மாணிக்கப்பந்தலிலே
ஐவரும்மாச்சியரும் அரியபிராமணர்போல்
கண்டாரேமாயவரும் கடுகியெழுந்திருந்து
காசிபிராமணற்கு கைதொழுதார்மாயவரும்
தரணியளந்தவற்கு தருமரும்தெண்டனிட்டார்
பார்த்தாரேதர்மாந்தப் பந்தல்திசைதோறும்

காசிப்பிராமணராகிய பாண்டவர்வந்து
பெருமாளைக் கேட்பது.

மன்னவரேஉங்களிலே மணஞ்செய்வதிப்படியோ
கட்டிவைத்திவ்வுலகில் கலியாணஞ்செயக்காரணமேபோ
மனிதரைக்கட்டி மணஞ்செய்யக்காரணமோ
அரசாணிக்காலண்டை ஆர்காண்சிறுமனிதன்
தலையைமழுங்கடித்தீர் சாணிதலைமீதில்வைத்தீர்
அவன்-ஆருடையபிள்ளை அரியவுரையுமென்றார்

பெருமாள் சொல்லுவது.

மாயன்பெருமாளு மறையவற்குயேதுசொல்வார்
காவணகாலண்டை கட்டுண்டானென்றீரே
திரியோதிரன்மகன்காண் செல்வனிலக்குணனும்
திரியோதிரனார்காணுந் தெரியவுரையுமென்றார்
இதோபந்தலிலேகட்டுண்ட பாரமுடியன்னவனும்
திரியோதிரப்பெருமான் சீமைக்கதிகாரன்
இந்தமன்னவாகளெல்லாம் மகாராசன்தம்பியர்கள்
இவருடையமைந்த னிலக்குணர்காணுமிவன்

காசிப்பிராமணர் சொல்வது.

என்னப்பிராமணரும் இராமர்முகம்நோக்கி
மணையில்உட்கார்ந்தமாயவர் வேதிற்கேதுரைப்பார்

பெருமாள் சொல்வது.

பாண்டவரைவருண்டு பாருலகோர்தாமறிய
தருமரென்றும்வீமனென்றும் தாஷ்டிகவிசையனென்று
ஐவர்நடுவில் அர்ச்சுனனார்புத்திரன்காண் [ம்
அர்ச்சுனனார்புத்திரர் அபிமரிவர்காணும்
மணையின்மேலுட்கார்ந்த வாளபிமன்தான்காணும்
மாயப்பிராமணருக்கு மாயவர்க்குயேதுரைப்பார்
திரியோதிரனார்க்கும் திரள்வீரபஞ்சவர்க்கும்
உறன்முறைதத்துவங்க ளுண்டோ தீர்கூறுமென்றார்

பெருமாள் சொல்வது.

மறையவர்கேட்க மாயவருமேதுரைப்பார்
திரியோதிரனுக்கும் திரள்வீரர்பஞ்சவர்க்கும்
உறன்முறை தந்துவங்களுண்டோ
மறையவர்கேட்கவே மாயவருமேதுரைப்பார்
திரியோதிரனுற்கும் திரள்வீரர்பஞ்சவர்க்கும்
பங்காளிதத்துவத்தால் பகையுண்டுபோலகற்கு
தம்பிமகன்தேவியரை தமையன்மகன் கொள்ளவந்தான்
ஆசையினால்கட்டிவைத்தார் அரியபிராமணரே

காசிப்பிராமணர் கூறுவது.

மாயப்பிராமணரும் மறுவார்த்தையேதுரைப்பார்
பஞ்சவர்களிங்கில்லையே பாரளந்தமாயவரே
இட்டுநீர்வார்க்கவும் இங்கில்லைபஞ்சவர்கள்
பெரியப்பாரல்லவோ பெருக்கமுடன்செய்யவேண்டும்
தகப்பன்மாரில்லாமல் தரிப்பாரோமங்கிலியம்
தம்பிமனதறிய தான்மணஞ்செய்வாரோ
பாவமிதுபாவம் பந்தலிலேநாங்களிரோம்
அறியாமல்வந்துவிட்டோம் அதிகாரப்பந்தலிலே
ஆரடாபயலே அழைத்துவந்துயெங்களை நீ
தோஷமிதுதோஷம் சொல்லாமலிட்டுவந்தாய் [ன்
இங்கிருக்கப்போகாதென்று எழுந்திருந்தார்வேதியர்க

பெருமாள் சொல்வது.

அப்போதுமாயவரும் அரவானுடனேதுரைப்பார்
வேதியர்போக்கால் விசையவமகனுருக்கு
பெண்கொடுப்பதில்லையென்று பெருமாளுங்கூறலுற்றார்

கடோற்கஜன் சொல்லுவது.

அப்போதுகடோற்கஜனும் அரவான்முகம்நோக்கி
தம்பியரேகேளாய்நீ சமயத்துக்கேற்றபடி
ஆயனார்சொற்படிக்கு அரவானெழுந்திருந்து
ஆனந்தவாழ்மார்பன் ஆவலுடனெழுந்திருந்து
மாயப்பிராமணரை வணங்கியெழுந்திருந்து
வேதியரேயுங்கள் மனதுபடிசெய்கிறேன் [ன்
மறையவரே நீங்களிப்போ மணமுடிக்கவேணுமென்று

காசிப்பிராமணர் சொல்வது.

வேதப்பிராமணரும் வேதியருங்கூறுவார்
பந்தலிலேகட்டிவைத்த பாரமுடிமன்னவனை
கட்டவிழ்த்துவிட்டு கலியாணஞ்செய்யுமென்றார்

காலோடேகட்டிவைத்த காளையிலக்குணனை
கட்டவிழ்த்துவிட்டு கடுகழுக்காட்டி [ரூர்
ஆனபொன்பணிதியிட்டு அழைத்துவந்துவையுமென்
அப்படியாகுதென்று அரவானுமோடிவந்து
திரியோதிரனுடனே திரன்மன்னர் நூற்றுவரை

## அரவான் திரியோதிரன் முதலானவரைக் கட்டவிழ்த்து விடுதல்.

கட்டையவிழ்த்துவிட்டு கருத்துள்ள நல்லரவான்
மாற்றானிலக்குணனை வரிந்தகட்டை தானவிழ்த்து
விளக்கையெடுத்து வேந்தனைத்தானெழுப்பி
தாதியரைத்தானழைத்து ஜலக்கங்கள்வாருமென்றார்
பொன்பூட்டிபட்டுடுத்தி பூமான்லக்குணனை
ஆனந்தவாழ்மார்பன் அரவானதுபார்த்து
தம்பிலக்குணனே சதிராயிருமென்றார்
காசிப்பிராமணரும் கலியாணப்பந்தலிலே
மாயனருகாக மறையவருந்தானிருந்தார்
தென்னமுடிவேந்தன் திரியோதிரன்மனைதில்
காசிப்பிராமணர்கள் கட்டவிழ்த்தபுண்ணியத்தால்

## ஊர்வலம் வருவது.

திரியோதிரனும் திரன்தம்பி நூற்றுவரும்
மாமன்சகுனியும் மைத்துனன்தெசத்தரசன்
காசிப்பிராமணற்கு கைகுவித்துதெண்டனிட்டார்
மற்றுமுள்ளமன்னவரும் வணங்கியெழுந்திருந்து
துரோணர்கிருபர் சொல்பெரியவீரரும்
சதாஸ்துஎன்றுரைத்து ஆசீர்வாதம்புகன்றார்
மாயன்மகளை மணஞ்செய்யுமென்றுரைத்தார்
பேரிகைகொட்ட பெருஞ்சங்குநின்றூத
ஒற்றைச்சங்கூத ஒலிமணிகள்பணிமாற
மல்லரிகொட்ட மணித்தாளந்தான்முழங்க
வேதங்களோதிவர வேதியர்கள்ளோடிவர
தாதைகளுதவே சார்வேந்தர்பாடிவர
வெற்றிமுரசறைய வேந்தர்களோடிவர
தப்பட்டைகொட்ட தாரைகளூதிவர
கட்டுவர்கள்நட்டுவர்கள் மணித்தாளங்கொட்டிவர
தத்தோந்தித்தோமென்று தாளங்கள்போட்டுவர
மத்தளங்கொட்டிவர மணிமுரசுஊதிவர
அம்பிகுழவி அரசாணிமுன்பாக

சாலுங்கறகமும் சந்திரர்முன்பாக
மங்கிலியப்பெண்கள் வந்துமுளைதெளிக்க
மேளவகையானதெல்லாம் விதவிதமாய்த்தான்முழங்க
மங்கிலியந்தோரணமும் மனப்பாக்குவெற்றிலையும்
மங்கிலியந்தொட்டு மணம்வந்துவாழ்த்தினர்
திரியோதிரனுடனே தின்தம்பிமார்ற்றுவரும்
மாயப்பிராமணர்களைவருந்தி திரியோதிரனுதிகளும்

மங்கிலியம் தொடுவது.

மாயப்பிராமணர்கள் மன்னமார்களனைவர்களுங்
மாதுதுரோபதையும் மங்கிலியந்தொட்டபின்பு
மாயன்பெருமாளும் மங்கிலியந்தொட்டபின்பு
வேதபிராமணனும் விண்ணவருஞ்சாட்சியென்று
மங்கிலியந்தானெடுத்து வாளபிமன்னகைகொடுத்தார்

அபிமன்னன் சுந்தரிக்கு மாலையிடுவது

மாயவரைதெண்டனிட்டு மங்கிலியந்தான்தரித்தான்
சூரியனைத்தெண்டனிட்டு மங்கிலியந்தான்தரித்தான்
ஆரகாரவென்று அழுத்தினன்மங்கிலியம்
மும்மூர்த்திகளைத்தானினைந்து மூன்றுமுடிபோட்டா
சுந்தரிக்குவிபூதி தரித்தானபிமனும் [னே
மாயன்பெருமாளும் மகிழ்ந்துமேயேதுரைப்பார்
சுரும்புகுழலாளை தோகைமயில்சுந்தரியை
தோகைமயிலாளை சுந்தரியையுந்தனுக்கு
தந்தோமுனக்குமப்பா தனஞ்செயனர்புத்திரனே
இந்தாரும்தம்பியென்று இராமரும் நீர்வார்த்தார்

பெருமாள் கடோற்கஜனுக்குச் சொல்வது.

கரியப்பெருமாளும் கடோற்கஜனைத்தானழைத்து
தகப்பன்மாரிங்கிலையோ தார்வேந்தருங்களுக்கு
எழுப்பியழைத்துவந்து எலாலபிமருக்கு
இட்டு நீர்வார்ப்பீரென்று இராமருங்கூறுவார்

கடோற்கஜன் கூறுவது.

காளைக்கடோற்கஜனும் கடுகியெழுந்திருந்து
திரியோதிரனருகே சேரவந்துயேதுரைப்பான்
பெரியதனத்தில் பெரியப்பாரல்லவோ
ஆனப்பிறந்த அபிமன்னபெருமானுக்கு
இட்டு நீர்வாருமையா வெங்கள்பெருமானே
எழுந்திருந்துவாருமையா வெங்கள்பெருமானே
தேசத்தழகன் திரியோதிரனும்

மெள்ளவெழுந்திருந்து மேகமலைபோலே
மாற்றானபிமன்னருக்கு மணமிடுவோமென்றுசொல்லி
நின்றுநடுங்கியே நெடுமூச்செறிந்து நின்றான்

திரியோதிரனைக் கடோற்கஜன் குத்துவது.

கண்டான்கடோற்கஜனும் கண்கள்மிகச்சிவக்க
ஏண்டாபெரியப்பா வெறித்தாய்பெருமூச்சு
மூடுக்கிவிட்ட ஆறதுபோல் மூறடாகநிற்கின்றாய்
மூழங்கையைநோக்கி இடித்தானடுமுதுகில்
கடுக்கென்றுதான்வளைந்து காளையபிமன்கையில்
இரங்கியே நீர்வார்த்தானே வாளபிமருக்கு
மறையோரெழுந்திருந்து வாழ்த்தியேசேஷையிட்டார்
வீஷ்மர் துரோணர் வில்விதுரர்தன்னுடனே
இருந்தசபையோரும் திகைத்தாற்போல்தானிருந்தார்
திரியோதிரனும் திகைத்தாற்போல்தானிருந்தார்
காளைகடோற்கஜனும் கனகோபந்தானாகி
பின்கையைநோக்கி பிடரியிலேமோதலுற்றான்
சேஷையிட்டுமீண்டுவந்தான் திரியோதிரனும்
அபிமருஞ்சுந்தரியும் அரசாணிசுத்திவந்தார
சுந்தரியைவாளபிமன் சுண்டுவிரல்தான்பிடித்து
அபிமருஞ்சுந்தரியும் அரசாணிசுத்திவந்தார்
அருந்ததிபார்த்து அனைவோரும்மனமகிழ்ந்து
மன்மதனும்ரதியும்போல் வாழ்மனைவீற்றிருந்தார்
இராமர்காணென்பாரும் இந்திரன்காணென்பாரும்
சந்திரர்கள்சூரியர்கள் தம்பிமகனென்பாரும்
மங்கைநல்லாள்சுந்தரிக்கு மைத்துனன்காணென்பாரும்
மாயன்மருமகன்காண் வாள்விசையன்தன்மகன்காண்
அபிமருக்குஞ்சுந்தரிக்கும் அழகியசீர்பந்தலிலே
கலியாணம்வாழ்த்தியே காவலர்கள்கொண்டாட [அ
பெண்ணும்பிறந்தவர்கள் பெருமைசொல்லிக்கேட்டிருந்
அரவாணெழுந்திருந்து அழகுமண்டபந்தனிலே
மணப்பாக்குவெற்றிலையும் மறையவர்க்குவழங்கி
மன்னவர்கட்கெல்லாம் வரிசையடிவழங்கி
சந்தனம்பூசியே தார்வேந்தரெல்லோருக்கு
பாக்குகள்வெற்றிலையும் பலபேர்க்குதான்வழங்கி

பெருமாள் காமதேனுவை யழைப்பித்தது.

கலியாணம்பார்க்கவந்த சுபமான மன்னவற்கு
போசனங்களிட்டு பூரிக்கவேணுமென்ன

மாயன்பெருமாளும் மனதிலேதானினைந்து
காமதேனுவென்னும் கனமானபசுதன்னை
வருகவருகவென்று வரவழைத்தார்மாயவரும்

காமதேனுவருவது.

வந்ததேகாமதேனு மாயவரைத்தெண்டனிட்டு
என்னையழைத்தபணி ஏது கருமமென்று
மாயன்பெருமாளும் மறுவார்த்தைசொல்லலுற்றார்
திக்குதிசைபோற்றும் திரியோதிரன்சேனைக்கும்
மற்றுமுள்ளராசாக்கள் மன்னவர்கடங்களுக்கும்
யானைகுதிரைகளும் ஆள்பெருஞ்சேவகர்க்கும்
போசனமும்நல்ல பொறிக்கறியும்பச்சடியும்
பருப்பும்புளிக்கறியும் பாயசமும்பசுநெய்யும்
அறுபத்துநான்குவகை யதிரசமும்முப்பழமும்
கற்கண்டுசர்க்கரையும் காட்டுப்பலாப்பழமும்
வாழைப்பழமுடனே மாங்கனியுந்தேங்கனியும்
பாலுந்தயிருடனே பலவிதமாயுள்ளதெல்லாம்
பந்திவைத்துஇத்தனையும் பகுந்துவிடச்சொன்னாரே

காமதேனுவிருந்திடுவது.

அந்தமொழிகேட்டு அன்புடனே காமதேனு
தேசமன்னரத்தனைக்கு வாசலிலேபந்திவைத்து
சொன்னமொழியிருந்து கொடுத்துவரவிட்டதுகாண்
பாலாலும்நெய்யாலும் பந்தலிலேதான்வழங்கி
பாயசங்கள்தாமருந்தி புறப்பட்டார்தார்வேந்தர்
யானைகுதிரையுடன் நாள்பேருங்கூட்டமுடன்
அனந்தஎருதுகள் நாலுலட்சம்மைந்துலட்சம்
அந்தந்தகால்நடைக்கு வேணுமென்றதீனியெல்லாம்
காமதேனுதான்கொடுத்து கடக்கப்போய்நின்றதுகாண்
மாயன்பெருமாளும் வரிசையாய்தான்பார்த்து
சந்தோஷபட்டு தலையசைந்தார்மாயவரும்
காமதேனுதனைப்பார்த்து கரியமாலேதுரைப்பார்
நாளையொருபொழுது நானழைக்கவாருமென்றார்

திரியோதிரன், அரசர்கள் மகிழுவதும்
புகழுவதும் சொல்வதும.

அந்தயிரவில் அரசமன்னராசாக்கள்
தென்னமுடிவேந்தன் திரியோதிரன் குருக்கள்
மற்றுமுள்ளமன்னவற்கு வகைவகையாயிருந்து
குருக்களுடனுரைப்பான கோமன்திரியோதிரன்

தன்னுடனேயிப்பொழுது காமதேனுவந்ததுவும் [ம்
வேணுமென்றபாக்கியத்தை விருந்திடச்சொன்னதுவு
பெருமாள்பிரதாபங் கண்டோ பெரியவரே
மாயன்தபசுநிலை மனதறியப்போகாது
பத்துலட்சந்தாதியர்கள் சமைத்தால்விருந்தாமோ
நம்முடையசேனைகட்கு நல்விருந்துசெய்தாரே
இவருடன்சரியானபேர் யாருமில்லைவையகத்தில்
நாம் நினைத்தால்தான்வருமோ நலமானகாமதேனு
அன்பாகச்சொல்லி யுரைத்தான் குருக்களுடன்

குருக்கள் சொல்வது.

அந்தவிசேடமது கேட்டுமே அக்குருக்கள்
சொன்னாரேயாயரிட சூத்திரங்களுள்ளதெல்லாம்
வைகுண்டவாசவன்தான் மாயவனாய்வந்தவதரித்தார்
பூமிபாரந்தீர்க்க பிறந்துவந்தார்மாயவரும
மானிடசென்மமென்று மனதில் நினைக்கவேண்டாம்
பஞ்சவர்களுடன் பகைபண்ணிக்கொள்ளாதே
வனவாசம்போனவரை மன்னாவழைத்துக்கொண்டு
பாதியரசு பாண்டவர்க்கு நீகொடுத்து
கூடியேவாழ்ந்தாக்கால் குலமன்னர்மெச்சுவார்கள்

திரியோதிரன் சொல்வது.

குருக்களுரைக்கலுமே போரான்திரியோதிரன்
மறுவார்த்தைசொல்லி யுரைக்கலுற்றான்மன்னவனும்
பாண்டவரைதானழைத்து பாதியரசாளுமென்று
நாமமுடையார்க்கு நல்லவன்போலானோம்
மாமன்சகுனியுட வார்த்தையைநாம்கேட்டு
நியாயங்கள்கேட்டு நடந்தப்பி நின்றோமே
என்னசெய்வோமென்று யேங்கிமனந்தளர்ந்து
மகனைத்தலைசிறைத்து வாசலிலேகட்டிவைத்து
காலோடேகட்டி கல்யாணஞ்செய்ததுவும்
வெட்கமுங்கெட்டு விருதாவாபோனதுவும்
எப்போதெளியுமையா யீஸ்வரனேயெந்தனுக்கு
என்றுவிசாரமிட்டு யெழில்வீரன்தான்படுத்தான்
எல்லாருமப்படி யெண்ணிவிசாரமிட்டு

அரவான்முதல் நால்வருக்குச் சொல்வது.

படுத்தார்களெல்லோரும் படைமன்னர்தான்கூட
நல்லரவான்தொந்திசெட்டி நற்பாலன்கடோற்கஜனும்
பேசினநால்வருமே பெருமாள்சவுரியத்தை

அம்மான்சவுரியத்தை அனைவரும்பார்த்தோமே
நம்மாலேதாம்வருமோ நல்லவிருந்திடவே
என்றவர்கள்பேசி இருந்தார்கள்நால்வருந்தான்
பொழுதுவிடிந்ததுகாண் புறப்பட்டார்நால்வருந்தான்
ஆயன்பெருமாளு மப்போவெழுந்திருந்து
ஸ்நானங்கள்பண்ணி சதிரானமாயவரும்
காலைகடன்கழித்து கனமானமாயவரும்
அரவானைதானழைத்து ஆயன்பெருமாளும்
திரியோதினற்கும் தேசத்திலுள்ளவர்க்கும்
பகல்விருந்துசொல்லிவந்த பரிவாகமாயவரும்
அப்படியேசொல்லிவந்தான் அரவானவர்களுக்கு

திரியோதிரன் பயப்படுவது.

தென்னமுடிவேந்தன் திரியோதிரன்பார்த்து
நல்லரவான்தன்னுடனே ஞாயமுமாச்சுதே
கலியாணகாரியமும் கனவிருந்துமாச்சுதே
நாலுநாளாச்சுதே நாங்களுமிங்கேவந்து
ஊருக்குபோறோமென் றுரைத்தான்கரியமன்னன்
பூணிக்கையாகவே போய்வாரோமென்றானே

அரவான் தடுப்பது.

அவ்விசேடங்கேட்டு அரவானுங்கொக்கரித்து
போகிறவர்தங்களை பிளந்திடுவேன்தடியாலே
ஊர்கோலர்வந்து உறவாடிபொய்யெழுதி
தேறுதலைசெய்வித்து உன்சீமைக்குபோமென்றான்
அவ்விசேடங்கேட்டு யடங்கினான்கிரியனுமே
வந்தானே நல்லரவான் மாயவற்குதெண்டனிட்டான்
அவ்விசேடமெல்லாம் அரவானுரைத்தானே

பெருமாள் மறுபடியும் விருந்திடுவது.

சந்தோஷப்பட்டுத் தலையசைத்துமாயவரும்
கனமானமாயவரும் காமதேனுவையழைக்க
வந்ததேகாமதேனு மாயவரைதெண்டனிட்டு
என்னையழைத்தவகை ஏதென்றுகேட்டதுகாண்

பெருமாள் சொல்வது.

மாயன்பெருமாளும் மறுவார்த்தைசொன்னாரே
அன்னமும்பாலும் அமுதுநெய்மோரும்
என்னென்னவகையுடனே இனியகறிகளெல்லாம்
ஒன்றுங்குறையாமல் வுடன்படிக்கைசெய்யுமென்றார்
அப்படியேகாமதேனும் அங்கேநினைத்ததுகாண்

அரவான் சொல்வது.

அரவானெழுந்திருந்து ஐவரைப்பந்திவைத்து
வேறுமெனறகாய்கறிகள் வேணப்பொரிக்கறிகள்
நெய்யாலும்பாலாலும் நிகரானப்பொரிக்கறிகள்
வயராறவுண்டு கனைதீர்ந்தார்மன்னவர்கள்

ஊர்கோலம் வருகிறது.

ஊர்கோலம்வரவே உத்தாரமிட்டார்கள்
யானைகுதிரைகளும் ஆளும்பெரியமன்னவர்கள்
முத்துக்குடையும் முழுவயிரக்கால்குடையும்
பத்தரைமாற்றுப்பொன் பவழநெடுங்குடையும்
பட்டுக்கொடையும் பசும்பொன்னூல்முகக்கொடியும்
வட்டக்குடையும் மாணிக்கக்கால்குடையும்
இட்டமுடனாலவட்டத் திரள்கொடிதான் துலங்க
வெண்சாமரம்வீச வேணதெல்லாந்தான்பிடிக்க
பட்டுக்கொடிசீலை பத்துலட்சம்தான்பிடிக்க
தீவட்டிக்காரர் திரளாய்க்கொளுத்துமென்ன
பொன்னாலேதீவட்டி பெரியவர்தான்பிடிக்க
தேர்விளக்குபந்தம் திரளாகத்தான்பிடிக்க
அடித்தார்மேளவகை அண்டங்கிடுகிடென்ன
ஆனையின்மேலே அடித்தார்களாத்துலட்சம்
நற்பதுமைபோலாக நாகசுரமூதிவர
பொற்காளம்யூதிவர பூமிகிடுகிடென்ன
ஆகாயபாணம் அதிரபுருசுசக்கிரமும்
பூச்சக்கிரபாணங்கள் எட்டுலட்சந்தான்கொளுத்த
பகல்வத்திபூவத்தி பகல்போலேதானெறிய
ஆகாயம்பூமியெல்லாம் அதிர்ந்துநடுங்கிடவே
அபிமன்னராசாவும் யானையின்மேலேறிவர
ரத்தினத்தில்தானிழைத்த தலமானதண்டிகைமேல்
ஏறினாள்தண்டிகைமேல் எல்லோருந்தான்வாழ்த்த
மூத்துக்குதிரைக்காரர் மூன்றுலட்சத்தான்வாழ்த்த
வெற்றியுடன்சுந்தரியும் ஏறிவெளியேவந்தாள்
ஆயிரந்தாதியர்கள் அருகேநடந்துவர
பாடும்பெண்களாயிரம் பக்கந்தில்நடந்துவர
உள்ளங்குளிர்ந்திடவே ஊர்கோலம்வாருர்கள்
வாரதொருவைபோகம் மகாதேவர்கற்பனைபோல்
துவாரகாதன்பதியை சுற்றியேவந்தார்கள்
வீதிக்குவீதி விளக்குவனிட்டார்கள்

ஆலாத்திகாட்டிவாரும் அலர்த்தூயிருப்பாரும்
தேங்காய்உடைப்பாரும் திருச்சின்னமூதுவாரும்
இவரார்காண்யென்பாரும் இந்திரன்தானென்பாரும்
சுபத்திரையாள்பெற்றெடுத்த துய்யவபிமன்னென்ருர்
திருஷ்டிகழிப்பாரும் சேவைசுற்றிபோடுவாரும்
இந்திரன்போலெங்கும் ஊர்கோலம்வாரார்கள்
வந்தார்களப்பொழுது மாயனமண்டபயில்
ஆனைவிட்டுயிறங்கினன் அபிமன்னராசாவும்
தண்டிகைவிறங்கிருள் தையல்நல்லாள்சுந்தரியும்
மாப்பிள்ளைபெண்ணும் வரிசையுடநின்ருர்கள்
ஆலாத்திகொண்டுவந்து ஆயிரம்பேர்தானெடுத்தார்
மூத்தாலையாலாத்தி மூப்பியர்கள்தானெடுத்தார்
கற்பூரவாலாத்தி கன்னியர்கள்தானெடுத்தார்

காப்பு களைவது.

மாப்பிள்ளையும்பெண்ணும் மணவறையிலுட்கார்ந்தார்
காப்புகளைந்தார் காளையபிமருக்கு
சுந்தரியாள்காப்பு துரைமன்னன்தான்களைந்தான்
படைமன்னராசாக்கள் பந்திபந்தியாய்ச்சென்ருர்
மொய்பணமும்ரத்தினமும் மூன்றுலட்சமிட்டார்
வந்திருக்குமன்னவர்க்கு வரிசையுடன்வெற்றிலைபாக்கும்
சந்தனமுங்குங்குமமுஞ் சாந்துபனிநீருந்தான்
அந்தமுடன்மன்னவர்க்கு ஆனைவருக்குந்தான்பூசி
மஞ்சள்சலக்கங்கள் மன்னவர்களுந்தானுடி
சந்தோஷவார்த்தைசொல்லி பெருமாள்நயவுடனே

பெருமாள் சொல்வது.

வந்தவரைப்போங்களென்று மாயனனுப்பிவிட்டார்
துரியோதனனுடைய சேனைப்பரிகலமும்
பயணங்கள்பட்டாராம் பாங்குடையமன்னவர்கள்
ஆனந்தவாழ்மார்பன் அரவானுந்தானினைத்து
கட்டைதுளிர்ந்தாலுங் காணியாளனுகாது
துரோபதையைக்கொண்டுவந்து துயிலையுரியவைத்தான்
மாதுதுரோபதையை மயிரைவிரித்துவைத்தான்
வானபிமன்தேவியரை தன்மைமந்தனுக்குநேமித்தான்
துரியோதனனுடைய கிரீடமன்னர்நூற்றுவரை

மாளப்பொருக்கிவிட்டுமெடிப்பேனென்றெழுந்தான
ஆயன்பெருமாளும் அரவானினைவறிந்து

பெருமாள் அரவானண்டை ஓடுகிறது.

ஆயன் அரவானை அழைத்தே தகூறலுற்றார்
நாளையினிபாரதத்தில் ராசாக்கள்மாளுவது
கலியாணப்பந்தலிலே கலகமிடலாகாது
மன்னவரையெல்லாம் வழிவிட்டுஅனுப்புமென்றார்
அரவான்கடோற்கஜனு மானதொந்திசெட்டியுடன்
துடைதட்டிகொக்கரித்து மிரட்டிமுடுக்கலுற்றார்
அடித்துவிழுந்ததென்று அலறியேஓடுவாரும்
இடிவிழுந்ததென்று இளைத்தோடிபோவாரும்
பின்திரும்பிமுன்னோடி பிழைத்தோமேயென்பாரும்
தலைதடவிகொண்டுமன்னர் தப்பினோமென்பாரும் [று
இன்றுபெற்றாளென்மாதா இனிபிழைத்தோம்நாமென்
இப்படிச்சொல்லி இராசாக்களோடலுற்றார்
நேசத்தழகன் துரியோதிராசன்
கைசோர்ந்துமெய்சோர்ந்து கனத்தமுடிசோர்ந்து
இறங்குந்திருமுகத்தை எறெடுத்துபாராமல்
தகப்பனார்வார்த்தைகளை நள்ளிநடந்ததினால்
சகுனிநமக்குச் சத்திராதியாயிருந்தான்
இனியென்னசெய்வோமென்றுவழிநடந்தான்
அய்யோசிவனேயென்று அழுதுவழிநடந்தான்
மார்பெல்லாம்வேர்வை வழிந்தொரிந்துதானடந்தான்
கூட்டிவந்தசேனையெல்லாம் கொள்ளைகொடுத்துவிட்டு
எப்படிபோயிருப்பேன் இனியதொருபட்டணத்தில்
எப்படிபோய்சேர்ந்தா லினியதொருபட்டணத்தில்
ஐவர்பெருமாளாச்சியாள் துரோபதையும்
மைந்தர்மருமகளை வாழ்த்திமனமகிழ்ந்து
ஆயன்பெருமகளை அடிபணிந்துதெண்டனிட்டு
எங்களுக்குயிங்கே யிருக்கவேநீதியல்ல
வேதநாராயணனே விடைதாருமென்றுரைத்தார்
மாயன்பெருமாளும் வார்த்தையவர்க்குரைத்தார்
ஏழைமைவந்து இளைத்தோமென்றெண்ணாதே
மாளுவார்நூற்றுவர்கள் வையகத்தையாண்டிடுவீர்
மாதுதுரோபதையு மயிர்முடிப்பாள்தப்பாது

மன்னவரே நீங்கள் வனம்போயிவாருமென்றார்
மாயன்பெருமாளும் வழிவிட்டுதான்வருவார்
அந்தநாள்போக மறுநாள்கழிந்தபின்பு
அரவான்கடோற்கஜனும் ஆனதொந்திசெட்டியாரும்
மாயன்பெருமாளை மனமகிழ்ந்து தெண்டனிட்டு
மாயவரேயெங்களிட வங்கிஷத்துமகாதூ துவரே
ஐயரே எங்களை நீர் அனுப்பவிடைதாருமையா
அப்படியேயாகுதென்று ஆயனுஞ்சம்மதித்து
மாயன்மனமகிழ்ந்து மருமக்கள்மார்தமக்கு
பட்டினல்பச்சைவடம் பாங்கானகிரீடமும்
கடுக்கனகொலுசுகளும் கனமானமோதிரமும்
வேண்டியபணிகளெல்லாம்வெகுமானந்தான்கொடுத்து
தோகைநல்லாள்சுந்தரிக்கு சீதனமாகவென்று
நாற்பதினாயிரங்கோடி நடையானபாற்பசுவும்
அடியார்கள்தோழியர்கள் ஆயிரந்தான்கொடுத்து
ஆனைகுதிரை ஐந்துலட்சந்தோழியர்கள்
பல்லக்குதண்டிகையும் பசும்பொன்னாலிழைத்ததுகாண்
மாப்பிள்ளைக்கும்பெண்ணுக்கும் வரிசையுடன்ஒப்பாக

அபிமன்னன் சொல்வது.

அப்போதுவாளபிமன் ஆயனைத்தெண்டனிட்டு
பெருமாளேஎங்களிட பெரியப்பன்தந்ததெல்லாம்
எழுநூறுஒட்டகம்பொன் யானைசுமந்ததனம்
பரியம்பொருந்தினீரே பாரளந்தமாயவரே
பேதையென்றுசொல்லியல்லோ பெண்கொடுக்கமாட்டேனென்றீர்
எங்கள்-பாட்டனார்தேடிய பழம்பொருளை அத்தனையும்
மூலைப்பாலுகூலியொரு மூப்பதுபொன்னுண்டுமக்கு
மூப்பதுபொன்னு மூதலெடுத்துகொள்ளுமையா
மற்றபொன்பூஷணமும் மாறுமல்பொதிபிடித்து
ஆனைகுந்திபட்டணத்தே அனுப்புமென்றானவாளபிமன்
தப்பாதனுப்பிவிடுந் தாரணியளந்தவரே
உடமைகொடுத்து உறவாடுமென்றுரைத்தான்

பெருமான் சொல்வது.

என்னபெருமாளிருதோளுப்பூரித்து
தங்கைமகனுரைக்க தனித்தந்தமாயவரும்

மருமக்கள் நால்வரையும் மகளான சுந்தரியையும்
வாழ்த்திவிடைகொடுத்தார் மாளிகையி லுட்புகுந்தார்
மாமியார்லட்சுமியை மன்னவர்கள் தெண்டனிட்டார்
மங்கைநல்லாள்சுந்தரியும் மாதாவைதெண்டனிட்டாள்
மருமக்கள் நால்வரையும் வாழ்த்திஎடுத்தணைத்து
மகளாரைசென்றெடுத்து வாயாரவாழ்த்தலுற்றாள்
மங்கிலியமுண்டாவீர் மைந்தனைபெற்றிடுவீர்
வாயாரவாழ்த்தி மதிமுகத்தைமுத்தமிட்டு
போய்வாருமென்று விடைகொடுத்தாள்பொற்கொடியும்
அங்கேவிடைகள்பெற்று ஆயனைத்தெண்டனிட்டு
துவாரகாபதியைவிட்டு துரைமன்னர் நானடந்தார்

ஔவையார் வீட்டிற்கு வருகிறது.

ஔவைவனந்தேடி அரசமக்கள்போய்நடந்தார்
பேரிகைகொட்ட பெருஞ்சங்குநின்றூத
மல்லரிகொட்ட மணித்தாளமுமுழங்க
ஒற்றைச்சங்கூத ஒளிகள்மணிமாற
தெய்வரம்பையாடிவர தேவடிமாராடிவர
ஔவைமடத்தருகே அடுத்தார்கள்மன்னவர்கள்
அபிமன்னர்வருகிறதை ஔவையறிந்துகொண்டு
மக்களெதிராக மாமிவருகலுற்றாள்

ஔவையார் பாதம் சுந்தரியாள் பணிவது.

தோகைநல்லாள்சுந்தரியும் தோழிமார்தன்னுடனே
தண்டிகைதானிறங்கி தாகுழலுமோடிவந்து
மாமிசரணமென்று வணங்கியேதெண்டனிட்டாள்
ஔவையார்மனமகிழ்ந்து அணைத்தெடுத்துமுகந்துகொ
வாயாரவாழ்த்தி மடத்தருகேகொண்டுசென்று [ண்டு
அன்னங்கறிகாய் அடைவாகவேசமைத்து
மக்களுக்குமங்கையர்க்கும் வரிசையாயன்னமிட்டு
வெற்றிலைகற்பூரம் மிகுந்தவடக்காய்களுடன்
அள்ளியவர்க்களித்து ஔவையாருமப்பொழுது
வாழ்த்திவிடைகொடுத்து வழிவிட்டனுப்பலுற்றாள்

ஔவையார் வழிவிட்டனுப்புதல்.

அங்கேவிடைபெற்று அப்புறம்போகையிலே
ஔவைவனங்கடந்து அப்புறமேபோகலுற்றார்

காடுகடந்து கரியவனந்தான்கடந்து
நாடுகடந்து நல்பதிகள்தான்கடந்து
இஞ்சிவனங்கடந்து இருவாக்ஷியுட்புகுந்து
மஞ்சள்வனங்கடந்து மருக்கொழுந்துகாடுகடந்து

வீரகெங்காளண்டை தொந்திசெட்டி வருவது.

வீரகெங்காள்பட்டணத்தே விருப்பமுடன்வந்தார்கள்
முந்திபோய்தொந்திசெட்டி முருகுழலாளை தெண்டனிட்டு
மணஞ்செய்துவாளபிமன் மங்கைநல்லாள்சுந்தரியும்
அண்ணமாரிப்போ அழைத்துவந்தார்பாருமென்றான்
மைந்தனுரைக்கலுமே மாதாவுமேதுரைப்பாள்

வீரகெங்காள் சொல்வது.

வீட்டைமெழுகி விநாயகர்கோலமிட்டு
சாந்தால்தரைமெழுகி சந்தனத்தால்கோலமிட்டு
கஸ்தூரிதான்கரைத்து கடுகதெளியுமென்றாள் [ள்
ஆலாத்திப்பெண்களொரு ஆயிரம்பேர்வாங்களென்று
மைந்தற்கெதிரே மங்கையரும்போகவென்று

வீரகெங்காள் மைந்தர்களண்டை வருவது.

பல்லக்குமீதேறி பைங்கொடியுமெதிர்நடந்தாள்
மாதாவருகிறதை கண்டந்தமன்னவரவர்
ஆனைவிட்டுதானிறங்கி அரசர்களெல்லோரும்
சூழவலம்வந்து சுற்றிவந்துதாயாரை
பைங்கொடியாசுந்தரியும் பல்லக்குவிட்டிறங்கி
அத்தையாள்பாதம் அடிவணங்கித்தெண்டனிட்டாள்
வந்துபணிந்த மருமகளைச்சென்றெடுத்து
வாரியெடுத்தணைத்து மாளிகையில்கொண்டுசென்று
வாழ்த்திமனமகிழ்ந்தாள் மாதாவும்வீரகெங்காள்
ஊர்கோலஞ்செய்யவே வுத்தமியாள்தானினைத்து
மைந்தன்தொந்திசெட்டிக்கு மாதாவுரைத்தாளே [ள்
அப்போதுதொந்திசெட்டி அரண்மனையிலுட்புகுந்தா
உக்கிராணம்போய்புகுந்து ஒருபெட்டிதான்திறந்து
என்னைகொண்டுவாருமென்று வழாயிரம்பொன்கொடு
[த்தான்
பாணவித்தைகொண்டுவரப் பதிங்கலப்பொன்னளித்தா
கேளிக்கைகொண்டுவர கொடுத்தான்கோடிதிரவியம்]ன்

ஊர்கோலம் வருவது.

பல்லக்குமேற்சிலபேர் படைமன்னரேறிவர
வீதியலங்கரித்து விளக்கேற்றியெண்டிசையும்
ஆயன்மகன்சுந்தரியும்ஆனபொன்னின்தண்டிகைமேல்
வேந்தர்பெருமாளும் வீதிபவுனிவாரார்கள்
வெண்சாமரைவீச வெள்ளைக்குடைகவிய
செட்டித்தெருகடந்து சீரானநாடுவிட்டு
இராசர்நடுத்தெருவு நடந்தார்கள்மன்னவர்கள்
பாணமுழங்கிவர பைங்கொடிமாராடிவர
யானைகுதிரையேரி இராசாக்கள்வீதிவாரார்
பார்த்தன்மகனாரும் பாரளந்தார்தன்மகளும்
காளையரவானும் கடோற்கஜன்தன்னுடனே
ஊரைவலமாக ஊர்கோலம்வந்தார்கள்
கண்டாளேவீரகெங்காள் கண்கள்களிகூற
ஆலாத்திகாட்டுமென்றாள் ஐவருக்குஞ்சுந்தரிக்கும்
அபிமனுஞ்சுந்தரியும் அப்பெண்மணியைப்பார்த்து
மாளிகையினுட்புகுந்தான் வாளபிமன்தேவியுடன்

அபிமன்னன் மணக்கோலத்தோடு.
வீரகெங்காளிடம் வருவது.

பந்தலிலேவந்துநின்று பாரமுடிமன்னவரும்
அரசாணிமுன்பாக அபிமனுஞ்சுந்தரியும்
மணைமேலேயுட்கார்ந்தான் வாளபிமன்தேவியுடன்
ஆனதொருவேதியர்கள் அள்ளியேசேஷையிட்டார்
அபிமருஞ்சுந்தரியும் அரசாணிச்சுத்திவந்தார்
அரசாணிசுத்திவந்து அரண்மனையினுட்புகுந்து
பாச்சிகைப்பாய்மீதில பரிந்தேயுட்கார்ந்தார்கள்
கூட்டிகுழப்பி கொடுத்தார்கள்தாதியர்கள்
வாங்கியமுதுண்டார் வாளபிமன்சுந்தரியும்
ஊர்கோலம்வந்து உள்ளேநாரமொய்யெழுதி
பாக்கியும்வாங்கி பரிமளம்மேற்பூசி
அன்னங்கரிகாய் அடைவாகவேயளித்து
உண்டெழுந்துபோனபின்பு உத்தமவீரியாகள்
வாளபிமன்தேவியுடன் மகிழ்ந்திருந்தாளங்கொருநாள்
அந்தநாள்போக்கி மறுநாள்கழிந்தபின்பு
அரவான்கடோற்கஜனும் அபிமருந்தானெழுந்து

ஆச்சிநல்லவீரகெங்காளே ஆசனத்தில்சேரவென்று
மாதாவுக்கேற்ற மலர்தூவிதெண்டனிட்டார்
வந்துபணிந்ததொரு மக்களைச்சென்றெடுத்து
வாயாரவாழ்த்தி மதிமுகத்தைமுகந்துகொண்டாள்
ஆச்சிநீர்கேளீர் அடியேன்கள்விண்ணப்பம்
ஆச்சிசுபத்திரையும் அபிமனைதேடியேதான்
அனேகநாளாகுதுகா ணையன்பதிக்குவந்து
விடைதாரும்ஆச்சியென்று விடுதிக்குப்போகவென்றார்

வீரகெங்காள் சொல்வது.

சிரித்துமனமகிழ்ந்து செட்டிமகள்வீரகெங்காள்
மக்களைப்பார்த்து மனமகிழ்ந்துவீரகெங்காள்
போசனசாலையிலே பொற்கொடியும்போய்புகுந்தாள்
மக்கள்மருமகட்கும் வரிசைப்படியாக
பொரித்தபொரிக்கரியும் பொன்போல்சிறுபருப்பும்
புத்துருக்குநெய்தளிகை போதமிகபடைத்து
அசனமுண்டபிற்பாடு அள்ளியிலைபாக்குமிட்டாள்
மருமகள்சுந்தரிக்கு வரிசைபணிகளுடன்
தோழிமாயிரஞ் சுந்தரிக்குத்தான்கொடுத்து
மைந்தனபிமனுக்கு வரிசைபணிதியுடன்
யானைகுதிரையுடன் அடியார்களாயிரமும்
வேண்டும்படிகொடுத்து வீரகெங்காளப்போது
வாழ்த்திவிடைகொடுத்து மருவிட்டனுப்பலுற்றாள்
இளப்பாறிவழிநடந்தார் இரவும்பகலாக
நடந்தார்களப்பொழுது நாககன்னிபட்டணத்தில்
நாடுகடந்து நகரும்பலகடந்து
காடுகடந்து கடுவேதான்நடந்து
கானகத்தைதவிட்டு கடுகெனவேவந்தார்கள்
நாககன்னிவீற்றிருக்கும் நல்லதொருபட்டணத்தே
பாதாளலோகத் தடவையில்வந்துநின்றார்
காளையரவானுங் கடுகியேமுன்னோடி
முன்னாலேயோடி முத்தெதிரில்வந்துநின்று
சுற்றியேவந்துநின்று சுருக்காகத்தெண்டனிட்டு
அன்னையார்பாதத்தில் அரவானுந்தெண்டனிட்டான்
தெண்டனிட்டபோது திடுக்கெட்டெழுந்திருந்து
அபிமன்கடோற்கஜனும் அன்பாகத்தொந்திசெட்டி

சுந்தரியாள்தானுஞ் சுருக்காகவந்தார்கள்
வந்தாரிதோபாரும் மாதாவேயெனமொழிந்தான்
மக்கள்வருகிறதை மாதாவுந்தான்கேட்டு
பாங்கியரைச்சேரவைத்து பைங்கொடியுங்கூறுவாள்
வீடுமெழுகி விநாயகர்கோலமிட்டு
கஸ்தூரிகொண்டுவந்து கரைத்துதெளியுமென்றுள்
மாணிக்கதீபங்கள் வையுமென்றுளெத்திசையும்
குத்துவிளக்கும் கொழுந்துபடயேற்றுமென்றுள்
இரத்தினகம்பளியை யெத்திசையும்போடுமென்றுள்
ஆலாத்திசுற்றுமென்று ளாயிரம்பெண்கள்தனை
மாதாவும்நாககன்னி மைந்தர்க்கெதிராக
பாதாளலோகம்விட்டு பார்த்தனிடதேவியரும்
பல்லக்குமேலேறி பைங்கொடியாள் தான்வருவாள்
மாதாவரவுதன்னை மன்னவர்கள்கண்டுகொண்டு
யானைகுதிரையை அரசர்கள்விட்டிழிந்து
மாதாவுக்கெதிராக மன்னவர்கள்வந்துநின்று
மாதாவின்பாதம் மலர்தூவிதெண்டனிட்டு
வந்துபணிந்தவரை வாரியெடுத்தணைத்தாள்
ஆயன்மகளாரும் அன்பானசுந்தரியும்
பல்லக்கைவிட்டிழிந்து பார்த்தான்மருமகளும்
அத்தையார்பாதம் அடிபணிந்துதெண்டனிட்டாள்
மாமிசரணமென்று வணங்கினாள் சுந்தரியும்
வந்துபணிந்த மருமகளைச்சென்றெடுத்து
வாழ்வீர்வளருவீர் மைந்தரைபெற்றிடுவீர்
பூமியையாளுகைக்கு புதல்வரைப்பெற்றிடுவீர்
வாயாரவாழ்த்தி மதிமுகத்தைமுகந்துகொண்டு
ஆலாத்திசுற்றுமென்றுள் ஆனந்தமார்பருக்கு
மாணிக்கஆலாத்தி மங்கையர்கள்காட்டினார்கள்
பாதாளலோகத் தடவரையிலுட்புகுந்து
மாளிகையில்கொண்டுசென்று மைந்தனையுஞ்சுந்தரியை
அரசாணிமுன்பாக அபிமருஞ்சுந்தரிக்கும் [யும்
மைந்தனுக்குச்சுந்தரிக்கும் வாரியேசேஷையிட்டாள்
அபிமருஞ்சுந்தரியையும் அரண்மனையில்கொண்டுசென்
பாலும்பழமும் கொடுத்தாளேபைங்கொடியும் [று

நெய்பால்தயிருடனே நேரிழையாள் தான்கொடுத்து
மைந்தனைச்சேரவழைத்து மாயனார்தன்மகளும்
அமுதுண்ணமண்டபத்தே ஆயிழையும்போய்புகுந்து
பொன்போல்சிறுபருப்பும் புத்துருக்குநெய்யாலும்
பச்சடியும்துவையலும் பழவரிசைபோசனமும்
மக்களுடனுக மாதாவும்அசனமுண்டு
வெற்றிலைகற்பூரம் வேண்டுபடியருந்தி
சந்தனங்கஸ்தூரி சாந்துமிகவணிந்து
அந்தநாள்போக்கி மறுநாள்கழிந்தபின்பு
அபிமனெழுந்திருந்து ஆச்சிக்குப்போய்பணிந்து
ஆச்சியரே நீர்கேளு மடியேன்றன்விண்ணப்பம்
மாதாசுபத்திரையும் வழிபார்த்திருப்பாள்காண்
தேடித்திகைப்பாள்காண் திருமாலுடன்பிறந்தாள்
சொல்லாமல்வந்துவிட்டேன் தோகையரேயிப்பொழு
வாழ்த்திவிடைதாரும் மாதாவேயெந்தனுக்கு [து
அப்படியேயாகுதென்று அழகானநாககன்னி
மைந்தரபிமருக்கு மருமகள்சுந்தரிக்கும்
பாரப்பணிகளும் பாங்கிமாராயிரம்பேர்
ஆனைகுதிரைகளும் ஆயிரம்பேர்தாதிகளும்
சீதனமாகக்கொடுத்தாள் சீரானநாககன்னி
மக்களைப்பார்த்து மனமகிழ்ந்துமங்கைநல்லாள்
அமுதுண்ணமண்டபத்தை ஆயிழையும்போய்புகுந்து
முப்பழமும்பாலும் முடுகுபலாப்பழமும்
வாழைப்பழமும் மதுரமுள்ளமாம்பழமும்
வெள்ளிலைகற்பூரமும் வேண்டுபடியளித்து
சந்தனமுங்குங்குமமும் சாந்துபரிமளமும்
மன்னாபெருமானே வாழ்வாயெனவாழ்த்தி
மருமகள்சுந்தரியை மகிக்ஷியாய்தானழைத்து
வாழ்த்திவிடைகொடுத்து வழிவிட்டனுப்பலுற்றாள்
மகனையாவாளை மங்கையருந்தானழைத்து
அபிமனைக்கொண்டுபோய் ஆச்சிகையிலொப்பிவைத்து
ஐந்துநாளிருந்து அப்பா நீவாருமென்றாள்
மன்னவரும்சேனையுடன் வாகனந்தானேறி
பாதாளலோகந் தடவரையைவிட்டகன்று
காடுகடந்து கரியவனந்தான்கடந்து
கொல்லிமலைகடந்து குடகுமலைதான்கடந்து

காணுருந்தோப்புகளும் கமுகுவனந்தாண்டி
கமலவல்லிதானிருக்கும் கதலிவனம்புகுந்து
மூந்திகடோற்கஜனும் மூடிகியேயோடிவந்து
வீதியும்வீதி தெருவும்பலகடந்து
கமலவல்லிதானிருக்கும் கனகமணிமண்டபத்தே
மாதாவுக்கேற்ற மலர்தூவிதெண்டனிட்டான்
கைகட்டிவாய்புதைத்து கடோற்கஜனே துரைப்பான்
அபிமருஞ்சுந்தரியும் அரவானுந்தொந்திசெட்டி
சேனைத்திரளுடனே வருகிறார்மணம்பொருந்தி
நம்முடையவனமருகே வந்தார்காணுச்சியரே
மைந்தர்வருஞ்சேதி மாதாவுந்தான்கேட்டு
ஆயிரம்பேர்ராட்சதரை அனுப்பினளெதிராக
அப்படியேயமர்ந்தார்கள் ஆயிரம்பேர்ராட்சதரும்
எதிராகவந்து எழுந்திருங்களென்றாரே
அப்படியேதானெழுந்து ஆனைவோரும்வந்தார்கள்
தாயார்கமலகன்னி சதிரிலேதானிருந்தாள்
ஆனைவிட்டுத்தானிறங்கி அபிமன்னராசாவும்
நல்லரவான்தொந்திசெட்டி நாலுபேர்தங்களுடன்
அம்மாளைச்சுற்றிவந்து அடிவணங்கிதெண்டனிட்டார்
தெண்டனிட்டபிள்ளைகளை சீருயெடுத்தணைத்து
இருக்கச்சிங்காதனங்க ளிட்டாளெதிராக
ஆயன்மகளாரும் அழகுதண்டிகைதானிரங்கி
மாமிசரணமென்று மலர்தூவிதெண்டனிட்டாள்
வந்துபணிந்த மருமகளைத்தானெடுத்து
வாழ்த்தியெடுத்தணைத்து மாளிகையில்கொண்டுசென்று
பாலும்பழமும் பசுந்தேனுஞ்சர்க்கரையும்
கூட்டிக்கலந்து கொடுத்தார்கள்தாதியர்கள்
போசனநற்கறியும் போட்டுண்டாளப்பொழுது
கல்யாணகாரியங்கள் காட்சிகளுள்ளதெல்லாம்
ஒன்றுங்குறையாமல் வுரைத்தானே நல்லரவான்
அவ்விசேஷங்கேட்டு அம்மாள்கமலகன்னி
நகைத்துதலையசைத்து நன்றாச்சுதென்றாளே

அரவான் சொல்வது.

இரியோதிரனுடனே சேரப்பிறந்தார்கள்
குருட்டனிடபுத்திரர்கள் லொற்றவர்களெல்லோரை

பாலனபிமனுமே பந்தியாய்கட்டி வைத்தான்
கொள்ளவந்தலக்குணனை குடுமிவைத்து தலைசிரைத்து
ஆயிரம்பெருவிளக்கை அவன் தலையிலேற்றிவைத்து
அரசாணிக்காலுடனே அவனையேகட்டிவைத்து
பார்த்திருக்கமங்கிலியம் தரித்தாரேமாதாவே
பின்னையுமுண்டான பேச்சுவகையுள்ளதெல்லாம்
ஒன்றுங்குறையாம லுரைத்தானரவானும்

கமலகன்னி சொல்வது.

கேட்டாள்கமலகன்னி கிருபையுடன் தானழைத்து
சந்தோஷப்பட்டு தலையைசத்துகமலகன்னி
அப்போ-பொழுதுவிடிந்ததுபொற்கொடியுந்தானெழு
பதினாயிரம்கோடி பத்துலட்சம்ராட்சதரை [ந்து
தம்பியரையழைத்து ஊர்கோலங்காட்டுமென்றாள்[ருள்
கடோற்கஜனைத்தானழைத்து காரியத்தைப்பாருமென்
அப்படியேநல்லதென்று அரவான்கடோற்கஜனும்
பந்தங்கொளுத்துமென்றார் தெருவெங்குசுற்றிவர
கொட்டுஇரன்மேளம் கோடையிடிபோலே
கொண்டுவந்தாராலவட்டங் கோடானகோடியுண்டு
யானைகுதிரைகளும் ஆள்பெருராணுவமும்
எல்லோருங்கூடி இயல்கோலம்வந்தார்கள்

அபிமன்னனும் சுந்தரியும் அரண்மனைக்குவருவது.

மாப்பிள்ளையும்பெண்ணும் மகிழ்ச்சியுடன்வந்தார்கள்
ஆச்சியுடன்பெண்ணும் அரண்மனையிலுட்புகுந்து
ஆலாத்திதீபம் அரிவையருந்தானெடுத்து
மாப்பிள்ளையும்பெண்ணும் வந்தார்கள்மாளிகையில்
கமலகன்னிபட்டணத்தில் கனத்ததொருராட்சதரும்
சேஷைகளிட்டபின்பு திருவிளக்குமுன்னேவைத்து
மோகமுடன்ராட்சதர்கள் மொய்வரிசையிட்டார்கள்
பாக்குடனேவெற்றிலையும் பலபேர்க்குதான்வழங்கி
அடவுடனேகொடுத்து அனுப்பினாள்கமலகன்னி
மாப்பிள்ளையும்பெண்ணும் மணவறைவிட்டிறங்கி

அபிமன்னனுக்கும் சுந்தரிக்கும் பலதானமிடுவது.

செம்மையாகபால்பழமுங் குடித்தாரிருவருமே
தேர்புடனோராத்திரிக்கு நித்திரைசெய்தார்கள்
அபிமனுஞ்சுந்தரியு மறுநாள்கழிந்தபின்பு

ஆச்சிமுகம்நோக்கி அபிமன்னன்கூறுவான்
ஆச்சிநீர்கேளீர் அடியேன்தன்விண்ணப்பம்
மாயன்சகோதரியாள் மாதாசுபத்திரையும்
மாயன்பதிக்குஎன்னை வழிநோக்கிப்போகாமல்
மறையோன்வசமாக மாதாவுமொப்பிவைத்தாள்
அங்கிருந்தவாறு அடியேனும்வந்துவிட்டேன்
ஆச்சிசுபத்திரையும் அலைந்தெங்குதேடுவாள்காண்
என்னையனுப்புமம்மா எனக்குவிடைதாருமம்மா
நல்லதுஎன்றுசொல்லி நகைத்தாளேகமலகன்னி

கமலகன்னி சுந்தரிக்குச் சீதனங்கொடுப்பது.

தாதிகளாயிரமாம் தங்கநல்லபெட்டிகளும்
மாணிக்கச்சேலை மங்கைநல்லாள்சுந்தரிக்கு
சீதனமாகத் திரளுடனேதான்கொடுத்து
அறுதூண் மண்டபத்தே அன்பாகயிட்டுவந்து
பாலுடனேதேனும் பதினெட்டுப்பச்சடியும்
புத்துருக்குநெய்வார்த்து போசனமுந்தான்படைத்து
என்தங்கைசுபத்திரையாள் தானிருக்கும்பட்டணத்தே
கொண்டுபோய்நீங்கள்விட்டு குறிப்பெலாந்தானுரைத்
சென்றுபுகுந்து சுபத்திரைக்குதெண்டனிட்டு [று
கல்யாணபேச்சுகளை காரியமாய்தானுரைத்து
ஊர்கோலம்வைத்து வுறன்முறைக்குபாக்குவைத்து
ஐந்தாறுநாளிருந்து அப்பா நீவாருமென்றாள்
அப்படியேநல்லதென்றார் அரவான்கடோற்கஜனும்
நல்லரவான்கடோற்கஜனும் நற்பாலன்தொந்திசெட்டி
நான்குபேர்சுந்தரியும் நாயகியைச்சுற்றிவந்து
ஏகமாய்ச்சுற்றிவந்து இருபாதந்தெண்டனிட்டார்
வாழ்த்திவிடைகொடுத்தாள் மாதுகமலகன்னி
கோண்டயிடிபோல் குமுறுதேமேளசத்தம்
அட்டதிக்குந்தானதிர ஆகாயந்தானதிர
பட்டத்துயானையின்மே லேறினன்பாலனுமே
சுந்தரியுந்தண்டிகைமே லேறிவெளியேவந்தாள்

நால்வரும் சுந்தரியும் நாட்டிற்கு வருவது,

நடத்துதேபானையங்கள் நாலுதிக்குந்தானதிர
அங்குநின்றங்கு அப்போபயணமிட்டார்

காடுகடந்து கடுகவனங்கடந்து
மேடுகடந்து மெள்ளவேவாரூர்கள்
மலைதோப்புதான்கடந்து மன்னவர்கள்வாரூர்கள்
குன்றுபருவதங்கள் கொப்பெனவேதான்கடந்தார்
கோயில்குளங்கடந்து கொற்றவர்தன்வாரூர்கள்
வல்லரக்கன்வாழ்ந்த வனத்தருகேவந்துநின்றூர்

அபிமன்னன் சொல்வது.

அப்போதபிமனும் அண்ணார்முகம்நோக்கி
கண்டானேயண்ணனை கரியமலைபோல
அம்மானைக்கொன்றுவிட்ட விடந்தனை தான்காட்டி
அந்தவனத்தைவிட்டு அப்புறமேதானடந்தார்
காளிவனத்தருகே கனவீரர்வாரூர்காண்
சுந்தரியாளப்போது சுருக்காகத்தெண்டனிட்டாள்
பூசைகள்பண்ணினூர்கள் பொற்கொடிக்கப்பொழுது
அர்ச்சுனராயுதத்தை அம்மன்கையிலொப்பிவைத்து
காளிவனத்தைவிட்டு கனவீரர்வாரூர்கள்
பம்பைகரைமேலே யெல்லோரும்வந்துநின்றூர்

ஆனைகுந்தியில் நடக்குஞ்சிறப்பு.

இப்படியாயிங்கே யிருக்குமந்தவேளையிலே
இனி-ஆனைகுந்திபட்டணத் ததிசயத்தைகேட்டருளீர்
மாயன்சகோதரியாள் வாள்விசையன்தேவியவள்
பலராமருடன்பிறந்த பத்தினியாள்சுபத்திரையும்
மகனைப்பிரிந்தமுதல் மங்கைநல்லாள்சுபத்திரையும்
பிள்ளைபோனநாள்முதலாய் போசனமும்வேண்டாமல்
அன்னநடையாளும் யழுகைதொழிலாக
எட்டுநாளாச்சுதந்த யென்மகனைக்காணேனுமே [ன்
பகையாளிசேனையிலே பார்த்தன்மகனும்போய்புகுந்தா
எதிராளிசேனையிலே யென்மகனும்போய்புகுந்தான்
வாள்மாற்றிப்போரெதிர்க்க மன்னன்துணையுமில்லை
அஞ்சாதேயென்றுசொல்ல ஆருமில்லையண்டையிலே
பண்டும்பகையாளி பாதிநாள்தாயாதி
கொல்வாரேபாவிகள் குழந்தையென்றுபாராமல்

அறியாதபாலனென்று அஞ்சாமல்கொல்வார்கள்
குழந்தையென்றும்பாராமல் கொல்லத்துணிவார்கள்
அறியாதபாலனென்று அவர்களென்னசெய்வாரோ
என்னசெய்வேன்வாளபிமா யெழில்விசயன்தன்மகனே
காணும்படியிலையோ காவலர்கள்வீரியனே
பார்க்கும்படியிலையோ பார்த்தன்மகனுரே
என்றைக்குகாண்பே னினியபிமர்தனை
மகனையிழந்துநான் மண்ணிலிருப்பதில்லை
உன்னையிழந்துநா னுயிருடனிருப்பதில்லை
அக்கினியைக்கண்ட அரக்கதுபோல்தானுருகி
கண்டவிட்மெல்லாம் காணுவபிமாவென்று
அபிமருடனிருக்கு மாயிரந்தோழர்களை
அந்தபிள்ளைகளைக்கட்டி புலம்பியழுதுகொண்டு
இப்படியாக இருக்குமந்தவேளையிலே

தூதன் வருவது.

பம்பைநதிக்கரையில் பார்வேந்தர்தாமிருந்து
ஒரு-தூதனைத்தானும் துரிதமுடன்தானழைத்து
ஆச்சிசுபத்திரைக்கு அபிமர்வந்தசேதியைத்தான்
சொல்லுமென்றுசொல்லி சுறுக்காகதூதுவிட்டார்.
அப்படியேநல்லதென்று ஆனதொருதூதுவனும்
தூதுவனுமோடிச் சொன்னன்சுபத்திரைக்கு
கேட்டாள்சுபத்திரையும் கிரீடிமகன்வந்தசேதி
சந்தோஷமாகியே சதிராகவப்பொழுது
பந்தலலங்கரித்து பரிவாகயெத்திசையும் [ம்
மணக்கோலந்தான்வரவே மங்கைநல்லாள்சுபத்திரையு
ஆலாத்திதான்கரைத்து அடைவாகவைத்திடுவாள்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

அபிமன்னன் அரண்மனை சேர்ந்தது.

அங்கேயபிமனும் அன்பானசுந்தரியும்
அரவான்கடோற்கஜனும் மன்னனுந்தொந்திசெட்டி
காடுகடந்து கரியமலைதான்கடந்து
ஆனைகுந்தியூருகே யடைவாகவந்தமர்ந்தார்
சாம்புவனுமப்பொழுது சாட்டிப்பறையடித்தான்

அபிமர்வந்தாரென்று அறைந்தான்பறையோசை
சுபத்திரையாள்கேட்டு சொருசாய்மனமகிழ்ந்தாள்
பட்டணத்திலுள்ளோரெல்லாம் கேட்டுமனமகிழ்ந்தார்
ஆலாத்திகாட்டிறு ளபிமருக்குஞ்சுந்தரிக்கும்
ஆலாத்திகாட்டியபின் அழகியசிங்கந்தலிலே
அரசாணிமுன்பாக அபிமருக்குஞ்சுந்தரிக்கும்
சேஷையரிசியிட்டு திசைமன்னரெல்லோரும்
காப்புகளைந்து களிப்புடனேசேஷையிட்டு
அம்மிமிதித்து அரசாணிசுற்றிவந்து
ஆச்சிநல்லசுபத்திரைக்கு அபிமனுந்தெண்டனிட்டான்
கண்ணில்லாவேந்தனுக்கு கண்வந்ததென்றுசொல்லி
கட்டியெடுத்தணைத்து கனிவாயைமுத்தமிட்டு
அத்தையாள்பாதம் அடிபணிந்தாள்சுந்தரியும்
மாயன்மகளாரு மாமிசரணமென்றாள்
வந்துபணிந்த மருமகளைச்சென்றெடுத்து
சமர்த்துபெருமையும் தர்மிற்றேயுந்தனுக்கு
இட்டசபதங்களை யீடேறவேமுடித்தாய்
என்று-அரவான்கடோற்கஜனுமானதெரந்திசெட்டியு
மாதாசுபத்திரைக்கு வணங்கியெதெண்டனிட்டார் [ம்
வந்துபணிந்தவரை வாழ்த்தியெடுத்தணைத்து
என்னைப்பெருவீர் யெதிர்த்தார்முடிபெறுவீர்
பிள்ளைபெறுவீர் போர்விசையன்பேரெடுப்பீர்
வாயாரவாழ்த்தி மதிமுகத்தைமுத்தமிட்டு
வாருங்கள்தம்பியென்று மாளிகையிற்கொண்டுசென்று
பொறித்தபொறிக்கறியும் புத்துருக்குநெய்யாலும்
வந்தமனிதருக்கும் மாதுநல்லாள்சுந்தரிக்கும்
மைந்தருக்குமிட்டு மாதாஅமுதுண்டாள்

நால்வருஞ் சொல்வது.

அன்னநடையாளே அன்னையரேநீர்கேளீர்
வன்னக்குயிலாளே மாதாவேவிடைதாரும்
ஆச்சிமார்தேடாமுன் அனுப்புமம்மாயெங்களையே
அப்படியேயாகுதென்று ஆச்சிசுபத்திரையும்
அடிசில்சமையுமென்றாள் அழகானசுபத்திரையும்
அப்படியேயாகுதென்று ஆயிரந்தோழிமார்
தோழிமாரோடிவந்து சுபத்திரைக்குதெண்டனிட்டார்

அடிசில்சமைத்துவந்தோ மாச்சியெனப்பணித்தார்
மக்களைசேரவைத்து மாதாவமுதுமிட்டாள
அமுதுண்டபற்பாடு ஆரிழையாரோடிவந்து
கைக்குநீர்வார்த்தாள் கலசத்தின்முலையாள்
வெற்றிலைக்கற்பூரம் வேண்டும்படியளித்து
மக்களே நீங்களிப்போ மாளிகைக்குபோய்வாரும் [மூன்
என்று-வாழ்த்திவிடைகொடுத்து வழிவிட்டனுப்பலுற்
அபிமன்னனோடிவந்து அண்ணர்களைதெண்டனிட
தெண்டனிட்டதம்பியரை தீவிரமாய்த்தானெடுத்து
வாயாரவாழ்த்தினார் மன்னவர்கள்மூவரும்
கொம்பனையாள்சுந்தரியும் கொழுநர்க்குதெண்டனிட
புத்திமதியுரைத்து பொற்கொடியேதில்லுமென்றார்
அங்கேவிடைகளபெற்று அலைகங்கைதன்னுடர்
காடுகடந்து கடுகெனவேவாரூர்கள்
தங்கள்தங்கள்வீட்டகத்தே தார்வேந்தர்போய்சேர்ந்தார்
ஆச்சுபத்திரையு மபிமருஞ்சுந்தரியும்
ஆனைகுந்திட்டணத்தி லாயனருளாலே
வாழ்ந்துமிருந்தார்கள் வையகத்தோர்தான்மகிழ
அபிமன்னன்மாலைதன்னை யன்பாகயச்சிலிட
புவிமன்னரெல்லோரும் போதமிகப்படிக்க
குற்றங்கள்வாராமல் குறையொன்றும்நேராமல்
இக்கதையைபடித்தவர்க ளின்பமுடன்வாழி
ஆதிபரமசிவ னடியார்மிகவாழி
சோதிதிருமால் தொல்லுகிலேவாழி
வாழிவாழியென்று வரமளித்தாரீஸ்வரனார்

விருத்தம்.

மன்னவர்வாழி மறையவர்தானும்வாழி
தென்னவர்வாழி சிவனடியார்கள்வாழி
மன்னவர்வாழிவாழி மாதுசுந்தரியும்வாழு
உன்னிதஞ்செய்யுமாய னிருபதம்வாழிவாழி

அபிமன்னன் சுந்தரிமாலை.

முற்றிற்று.

